ஸ்ரீ

# ஜோதிஷ பாவத்திரய நிர்ணயம்

இது
ஓரத்தி-பத்தங்கி. கிருஷ்ணமாசாரியர் குமாரர்
ஸ்ரீ தேவகேரள ஜோதிஷம்
O. P. லக்ஷ்மி நரஸிம்மாசாரியர் அவர்களால்
எழுதப்பட்டது.

சென்னை, "ஆனந்தபோதினி" பத்திராதிபர்
நா. முனிசாமி முதலியாரவர்களால்
வெளியிடப்பெற்றது.

---

1951

...ட்டு
...ண்பர்
...எனது
காபி ரிஜிஸ்டர்ட்]  [விலை ரூ. எனக்கு

# முன்னுரை

கடவுளின் சிருஷ்டியிலுள்ள சகல ஜீவராசிகளிலும் மிகச் சிறந்தது மானிட ஜன்மமே. இப்படிப்பட்ட மானிட ஜன்மத்தில் பிறத்த லரிது. அதிலும் கூன், குருடு, செவிடு, நொண்டி, முடம் முதலியன இல்லாமல் பிறத்தலரிது. அப்படிப் பிறந்தும் சிலர் வெகு சுகமாக கஷ்ட மென்பதையே யறியாமலும், பலர் சுகமின்றிக் கஷ்டத்தையே அனுபவித்தும் சிலர் நடுநிலைமை யாய் வாழ்ந்தும் வருவது சகஜமாக இருக்கிறது. இதற்குக் காரண மாய் அவரவர்களின் பூர்வ ஜன்ம கர்மானுகுணமான பலனைத்தான் இந்த ஜென்மத்தில் அடைகிறார்கள் என்று சொல்லலாம். அப்ப டிக் கூறுவது பொருந்தாது. ஏனெனில் இந்த பூர்வஜன்ம கர்மங் களையும் அவற்றின் பலனையும் இனி வரப்போகும் பலன்களையும் தற்காலம் நடப்பதையும் ஆகிய முக்கால பலன்களையும் (சுபாசுப பலன்களை) நிதரிசனமாகக் காணும்படியாக, அனேகவிதமாக, சூரியன் முதலான தேவதைகளும் வஸிஷ்டர் முதலிய மகரிஷிகளும் மற்றும் பல மகான்களும் பற்பல ஜோதிட கிரந்தங்களை உலகிற்கு உபகாரமாக சுலபமாகவும் கடினமாகவும் வெகுவாக வடமொழிக் கிரந்தங்களை(யே) இயற்றி யிருக்கின்றனர். அப்படிப்பட்ட அரு மையான ஜோதிட கிரந்தங்களில் உள்ள வெகு ரகசியங்கள் உலகிற் குப் பயன்படாமலும் தங்களுக்கும் யாதொரு பிரயோஜனமு மின் றியும் சிலர் சிலவற்றை வைத்துக்கொண்டிருக்கின்றனர். இப்படிப் பட்ட அருமையான நூல்களில் பலவற்றைத் தற்போது நமது அர சாங்கத்தார் ஓரியண்டல் மானுஸ்கிரிப்பட்டு லைப்ரேரியில் சென்னை யிலும், மற்றும் பல ஊர்களிலும் லைப்ரேரிகளில் அனேகமாக கை யெழுத்துப் பிரதிகளைச் சேமித்து வைத்து அவைகளைப் போது ஜனங் களுக்கு உபயோகமாகும்படி யாதொரு செலவுமின்றிப் படிக்கவும், அவற்றிலுள்ள சாராம்சங்களை உலகத்தாருக்கு உபயோகமாகும்படி உபயோகித்துக்கொள்ளவும் உரிமை வழங்கி யிருக்கின்றனர். மேற்படி சென்னை லைப்ரேரியில் நான் சுமார் 5 வருஷங்களாக ஆராய்ச்சி செய்து சில சிறந்த ஜோதிஷ நாடிக் கிரந்தங்களை வெகு கஷ்டப்பட்டு நகல் எடுத்தும், மற்றும் சில பொதுக் கிரந்தங்களை எனது நண்பர் களிடமிருந்தும் சேமித்து வைத்துக்கொண்டும், அதனுடன் எனது ஆசாரியரிடமிருந்து பெற்றுக்கொண்டவைகளாலும், எனக்கு

ஜோதிஷத்தில் உள்ள சுமார் 20 வருஷ அநுபவத்தினுலும், மேற்படி ஆராய்ச்சியில் லைப்ரெரியில் வெகு கிரந்தங்களைச் சோதித்து அதனுலும், ஆனந்தபோதினி பஞ்சாங்க ஆசிரியர் C. G. ராஜன் B. A. அவர்களால் வெளியிடப்பட்ட ஜாதக ராஜ மனோரஞ்சிதம் மலர் 1, 2 இவைகளுக்குத் தேவையான விஷயங்களைத் தேடிச் சம்ஸ்கிருதத்திலிருந்து மொழிபெயர்த்துக் கொடுத்து அப் புஸ்தகங்கள் வெளியாகும்வரை உதவிபுரிந்த வகையில் ஏற்பட்ட விசேஷ அநுபவத்தினுலும் இன்றைய உலகிற்குப் பிரதானமான சில புத்தகங்களை எழுதி வெளியிடத் துணிந்து வெகு இன்னல்களுக் கிடையில் வெகு கஷ்டப்பட்டு 'ஜோதிட பாவத்திரய நிர்ணயம்' என்னும் இப் புத்தகத்தை முதன் முதலாக வெகு எளிதில் யாவரும் அறிந்து கொள்ளும்படி எழுதலானேன். ஆதலால் அறிஞர்கள் யாவரும் இதிலுள்ள குற்றங்குறைகளை நீக்கிக் குணத்தைமட்டும் கிரகிக்கும்படி வேண்டிக்கொள்கின்றேன்.

நிற்க, மானிட ஜன்மத்தில் பிறந்த ஒவ்வொருவருக்கும் உலகில் முக்கியமாக அடியிற்கண்ட மூன்று விஷயங்கள் தான் வெகு அவசியமானவையாகும். அவையாவன, முதலாவது ஜீவித்திருக்கும் வரையில் குடும்ப வாழ்க்கையை நடத்த சம உரிமையுள்ள மனைவி, 2-வது ஜீவனம் செய்வதற்கு ஒருவித தொழில் அல்லது ஒரு வழி, 3-வது தம் ஆயுட்காலம் ஆகிய இம் மூன்றுமேயாம். முதலாவதாக, ஜாதகங்களில் ஏழாமிடமே விவாகம், புருஷன் மனைவி இவர்களின் வகழ்க்கையின் அன்னியோன்னியம் இவைகளை உணர்த்தும் ஸ்தானமாகும். ஏனெனில் ஒவ்வொரு குடும்பத்திலும் குடும்ப வாழ்க்கையை நடத்த ஸ்திரீகள் தான் பிரதானம். 'இல்லாளகத்திருக்க இல்லாத தொன்றில்லை' என்பதற் கேற்ப ஸ்திரீகள்தாம் கிரகலக்ஷ்மீ எனவும், ஸகதர்மிணீ எனவும், தர்மபத்னீ எனவும், கிரகிணீ எனவும் சொல்லப்படுகின்றனர். இப்படிப்பட்ட ஸ்திரீகளின் அமைப்பானது அவரவருடைய விதிப்படி தான் அமையும் என்றாலும், அவ் விதியை நிர்ணயிக்க முன் சொல்லியபடி அருமையான ஜோதிட நூல்களிருப்பதால் அவற்றின்உதவியைக்கொண்டு நன்கு ஆராய்ந்தறிந்து விவாகம் செய்வதுதான் மிகவும் மேன்மையாகும். ஆயினும் ஜாதகமே பாராமல் விவாகம் செய்து சில குடும்பங்கள் வெகு மேன்மையாயிருந்து வருவதும், ஜாதகம் பார்த்து விவாகம் செய்து சில குடும்பங்கள் சுக மென்ப

தையே அறியாது ஒற்றுமையின்றித் தவிப்பதும் சில, பலவாறாக இருந்து வருவதும் பிரத்திசனமா யிருக்கிறது. இவற்றின் காரண மென்னவெனில் நம் நாட்டில் ஜோதிஷத்தில் போதுமான ஆராய்ச்சி யின்றிப் பலர் ஜோதிஷப் பலன்கள் சொல்வதும், விவாக காலத்தில் பெற்றோரால் கொண்டுவரப்படும் ஸ்திரீ, புருஷ ஜாதகங்களை நன்கு பரிசீலனை செய்து அவற்றின் ஒற்றுமை, ஆயுள், யோகம் இவைகளை நன்கறிந்து அவற்றின் பலனைச் சொல்லச் சக்தியற்றோ, சாத்திய மற்றோ, திறமையற்றோ பலனைச் சொல்வதும் காரணமாகும் என்று பலர் முறையிடுவதன் மூலம் நன்கு தெரிகிறது. இப்படி அவர்கள் சொல்லும் பலன்களால் வெகு குடும்பங்கள் (ஸ்திரீ புருஷர்கள்) தங்கள் வாழ்க்கை கெட்டுச் சீர் குலைந்திருப்பதும் சான்றாகும். இதற்கேற்ப அங்காரக தோஷமென்று சொல்லிச் சிலர் நல்லவைகளை விலக்கியும் ஏதோ காலபேதத்தினால் கெட்ட ஜாதகங்களை ஒன்று சேர்த்தும் விவாகம் செய்து விடுகின்றனர். இப்படி அறியாமையால் செய்யும் தீர்க்காலோசனை யற்ற செய் கைகள் பின்னால் வருந்தச் செய்கின்றன. இவ் விஷயங்களில் செய்வாய் தோஷம் அல்லது அங்காரக தோஷம் என்பது பலமானதே என்றால் செவ்வாயைத் தவிர்த்த மற்ற கிரகங்களின் எவருக்குமின்றி இவ்வொரு செவ்வாய்க் கிரகத்திற்கு மட்டும்தான் மேற்படி தோஷம் உண்டு என்று சொன்னால் அது எவ்விதம் ஒப்பத்தகுந்ததாகும்? அன்றியும் செவ்வாய் தவிர மற்ற கிரகங்கள் தார நாசத்தைச் செய்வ தில்லையா? அவர்கள் மேற்படி தோஷத்தைச் செய்ய சக்தியற்றவர் களா? அப்படியானால் மேற்படி செவ்வாய் தவிர மற்ற எட்டு கிரகங் களும் தார நாசத்தைச் செய்வதில்லை யென்றோ, செய்யச் சக்தியற்ற வர்களென்றோ, அவர்களால் நேரிடுவதில்லை என்றோ நிரூபணம் செய்ய முடியுமா? என்கிற கேள்வி உடனே எழுவதற்கு இட முண் டாகிறது. இவ்விதக் கேள்விகளுக்குரிய பதிலை சப்தம பாவத்தில் செவ்வாய் தோஷ சமாதானம் என்னும் முதல் அத்தியாயத்திலும் மற்றும் ஏழாம்பாவப் பலன் என்னும் அத்தியாயத்திலும் சந்தேக மறத் தெளிந்துகொள்ளலாம். மேலும் முதலில் பெற்றோர்கள் விவாகத்திற்கென ஸ்திரீ புருஷ ஜாதகங்களைப் பரிசீலனை செய்யும் போது நன்கு ஜோதிஷங் கற்று, ஆராய்ச்சியும், அனுபவமும் உள்ள தைவக்ஞரிடம் அணுகி, அவற்றின் ஆயுள் ஒற்றுமை யோகம் இவை களைப் பொருத்தமாக உடைய ஜாதகங்களையே சேர்த்து விவாகம் செய்வித்தால் கூடியவரை ஸ்திரீகள் பாலியத்தில் விதவைகளாவ

தும் புருஷர்கள் தாரத்தை இழந்து விடுவதும் ஒருவாறு தடுக்கப் படலாம். ஏனெனில், ஒரு ஸ்திரீயின் ஜாதகத்தைப் பரிசீலிக்கும் போது (சமீபகாலத்திலேயே) மேற்படி ஸ்திரீ வைதவ்வியத்தை யடையக் கூடுமென்றோ, புருஷ ஜாதகத்தில் புருஷன் இப்படியே மனைவியை இழந்துவிடுவானென்றோ காணப்படின் அப்படிப்பட் டவைகளை அது எப்படிப்பட்டதாயினும் பண்டிதர்களும் பெற்றோ ரும் விலக்கிவிடுவதுதான் நன்மை பயக்கும். பண்டிதர்களும் பழிக்காளாகாமல் இருக்கக்கூடும். அவர்களும் நன்மை யடைய ஹேதுவாகும். அப்படிக்கின்றி தாக்ஷிண்யத்தாலோ வேறு விதத் தாலோ பொருத்தமற்றவைகளைச் சேர்த்தால் வீண் பழிக்கு ஆளாக நேரும். இதற்குப் பண்டிதர்களின் மனச்சாக்ஷியும் நேர்மை யாக இருக்கவேண்டும். பண்டிதர்கள் நேர்மையா யிருந்து ஒரு வாறு விலக்கிவிட்டாலும் சில பெற்றோர்கள் இக் காலத்திலும் தங்கள் ஜாதிமதக் கோட்பாடுகளைக் காட்டி அதன் விதி அப்படி யிருந்தா லப்படியே நடக்கட்டுமென்று சொல்லிச் செய்கின்றனர். அப்படிச் செய்து பிறகு வருந்துவதை விலக்க எண்ணியே ஒவ் வொருவரும் தாமாகவே அறிந்துகொள்ளச் சாத்தியமாகும்படி இது எழுதப்பட்டது.

நிற்க, மேற் கூறியதைப் போலவே தசம பாவமும் அதாவது ஜீவன பாவமும் முக்கியமாகும். உலகில் ஒவ்வொருவரும் ஜீவிக்க ஓர் தொழில் செய்தல் அவசியமாகிறது. இது விஷயமாக நீதி சாஸ் திரத்தில் சுயார்ஜிதத்தால் ஜீவனம் செய்வது உத்தமம் என்றும், பிதுரார்ஜித திரவியத்தினால் ஜீவனம் செய்வது மத்திமம் என்றும், சகோதரனின் திரவியத்தினால் ஜீவனம் செய்வது அதமம் என் றும்,ஸ்திரீ திரவியத்தினால் ஜீவனம் செய்வது அதமாதமம் என்றும் திருடிப் பிழைப்பதைவிட மரித்தலே மேலென்றும் கூறப் பட்டிருக்கிறது. ஆகையால் சுயார்ஜிதமே மிக உத்தம ஜீவன மென்றும், பயிர் செய்தும் வியாபாரம் செய்தும் ஜீவித்தல் மத்திம மென்றும் சேவகத் தொழில் செய்வது அதமம் என்றும் குலத் தொழிலைச் செய்து ஜீவித்தல் உத்தமம் என்றும் கூறப்பட்டுள்ளது. இவை, பொதுவானதாதலால் தற்காலத்திற் கேற்றவாறு உலகில் தினம் தினம் புதுப் புதுத் தொழில்கள் விருத்தியாகின்றன வென்றும் அவைகள் எல்லாம் எந்த சாஸ்திரத்திலும் விவரிக்கப் படவில்லை யென்றும் மனிதன்தான் தொழிலை நிர்ணயிக்க வேண்டு மென்றும் தெரிகிறது. சில தொழில்கள் தாம் ஜோதிட சாஸ்திரத்

தில் சொல்லப்பட்டிருக்கிறதே யன்றி, ஒவ்வொருவரும், இன்னின்ன தொழில்தான் செய்யவேண்டுமென்று நிர்ணயிக்காமல் பொதுவாகச் சொல்லி யிருக்கிறபடியால் இன்ன தொழிலைச் செய்யுங்கால் இன்னுர் மூலமாகத் திரவிய சம்பாதனை செய்யலாம் என்பதைத் தாங்கள் தாங்களே நிச்சயித்து அதன்படி நடந்துகொள்ள இதனுல் காலமும் வயதும் தொழிலும் நிர்ணயிக்கப்படுகிறது. இதன்படி நடந்துகொள்வது உசிதமாகும். இவை நம் நாட்டு விஷயமாகும். இங்கு மேனுட்டினரைப்போல் விதவிதமான தொழில்கள் இத்தேசத்தில் செய்வதுபற்றி விஞ்ஞானி என்றும், யந்திரி என்றும் கூடமாகச் சொல்லப்பட்டிருக்கிறதே யன்றித் தெளிவாகக் கூறப்படவில்லை. ஆதலால் நாம் மேலே கூறியபடி கோடிக்கணக்கினுள்ள தொழில்களை நவக்கிரகங்களை மட்டும் கொண்டே நிர்ணயிக்கவேண்டியிருப்பதால், அப்படி நிர்ணயிக்கத் தக்க சக்தியும் அறிவும் உள்ள மகான்கள்கூட அவ்வழிகளைக் கண்டுபிடித்து நடந்துகொண்டதாகத் தெரியவில்லை. அப்படி ஒரு சமயம் அவர்கள் கண்டுபிடித்து நடந்துகொண்டிருந்தாலும் அவ்வழிகள் தற்காலத்தில் நம் நாட்டில் எந்தக் கிரந்தத்திலும் இருப்பதாகவும், எவரிடத்தும் அக்கிரந்தங்கள் இருப்பதாகவும் தெரியவில்லை. ஆகையாலும் முன் சொல்லியபடியே மூலக்கிரந்தங்களினுள்ளபடியே உள்ளதைமட்டும் மொழிபெயர்த்திருப்பதால் இதினுள்ள கிரக காரகங்களில் சொல்லியபடியும் கிரக ஜாதியானுகுணமாகவும் தொழிலைச் செய்து வந்து தனம் தேட இப் புத்தகம் மிக்க உதவியாயிருக்கும். மேலும் இது புதுத் தொழில் செய்பவர்களுக்குக் காலத்தையும், வயதையும், தேசத்தையும், குறிப்பதாலும் ஒரே தொழிலில் சிற்சில வழிகளில் பேதப்பட்டோ பேதப்படாமலோ சிலர் லாபம் சம்பாதிப்பதும் வெவ்வேறு வழிகளில் பலர் சம்பாதிப்பது(ம்) (விருத்தியாகி நஷ்டமடைவதும்) மேலும் மேலும் விருத்தியாவதும் அதிர்ஷ்ட பூர்வமான தாதலால் இது னுதவியால் தமக்குப் பொருத்தமான தொழிலைத் தாமே தேடி நிர்ணயித்து அதன் மூலம் தான் கோரிய பலனையடைய இது பெரிய உபகாரமா யிருக்கும் என்பதையும் மிகவும் வணக்கத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

மூன்ருவதாகச்சொல்வது:—

உலகில் பிறந்த சகல ஜீவராசிகளுக்கும் ஒரு க்ஷணமேனும் ஆயுளுண்டு என்பது சகலரும் அறிந்த விஷயமே. புல், பூண்டு,

செடி, கொடி, மாம் முதலியவைகளுக்கும் பக்ஷி, மிருகம், ஈ, எறும்பு முதலிய 84 லக்ஷ யோனி பேதங்களுக்கும் ஆயுளுண்டாகினும் அவற்றின் கால அளவு காணமுடியாததா யிருக்கின்றது. இந்த ஆயுள்தான் ரகசியத்திலும் பரம ரகசிய மாகும். மேற்கூறிய பிறப்பு (ஜன்மம்) ஏற்பட்டதும் மாணம் என்பது எந்த நேரத்திலும் காத்துக் கொண்டிருக்கிறது. ஆனல் அதன் காலம் தெரியாமல் காரணம் மட்டும் தெரிகிறது. மாணத்திற்கு வியாஜமுண்டே யொழியக் காலமில்லை. எக்காலத்திலும் எந்த நேரத்திலும் எதிர்பாராமல் எச் சமயத்திலும் திடீரென்றும் ஏற்படக்கூடும். மாணத்திற்கு ஏதாவது ஒரு வியாஜமுண்டாகி அதன் மூலம் பழி ஏற்பட்டு உயிரின் பிரிவானது ரகசியமாகவே நேரிடுகின்றது. இதை யறியத் தெள்ளிய மார்க்கங்கள் ஒன்றும் இன்று கிடையாது என்றே கூறலாம். ஆயினும் இந்த ஜோதிடக் கிரந்தங்களால் ஒருவாறு அறிய மகான்களான ரிஷிகள் செய்திருக்கும் கிரந்தங்கள் சில இருப்பினும் அவற்றின்படி அறியவோ நடக்கவோ முடியாத காரியமா யிருக்கின்றது. மகரிஷிகளின் மார்க்கங்களால் ஒருவாறு அறிய முடியலாமென்றாலும் அதற்கு அவற்றில் கூறியுள்ளபடி சரியான காலநிர்ணயங்கள் கிடைப்பதில்லையாகையாலும் கிடைத்தவற்றைக் கொண்டு ஆயுளை அறிவதால் தப்பிதமாகும் என்றும் உண்மையாய்த் தெரிகிறது. இப்படி யிருக்கும் ரகசியத்தை யறிய ஸ்ரீ வாாகமிகிரர் செய்திருக்கும் பிருஹத் ஜாதகப்படியும், பராசாார் செய்யப்பட்ட பராசர ஓரையின்படியும், அதாவது லக்கினயுர்த்தாயம், அம்சாயுர்த் தாயம், பிண்டாயுர்த்தாயம், நைஸர்க்கிக ஆயுர்த்தாயம், கிரக ஆயுர்த்தாயம் இவைகளும் மந்திரேசுவார் என்பவரால் பல தீபிகை யில் சொல்லப்பட்டபடி அஷ்ட வர்க்காயுர்த்தாயமும் அறிய வேண்டியவைகளாகும். அப்படிச் செய்வதற்குச் சரியான சுத்த மான கிரக ஸ்புடங்கள் தேவையாகும். இவற்றைத் தற்காலம் செய்யக்கூடியவர்கள் வெகு சிலரே யன்றி எல்லோராலும் செய்து விட முடியாது. அவற்றிற் கேற்பப் பஞ்சாங்கங்களும் சரியானவை களில் தப்பி ஒன்றல்லது இரண்டு இருப்பினும் அவை அனுஷ்டா னத்தில் இல்லை யென்றும் அதன்படி ஒப்ப மறுப்பதும் சகஜமாகி யிருக்கிறது. இவற்றின் காரணம் இப் பஞ்சாங்கங்கள் அக் காலங் களில் அனுஷ்டானத்தில் இல்லை யென்பதேயாம்.

ஆயுர்தாய கணிதமென்பது சாமானியமானதல்ல. அது எளிதில் அறிய முடியாததாகும். ஏனெனில் இதற்கு முதலில்

கணிதர் தெரியவேண்டும். இரண்டாவதாக ஜோதிஷமும் அறிந்திருத்தல் வேண்டும். பிறகு கிரக ஸ்புடம் செய்யச் சரியான ஜனன கால மணி, நிமிஷம் முதலியன வேண்டும். அனுபவமும் வேண்டும். அதன் பிறகு தேசாந்திர ஸம்ஸ்காராதிகள் செய்து கிரக ஸ்புடமும் ஜாதக கணனமும் செய்யவேண்டும். இவ்வாறாக, அதற்கேற்பட்ட சகலமும் ஏற்படுத்திக்கொண்டுதான் ஆயுள் நிர்ணயஞ் செய்ய வேண்டும். அல்லாமல் சரியான காலம் மணி, நிமிஷம் அல்லது நாழிகை விநாடி இவைகளின்றியும் கணிதர் தெரியாமலும் செய்ய முடியாது. இதைத்தான் அவசியம் வற்புறுத்துகின்றோம். இவற்றிற்கெல்லாம் நன்கு கற்றறிந்தவர்கள் தவிர மற்றவர்கள் செய்வது பெரும்பாலும் பிசகிப்போம்.

இப்படிப்பட்ட ஆயுளானது ஜீவராசிகள் ஒவ்வொன்றிலும் ஒரு எல்லைக்குட்பட்டு எல்லை யற்றிருக்கின்றது. அதாவது மனிதர்களுக்கும் யானைகட்கும் வயது 120வருஷமும் ஐந்து நாள்களும் பாரமாயுள் என்றும். குதிரைகளுக்கு 32 வயதென்றும், கழுதை ஒட்டகை இவைகளுக்கு 25 வருஷம் ஆயுளென்றும், எருமை, எருது இவைகளுக்கு 24 வருஷம் ஆயுளென்றும், மான், ஆடு, இவைகளுக்கு பதினாறு வருஷம் வயதென்றும், நாய்களுக்கு 12 வருஷம் ஆயுளென்றும் ஸ்ரீவராக மிகிரரும் மந்திரேசுவரரும் கூறியுள்ளனர். இந்த ஆயுளானது ஜீவராசியில் பிறந்த ஒவ்வொன்றிலும் வியாபித்திருந்து அவற்றிற்கேற்பட்ட காலம் முடிந்ததும் அதை விட்டுப் பிரிந்துவிடுகின்றது. இப்படிப்பட்ட ஆயுளானது கட்டிடங்கள்; கோயில்கள்; மனை முதலியவற்றிற்கும் உண்டானதே.

மேற்படி ஆயுளானது மூன்று பிரிவுகளை உடையது. அதாவது அற்பம், மத்திமம், பூரணம், என ஆகும். இவற்றில் ஒவ்வொன்றிலும் இதே அற்ப மத்திம பூரண மெனவும் மூன்று பிரிவினைகள் உண்டாகி மூன்றிலுமாக 9 பிரிவுகள் உண்டாகின்றன. அதைப் பற்றி விவரிப்போம்.

| | அற்பம். | | மத்திமம். | | பூரணம், |
|---|---|---|---|---|---|
| 1. அற்பத்தில் வரு | 12 | வரு | 24 | வரு | 35 |
| மத்திமத்தில் வரு | 48 | வரு | 60 | வரு | 72 |
| பூர்ணத்தில் வரு | 84 | வரு | 96 | வரு | 108 |

2. வேதமோவெனில் 'சதமானம் பவதி,' என்று முறையிடுகின்றது.

3. ஜம்புநாதீயம், ஜாதககலா (நிதி) விதி இவற்றில் 100, 120 1,000, 10,000, 30,000, 60,000, இவ்விதம் பல ஆயிரம் வருஷங்களைக் கூறுகிறது.

4. பல தீபிகையில் மொத்தம் 100ஆறு மனிதர்களுடைய ஆயுளென்றும் அதில் 8 வயது வரை பாலாரிஷ்ட மென்றும் 20 வது வயதில் யோகாரிஷ்டமென்றும் 32 அற்பாயுள் என்றும் 70 வயது மத்திமாயுளென்றும் 100 ஆறும் பூர்ணாயுள் என்றும் கூறப்பட்டிருக்கிறது. இதிலும் சிசு ஜனித்த 1 வயது வரை சத்யோரிஷ்ட மென்றும் மாதா, பிதா இவர்களின் தோஷங் காரணமாகவும், பால கிரகதோஷங் காரணமாகவும் சிசு நாசத்தை யடைகிறது என்றும், மேலும் 'ஆத்யே சதுஷ்கே ஜனநீ சிருதாகை: மத்யேச பித்ரார்ஜித பாபசங்கை: பாலஸ்த தந்த்யாசு சதுச்சரத்ஸு ஸ்வகீய தோஷை: ஸமுபைதிநாசம்" என்கிற படியும், சிசுவுக்கு 4 வயது வரை தாய் தோஷத்தால் அரிஷ்டம் நேரு மென்றும், 8 வயது வரை பிதுரு தோஷத்தால் அரிஷ்டம் நேரு மென்னும் 12 வயது வரை ஜாதக தோஷத்தால் அரிஷ்டம் நேரும் என்றும், ஆகவே, சிசுக்களுக்கு 12 வயது வரை மானிடப் பிறவியில் மட்டும் ஆயுள் நிர்ணயம் செய்வது சாத்திய மில்லையென்று வராகமிகிரரும், மந்திரேசுவரரும் கூறியுள்ளனர். அவ் வசனம் பின் வருமாறு.

"ஆத்துவதசாப்தம் நரயோனி ஜன்மநாம் ஆயுஷ்கலா நிச்சயிதும் நசக்கியதே" என்றுளது. ஆதலாலும் பன்னிரண்டு வயதை பூர்ணமாயடையும் வரை பாலாரிஷ்ட மேற்படு மென்றும், இந்த தோஷத்திற்காகவே தகப்பன் சிசுவின் பிரதி ஜன்மதாரையிலும் (சிசு பிறந்ததும் ஜோதிஷர் மூலம் நன்கு ஆயுளை விசாரித்தறிந்துகொண்டு பின்னர்) மேற்படி பன்னிரண்டு வருஷம் வரை ஜப, தபாதிகளாலும் ஆயுர் ஹோமாதிகளை செய்விப்பதாலும், சிகித்ஸையாலும் வளர்க்க வேண்டுமென்றும் கூறியுள்ளார்; பராசர ஓரையில் 24 வயது வரை ஆயுளை நிர்ணயம் செய்வது சாத்தியமில்லை யென்று கூறப்பட்டுள்ளது.

இதே ஆயுர் தாயமானது பரம சிஷ்டர்களுக்கும், பரம தரித்திரர்களுக்கும் வெகு நாள் பெருகிக்கொண்டே வருகிற தென்றும் இவர்களுடைய ஆயுர் தாய கணிதமே தவறிக்குறிப்பிட்ட கணித அளவிற் கதிகமாக நேரிடுகிற தென்றும், வராகமிகிரர்,

'கேமத்துருமே மலினதுக்கித் நீச்ச நிஸ்வா: ப்ரேஷ்யா: கலாச்ச" என்றும் கூறியுள்ளார். பொதுவாகவே, 'பாபீசிராயு:' என்கிறபடி பரமசண்டாள இருத்தியங்களை உடையவர்களும் வெகு ஆயுளை அடைகின்றனர். ஆயினும்,

"ஜந்தூனாம் பாபசீலத்வாத் அரிஷ்டம் ஜாயதே பஹூ:" என்கிறபடி அதிகம் பாபம் செய்யச் செய்ய மனிதர்களுக்கு அரிஷ்டங்களும் வெகு விதங்களாக ஏற்படுகின்றன. இப்படிப் பாவம் செய்வதாலேயே அபமிருத்துவும் நேரிடுகின்றது. இந்த அபமிருத்துவுக்கு, காலம், தேசம் முதலியன ஒன்றும் தேவையில்லை. இது திடீரென்று எதிர்பாராமல் நேரிடுவதாகும். இதில் தப்பிப் பிழைப்பதுதான் கண்டகால மென்பதாகும். இதை யறிய முடியவே முடியாதென்று உறுதியாய்க் கூறலாம்.

பொதுவில் ஆயுள் ஸ்தானம் ஜாதகங்களில் ஜன்ம லக்கினத்திற்கு எட்டாமிட மென்பது உலகப் பிரசித்தமானது. இதை அஷ்டமாதிபதியைக் கொண்டும் ஜன்மலக்கினாதிபதியைக் கொண்டும் சனியைக் கொண்டும்தான் நிர்ணயிக்க வேண்டும். நமது ஆராய்ச்சியில் கண்டதில் ஒரு சுக்கிராடியில் ஜன்ம லக்கினாதிபதி அஷ்டமாதிபதி பன்னிரண்டுக் குடையவர் இவர்களால் ஆயுளை நிர்ணயம் செய்யவேண்டும் என்றும், வேறொரு சுக்கிராடியில் ஜன்ம லக்கினாதிபதி அஷ்டமாதிபதி தசமாதிபதி இவர்களைக்கொண்டு அறிய வேண்டுமென்றும், பொதுக் கிரந்தங்களில் ஜன்ம லக்கினஷ்டமாதிபதி, ஜன்மலக்கினாதிபதி, சந்திரன் இவர்களைக் கொண்டே ஆயுளை நிர்ணயம் செய்யவேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆயுளின் விஷயம் பொதுப்படையாக இப்படி இருக்க, தற்போது வயது ஒரு ஜீவனுக்கு எவ்வளவென்பதைக் காண இன்று வழங்கிவரும் எந்தக்கிரந்தத்திலும் சரியான மார்க்கமெதுவும் இல்லையென்றே தைரியமாய்க் கூறலாம். அதற்கேற்பத் தற்காலம் பலதரப்பட்ட பஞ்சாங்கங்கள் அனுபவத்தில் இருப்பதால் இதில் சரி தப்பு எது என்பதை எவரும் ருசுசெய்யவில்லை. ஒன்றுக்கொன்று பலவித வித்தியாசம் உள்ளதாயிருக்கிறது. இப்படி உலகில் பஞ்சாங்கங்களின் நிலை ஒரு புறமிருக்க, ஜோதிட வித்துவான்களும் இப்படியே அபிப்பிராயபேதப்பட்டவர்களா யிருக்கின்றனர். இம்மாதிரி வித்தியாசமான பஞ்சாங்கங்களைக்கொண்டு ஆயுர்த்தாயம் கணித்தும், ஜாதகங்களைக் கணித்தும் ஜாதக பலனும்

சொன்னால் சொல்லுகிறவர் எவ்வளவு அறிவும் ஆற்றலும் படைத்தவராயிருந்தாலும் இப் பஞ்சாங்கங்களின் முன் ஜோதிடர்கள் எவ்வளவு தூரம் முன்னுக்கு வரக்கூடும் என்பதும் சற்று ஆலோசிக்கத் தகுந்ததே யாகும்.

பொதுவாகவே, ஜோதிஷ சாஸ்திரமே மர்மமானது. அதிலும் இந்த ஆயுர்த்தாயம் பின்னும் மர்மமானது. இவைகளைச் சனி நாடியிலும் ஸித்தாயுர்தாயத்திலும்தான் காணமுடியும். அக் கிரந்தங்களின் பெயர்கள்தான் தெரிகின்றனவே யன்றி, அக்கிரந்தங்கள் யாரிடத்திலும் எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆகையால் நாம் மேலே கூறியபடி நமது ஆராய்ச்சியிலும் முன் சொன்னபடியும் நமக்குக் கிடைத்தவற்றில் எதையும் விடாமல் இம்மூன்று பாவ விஷயமாக மூலக் கிரந்தங்களி லுள்ளபடியே எழுதுவதில் இந்த ஆயுர்பாவத்தின் முதலில் பாலாரிஷ்டம், நக்ஷத்திர கண்டம், முதலியவற்றை விவரித்துவிட்டுப் பிறகு ஆயுர்தாயத்தை எழுதுகிறோம். ஆதலால் இதனால் வெகு எளிதில் அறிய முடியாத ஆயுளைத் தாமே ஒவ்வொருவரும் பிறருடைய உதவி இன்றித் தம் ஆயுள் இவ்வளவுதான் என்பதை நிர்ணயம் செய்துகொள்ளவும், தனக்கு இவ்விதமான தாரம், இத்தனை தாரம், இன்ன திக்கில், இன்ன காலத்தில், இன்ன காரணத்தால் ஏற்படுமென்று தெரிந்துகொள்ளவும், தனக்கு இவ்விதமான தொழிலைச் செய்தால், அதன் மூலம்தான் இவ்வளவு சம்பாதனையை, இன்ன காலத்தில் இன்னார் மூலமாக இன்ன திக்கில் இன்ன தெசையில் அடையலாம் என்று நிர்ணயம் செய்து கொள்ளவும், இப்புத்தகம் பெரிதும் உபகாரமாக இருக்கும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை என்பதை வெகு பணிவுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு,

சென்னை: } ஸ்ரீ தேவகேரள ஜோதிஷர்,

21—8—1941. } ஓ. ப. லக்ஷ்மீ நரஸிம்மாச்சாரியர்.

# நாம நக்ஷத்திரத்தினால்

# பலனைக் காணும் வழி

ஜோதிஷத்திற்கே சந்திரன்தான் பிரதானம், சந்திரனின் ஸ்திதியால்தான் சகல பலன்களையும் அறிய வேண்டும். சந்திரனின்றி அறியப்படும் பலன்கள் அவ்வளவு முக்கியமாகாது. சந்திரனின் தின கெதியை எந்த நக்ஷத்திரத்தில் எந்தப் பாதத்தில் (தேவையான காலத்திற்கு எந்தக் கலையில்) இருக்கிறாரென்று பஞ்சாங்கங்களால் அறியலாம். நவக்கிரகங்களும் சஞ்சரிக்கும் நக்ஷத்திரம் இருபத்தேழு; அவை மேஷம் முதலாக மீனம் வரையுள்ள பன்னிரண்டு ராசிகளுக்கும் இராசி ஒன்றுக்கு இரண்டே கால் நக்ஷத்திரம் எனவும், நக்ஷத்திரம் ஒன்றுக்கு நான்கு பாதம் எனவும், ஒன்பது பாதம் அடங்கியது ஒரு ராசி யெனவும், பன்னிரண்டு ராசிகளிலும் இருபத்தேழு நக்ஷத்திரங்களும் அவற்றின் மொத்த நூற்றெட்டுப்பாதங்களும் அடங்கியிருக்கின்றன.

இப் புத்தகத்தில் சந்திரன் இன்ன ராசியில் இன்ன பாதத்தில் இருந்தால் என நக்ஷத்திர ரீதியாகவும், நக்ஷத்திர பாதரீதியாகவும் பலனெழுதப்பட்டிருப்பதால், அதை யறிந்திருப்பவர்களும் அறியாதவர்களும் கூடச் சுலபமாக அறிந்துகொள்ளக் கூடியபடியும் இந்தப் பாதம் தரப்பட்டது. மேலும் தெசை புக்திகளைப் பொருத்தியும் பலன் எழுதியிருப்பதால் இது சகலத்திற்கும் உதவியாகும்.

இதிற் காட்டியபடியே ராசிகளும், ராசிக்கதி பதிகளும், எக்காலத்திலும், எக்காரணத்தாலும் மாறுதலடையாது.

| | | | |
|---|---|---|---|
| மீனம் உபய ராசி குரு | மேஷம் சர ராசி செவ்வாய் | ரிஷபம் ஸ்திர ராசி சுக்கிரன் | மிதுனம் உபய ராசி புதன் |
| கும்பம் ஸ்திர ராசி சனி | | | கடகம் சர ராசி சந்திரன் |
| மகரம் சர ராசி சனி | | | சிம்மம் ஸ்திர ராசி சூரியன் |
| தனுசு உபய ராசி குரு | விருச்சிகம் ஸ்திர ராசி செவ்வாய் | துலாம் சர ராசி சுக்ரன் | கன்னி உபய ராசி புதன் |

இது உலகத்துப் பொதுவானதும்.

## நாம நக்ஷத்திர (பாத விவரமும்) அக்ஷரங்களும்

| நக்ஷத்திரம் | பாதங்கள் 1 2 3 4 |
|---|---|
| அசுவனி ... | சு-செ-சொ-ல |
| பரணி ... | லி-லு-லெ-லொ |
| கார்த்திகை ... | அ-இ-உ-எ |
| ரோகணி ... | ஒ-வ-வி-வு |
| மிருகசீரிஷம் | வெ-வொ-க-கி |
| திருஆதிரை | கு-க்க-ங-ச்ச |
| புனர்பூசம் ... | கெ-கொ-ஹ-ஹி |
| பூசம் ... | ஹு-ஹெ-ஹொ-ட |
| ஆயிலியம் ... | டி-டு-டெ-டொ |
| மகம் ... | ம-மி-மு-மெ |
| பூரம் ... | மொ-ட-டி-டு |
| உத்திரம் ... | டெ-டொ-ப-பி |
| அஸ்தம் ... | பு-ஷ-ண-ட்ட |
| சித்திரை ... | பெ-பொ-ர-ரி |
| சுவாதி ... | ரு-ரெ-ரொ-த |
| விசாகம் ... | தி-து-தெ-தொ |
| அனுஷம் ... | ந-நீ-நு-நெ |
| கேட்டை ... | நொ-ய-யி-யு |
| மூலம் ... | யெ-யொ-ப-பீ |
| பூராடம் ... | பு-த்த-ப்ப-ட்ட |
| உத்திராடம் | பெ-பொ-ஜ-ஜி |
| திருவோணம் | கி-கு-கெ-கொ |
| அவிட்டம் ... | க-கி-கு-கெ |
| சதையம் ... | கொ-ஸ-ஸி-ஸு |
| பூரட்டாதி ... | ஸெ-ஸொ-த-தி |
| உத்திரட்டாதி | து-ச-ச்ச-த்த |
| ரேவதி ... | தெ-தொ-ச-சி |

**ராசிகளினுள்ளடக்க விளக்கம்**

மேஷம்—இதில் அசுவனி 4 பாதம், பரணி 4-பாதம், கிருத்திகையின் முதற்பாதம் ஆக ஒன்பது பாதமும்.

ரிஷபம்—இதில் கிருத்திகையின் 2, 3, 4-வது பாதங்களும், ரோகிணி 4-பாதம், மிருக சீரிஷத்தின் 1, 2-வது பாதம் வரையும் ஆக 9 பாதமும்.

மிதுனம்—இதில் மிருக சீரிஷத்தின் 3, 4-வது பாதமும், திருவாதிரையின் 4-பாதமும், புனர் பூசம் 1, 2, 3-பாதம் வரையும் ஆக 9 பாதமும்.

கடகம்—இதில் புனர்பூசம் 4-வது பாதமும், பூசம் 4-பாதம், ஆயில்யம் 4-பாதமும் ஆக 9 பாதமும்.

சிம்மம்—இதில் மகம் 4-பாதம், பூரம் 4-பாதம், உத்திரத்தின் முதற்பாதம் ஆக 9 பாதமும்.

கன்னி—இதில் உத்திரத்தின் 2, 3, 4-வது பாதமும் ஹஸ்தம் 4 பாதமும் சித்திரையின் 1, 2-வது பாதமும் ஆக 9 பாதமும்.

துலாம்—இதில் சித்திரையின் 3,4-வது பாதமும், சுவாதி 4 பாதமும், விசாகம் 1,2,3-வது பாதம் வரை ஆக 9 பாதமும்.

விருச்சிகம்—இதில் விசாகம் 4-வது பாதமும், அனுஷம் 4 பாதம், கேட்டை 4 பாதம் ஆக 9 பாதமும்.

தனுசு—இதில் மூலம் 4 பாதம், பூராடம் 4 பாதம், உத்திராடம் 1-வது பாதம் ஆக 9 பாதமும்.

மகரம்—இதில் உத்திராடத்தின் 2, 3, 4-வது பாதமும், திருஓணம் 4 பாதம், அவிட்டத்தின் 1, 2, வது பாதம் ஆக 9 பாதமும்.

கும்பம்—இதில் அவிட்டத்தின் 3, 4-வது பாதமும், சதயம் 4 பாதமும் பூரட்டாதி 1, 2, 3-வது பாதம் வரையும் ஆக 9 பாதமும்.

மீனம்—இதில் பூரட்டாதியின் 4-வது பாதமும், உத்திரட்டாதி 4 பாதமும், ரேவதி 4 பாதமும் ஆக 9 பாதமும் அடங்கியுள்ளது.

இந்த நாமநக்ஷத்திர வழியாலும் தம் பலனை யறிந்து கொள்ளச் சிலருக்கு இது உபயோகமாகும்.

---

ஸ்ரீ ரஸ்து

# ஜோதிஷ பாவத்திரய நிர்ணயம்

## ஸப்தமபாவம் அல்லது களத்திரபாவம்

### செவ்வாய் தோஷ சமாதானம்

அங்காரக தோஷம் அதாவது செவ்வாய் தோஷமென்பது ஒன்றுண்டு என்றும், அதனல் தாரநாசம் நேரிடுகிறதென்றும், பலர் கொள்கையும் சில ரிஷிகளின் மதமுமாக இருக்கிறது என்றும் மேற்படி தோஷத்திற்குப் பரிகாரங்களும் சில சொல்லப் பட்டிருப்பதாகவும் தெரிகிறது அப்படிப்பட்ட அங்காரக தோஷமென்பதுண்டானல் அது கேவலம் தார நாசத்தை மட்டும் செய்யச் சக்தியுடையதாகுமா? இன்னும் ஏதாவது வேறு (பல)வித தோஷங்களும் செய்யச் சக்தி வாய்ந்ததாக ஆகுமா? அப்படியானல் ஷை தோஷ ஸ்தானங்களாகக் கருதப்படுகிற 2, 12, 4, 7, 8 ஆகிய ஸ்தானங்கள் எல்லா லக்கினங்களுக்கும் தோஷ ஸ்தானங்களாகவே ஆகுமா? அல்லது மாறுபாடுடைய தாகுமா? அப்படியானல் எந்த எந்த லக்கின ஜாதகங்களுக்கு எங்கெங்கிருந்தால் எவ்வெப்போது என்னென்ன பலன்கள் சேரிடும்? அவைகள் என்னென்ன வென்பது சொல்லப்பட் டிருக்கிறதா? ஸ்திரீ புருஷ ஜாதகங்களில் செவ்வாய்க்குத் தோஷ மென்று கூறப்பட்ட ஸ்தானத்தில் அல்லது ஒரே ஸ்தானத்தில் அல்லது ஒன்றுக்கொன்று வித்தியாசப்பட்ட ஸ்தானங்களில்

---

முக்கிய குறிப்பு:—ஜாதகங்களில் துவாதசபாவங்க ளிருக்கிறபடியால் ஷை துவாதசபாவாதிபதிகளை இங்கு இப்புத்தகத்தில் ஸ்தானுதி என்றும், ஸ்தானுதிபதி என்றும், ஸ்தானத்திற் குடையவரென்றும் சுருக்கிக் கூறியிருக் கிறபடியால் இப்படிக் குறிப்பிட்டிருப்பதைக் குற்றமாகக் கொள்ளாமல் ஜன்ம லக்கினம் முதல் அந்தந்த ஸ்தானத்திற்குடையவராகவே கொள்ளும்படி சகலரையும் வணக்கத்துடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

செவ்வாயிருந்தா (லும்) ல் அப்போது பலன்கள் ஒன்றுகவோ வித்யாசமாகவோ நடக்கின்றதா? நடக்குமா? என்பது முக்கிய கேள்வியாகிறது.

ஆகையால் ஷை தோஷ விஷயத்தில் லக்கின, கிரக, ஸ்தான ஆதிபத்திய குண குணம் இவைகள் வெவ்வேருக ஆனாலும், ஷை தோஷத்திற்கு ஸ்தானமே பிரதானமாக ஆகுமா? அல்லது ஸ்திரீ புருஷர்களின் ஜாதகங்களில் ஒரு ஜாதகத்தில் ஷை தோஷ மென்று சொல்லப்படுகிற ஸ்தானத்தில் ஷை தோஷ கிரக மிருந்து, (அவைகள் வெவ்வேறு தோஷ ஸ்தானங்களாக) அதாவது ஒன்றில் 2லும் மற்றென்றில் 4லுமாக இருந்தாலும் அல்லது இப்படிப்பட்ட வேறு வித்தியாசமான ஸ்தானங்களாக ஆனாலும் பலன்கள் ஒன்றுகவோ அல்லது வித்தியாசமாகவோ நேரிடுமா? ஒரே விதமாக நேரிடுமா? இவை சதிபதிகளின் ஒற்றுமையைக் குலைக்குமா அல்லது (ஒருவருக்கு) மாணத்தையே செய்யுமா? அப்படிச் செய்யுமானுல் எந்த எந்த ஜாதகங்களில் எங்கெங்கிருந்தால் எப்போது மேற்படி பலன் நேரிடும், எப்படி யிருந்தால் பொருந்தாது, நேரிடாது என்பதையும் தீர ஆலோசித்துப் பலனைச் சொல்லவேண்டும் ஏனெனில் ஜாதகங்களின் ஏழாமிட மானது சதிபதிகளின் வாழ்க்கையை வெகு அன்னியோன்னியமாக வாழ வைக்கவோ அல்லது அதற்கு மாருக இருவரையும் மீளாத் துயரத்தில் ஆழ்த்திவிடவோ, அல்லது சதிபதிகளைப் பிரித்து விடவோ, ஸ்திரீகளை விதவையாக்கவோ, புருஷனை மனைவியை இழக்கச் செய்து அல்லது விவாகமில்லாதவனுகச் செய்துவிடவோ அல்லது இருவரையும் விவாகமான பின்பு தேச சஞ்சாரியாகச் செய்துவிடவோ, அல்லது மாரகத்தையே செய்துவிடவோ சக்தி யுள்ளதாகும். ஆதலால் இதைப்பற்றி ஆலோசிக்கவேண்டியது அவசியமாகும். மேலும் இந்த அங்காரகன் முதலிய சப்தக் கிரகங்களும் சப்தமத்தில் தனித்தனியா யிருந்தாலும் சேர்ந்திருந் தாலும் அவற்றிற்கும் பலன்கள் வேருக ஆயினும் இந்தச் செவ்வாய் தோஷமென்பது தனியாகக் கிடையாதென்றும் பல தாரங்கள் பரஸ்திரீ கமனுதிகள் இவைகள் ஏற்படுவதெல்லாம் செவ்வாய் ஒரு கிரகம் மேற்படி 2, 12, 4, 7, 8 ஆகிய ஸ்தானங்களில் இருப்பதால் மட்டு மல்லவென்றும், அதற்கு அனேக காரணங்க ளுள்ளனவென்றும் தெரிகிறது. அவற்றிற்குரிய சில காரணங்

களையும் செவ்வாய் 2, 12, 4, 7, 8 ஆகிய ஸ்தானங்களிலிருப்பதற்குப் பலனும் மற்றும் பலவித தோஷங்களேயும் செவ்வாய் எந்த எந்த லக்கினங்களுக் கெங்கெங்கிருந்தால் தோஷமில்லை யென்பதையும் மேற்படி ஸ்தானங்களிலிருந்தால் செவ்வாய் மூலம் மேற்படி ஸ்தானங்களில் ஏற்படும் பலன்களும் சொல்லப்படுகிறது. மேலும் சிலர் ஏகதாரத்துடனே யிருத்தல் (இதில் 3 விதமுள்ளது. அவையாவன தர்மசாஸ்திர விதிப்படி விவாகம் கொண்ட மனைவியுடனிருத்தல், (1) விவாகமான மனைவி மரித்துவிட்டபின் மறு விவாகம் செய்துகொள்ளாதிருத்தல், (2) விவாகமான மனைவியிருந்து அவளுடன் எக்காரணத்தாலோ காரணமின்றியோ வாழாதிருந்த(ம்) மறு விவாகமும் செய்துகொள்ளாதிருத்தல், (3) ஆகிய விதங்களுள்ளதும், காலங் கடந்து விவாகம் செய்துகொள்ளுதல்) அதாவது தாமச விவாகம் இது யுக்தகாலத்தில் நடைபெறுமல் பிறகு நடப்பதும், வேறு சிலர் பாலிய விவாக மடைதல், சிலர் விவாகமே யில்லாது பிரம்மசாரியாயிருத்தல், இதிலும் இரண்டு வகையுள்ளது அவையாவன: விவாகமே செய்துகொள்ளாது பிரம்மசாரி யாசிரமத்திலிருத்தல். (1) விவாகம் நிச்சயம் செய்து அவ்விதமே நடைபெறுமல் தடைபட்டு நின்று பிறகு விவாகமின்றியே யிருத்தல் (2) இவையும், எருக்கஞ்செடியை விவாகம் செய்து கிரகஸ்தாசிரமத்தை யடைதல், அல்லது கதலி விவாகம் செய்து கிரகஸ்தாசிரமத்தை யடைதல், முதலில் விவாகம் தடைபட்டுப் பிறகு சில காலம் சென்று மணம் புரிதல். விவாகம் செய்துகொண்ட மனைவியிருந்தும் அன்னிய ஸ்திரீ சேர்க்கை கொள்ளல், விவாகம் செய்துகொண்ட மனைவி இறந்தபின்பு சிலகாலம் அல்லது பலகாலம் அன்னிய ஸ்திரீயைச் சேர்த்துக்கொள்ளல், விவாகமடைந்த மனைவியிருக்கும் போதே வேறு ஒன்றல்ல, இரண்டு மூன்றும், அதிகமு மடைதல், விவாகம் செய்துகொண்ட மனைவி பிறந்த பின்பு சீக்கிரத்தில் அல்லது காலங் கடந்து விவாக மடைதல், இதன் மத்தியில் சில காலம் போகஸ்திரீ சேர்க்கை கொள்ளல், விதவைகளை மணத்தல், ஜாதி யந்தரத்தில் (ஸ்திரீகளை) மணத்தல், இத்தியாதிகளையும் மிருகப் புணர்ச்சி, புருஷ கமனம், சதிபதிகளிருவரும் கற்புக்கெடல், பகல் போகம், இத்தியாதிகளையும் சொல்வதுடன் மற்றும் பலவிதமும் சொல்லப்படுகிறது. முன் சொல்லப்பட்ட அங்காரக

தோஷம் என்கிற செவ்வாய் தோஷமானது நிச்சயம் உண்டு என்றும் அதற்குப் பரிகாரம் சொல்லப்பட்டிருக்கிறதென்றும் பலர் சொல்லுகிறார்கள். அப்படிப் பரிகாரம் செய்வதால் பரிகாரமாகாமல் தாரதோஷங்கள் நேரிடுவதும் மற்றும் பலவித பலன்கள் நேரிடுவதும் அனுபவபூர்வமாகி யிருப்பதால் அவ்வாறு தோஷத்தாலேயே மேற்படி கெடுதலான பலன் நேரிடுவது உண்மையானால் அதற்கு அவர்கள் சொல்லியிருக்கும் பரிகாரம் ஏற்கத்தக்கதாகுமா என நாம் கேட்கிறோம்? ஏனெனில் அவ்வாறு பரிகாரமென்று அனேகர் சொல்லியுள்ள ஜாதகங்களில் பலர் வாழ்க்கை கெட்டிருப்பதை நாம் கண்கூடாகக் கண்டிருப்பதால் அவைகளை ஏற்க முடியாததற்கு வருந்துவதுடன் செவ்வாய் தோஷம் என்பது தாரநாசம் ஒன்றையே செய்வதில்லை யென்றும், பிரதானமாக லக்கினம், ஸ்தானம், ஆதிபத்யம், காலம், பலம், குணம் இவற்றை அனுசரித்துச் செய்கிறதென்றும், மேற்படி தோஷமானது சில சமயங்களில் பிரபல யோகத்தையே கூடச் செய்து விடுவதுடன் மாரகத்தையும் கூடச் செய்யச் சக்தியும் அடைகிறது; ஆதலால் மேற்படி தோஷமானது தாரதோஷத்தை மட்டும் செய்வதில்லையென்றும், தார தோஷத்தைச் செய்ய அனேகவித கிரக அமைப்புகள் காரணமாகிறதென்றும், தெரிவித்துக் கொள்ளுகிறோம். உதாரணமாகச் சுக்கிரநாடியில் செவ்வாய் தோஷமென்பது (விவாகத் தடை யாகுமென்றும்) தோஷமாகாதென்றும், தேவகேரளத்தில் பிரத்தியக்ஷமாக மேஷம் விருச்சிக மிவைகளுக்கு 4-லும், ரிஷபம், துலாம் இவைகளுக்கு 8-லும், மிதுனம், கன்னி இவைகளுக்கு 12-லும், தனுசு, மீன மிவைகளுக்கு 2-லும், மகர கும்பங்களுக்கு 7-லும், கடக, சிம்மங்களுக்கு, எங்கிருந்தாலும் தோஷமாகாதென்றும், வேறு கிரந்தங்களில் 4, 7 இந்த இடங்களாக மேஷம், கடகம், விருச்சிகம், மகரம் இந்த ராசிகள் வந்தால் தோஷ மாகாதென்றும், இருதாரம் அல்லது முற்கூறியபடி தார பேதங்களுண்டாகும் விஷயங்களில் லக்கினத்தில் பாப நிருந்தாலே போதுமானதென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் தம்பதிகளின் ஜாதகங்களில் ஜன்ம காலத்தில் 12, 2. 4, 7, 8, 1 இந்த ஸ்தானங்களும் இதேபோலச் சந்திர சுக்கிருடைய ஸ்தானங்களைக் கொண்டும் அறிய வேண்டுமென்றும் ஜன்மகாலத்தில் ஒரு ஜாதகத்தில் 12-ஆம் இடத்தில் சயம்பாபியாக அங்காரகனிருந்தாலும்

உபய ஜாதகங்களிலும் ஜன்ம காலத்தில் 12-ல் செவ்வாயிருந்தால் தோஷ மாகாதென்று சில கிரந்தங்களிலும் ஸ்திரீ ஜாதகத்தில் ஜன்ம காலத்தில் 2, 8-ஆம் இடங்களிலும் புருஷ ஜாதகத்தில் 4, 8-ஆம் இடங்களிலும் செவ்வாயிருந்தால் அது தோஷ மாகாதென்றும் பல பொதுக் கிரந்தங்களிலும், நாரதீயத்தில் இப்படிப்பட்ட ஸ்தானங் களில் ஏற்படக் கூடியவைகளில் காலதேச தெசா பேதங்களி(னு)ல் தாரநாச முண்டாகிறதென்றும், செவ்வாய் 12 லிருந்தால் களத் திரம் பிரத்தி யுத்தாமுரைப்பவளும் நீச்ச அற்பத் தன்மையுடைய வளு மாவாளென்றும், 2 லிருந்தால் தனக்கு முன்னதாகவே தார மரணம் நேரிடுமென்றும், 4 லிருந்தால் சகல பயத்தையும் உண் டாக்கு மென்றும், 7 லிருந்தால் புத்திர நாசத்தை யுண்டாக்கு மென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் லக்ஷ்மீநாராயண சம் வாதத்தில் 7-ல் செவ்வாயிருந்தால் மிக்க சிவப்பான அல்லது ரக்த சியாமள சரீரமும் மேல் நோக்கிய சமஸ்த அவயவங்களு முடைய வளும், மேல் நோக்கிய தலைமயிர் அல்லது எதிர் ரோம முடைய வளும் மேனோக்கான ஸ்தன முடையவளும், குரூரமான நேத்திர முடையவளும், சுருண்ட தலைமயிருடையவளும், கடினச் சொல்லுடையவளும், மிக்க சூடான பித்த சரீரமுடையவளும், சபல புத்தி யுடையவளும், கபடம் திருட்டுத்தனம் தாதுர் வாதம் முதலியன அறிந்தவளும், சரீரத்தில் ரண சம்பந்த முள்ளவளும், பர்த்தாவுடனும் (சகோதரனுடனும்) துவேஷ முடைய வளும், எப்போதும் துக்கமும் ரணதாபஜ்வரமு முடையவளும், அம்மை, விஷம், அக்னி, சஸ்திரமிவற்றால் வதை யுடையவளும். அதிக போஜன முடையவளும், துர்போஜனமும், உப்பு கைப்பு இவற்றில் பிரியமுடையவளும், சிவந்த வஸ்திரம் சிவப்பு சந்தனம் சிவப்பு ஆபரணம் சுகம் க்ஷேமம் அதிக (மைதுனம்) மைதுனப் பிரியம், நுரைத்த இந்திரியம் ஒட்டிய கடின அழுத்தமான யோனி இவைகளுடையவளும், சம்போக காலத்தில் பரபுருஷரை நினைப்ப வளும், பரபுருஷரை அணைந்து போகிப்பதாக எண்ணுபவளும், சஞ்சல மனமுடையவளும், ஷை செவ்வாயுடன் பாபக்கிரகம் கூடியிருந்தால் ஜார சோரத்தன்மைக ளுடையவளும், யோனிரோக முடையவளும், புஷ்ப மேகாதி ரோகங்களுடையவளும், ஷை செவ்வாயுடன் சுபர் கூடியிருந்தால் சுபலக்ஷண சொரூபமும் கீர்த்திப் பிரதிஷ்டையும் டாம்பீகமு முடையவள் மனைவியாக வாய்ப்பாளென்றும், இதற்கே ஜம்பு நாரதீயம், ஜாதக கலாநிதி

இவைகளில் 2, 4, 7, 8, 12 ஆகிய ஸ்தானங்களில் புருஷ ஜாதகத்தில் செவ்வாயிருந்தால் புருஷனுக்கு முன்னடி ஸ்திரீக்கு மரணம் சம்பவிக்கும் என்றும், ஸ்திரீ ஜாதகத்தில் இப்படி யிருந்தால் ஸ்திரீக்கு முன்னதாக புருஷனுக்கு நிரியாணம் சம்பவிக்குமென்றும், மேலும் 7 ஆம் இடத்தில் செவ்வாயிருந்தால் ஸ்திரீக்கு க்ஷுத்ர பீடை யுண்டாகுமென்றும், தனமின்மையும் செய்யும் என்றும், பராசர ஓரையில் 7-ல் செவ்வா யிருந்தால் நீச சேவை செய்யவும், நீசருடன் ஜாதகருக்குச் சேர்க்கையும் தாரமணமும் நேரிடுமென்றும், சுகர் வாக்கியத்தில் செவ்வாய் 7 லிருந்தால் விதவைகளைச் சேர்வான் என்றும், நயவாக்குடையவனென்றும், கபட முடையவனென்றும், விசேஷ பூமி தேடுவானென்றும், ஆளடிமை ஆபரணங்களுடையவனென்றும், பிடிவாதமாய் எடுத்த காரியத்தைச் சாதித்து முடிப்பானென்றும், ஸ்திரீ சொல் கேட்பவனென்றும், எத் தொழிலும் செய்ய வல்லவனென்றும், புத்திர இச்சை யுடையவனென்றும், சோர்விலாதவ னென்றும், பகல் போகியென்றும், முறை தவறிச் சம்போகம் செய்பவனென்றும், இன்னும் இவ்வாறாகப் பல கிரந்தங்களில் பலதரப்பட்ட பலன்கள் சொல்லப்பட்டும் இருக்கின்றன. ஆகையால் செவ்வாய் தோஷமென்பது முதலில் இல்லாம லிருந்ததென்றும் சில நூற்றாண்டுகளுக்குப் பிறகு சமீப காலத்தில்தான் ஷை தோஷமென்பது தென்னாட்டிலிருந்து பிரசித்தமானதென்றும் பெரியோர்களும் பிரபல ஜோதிஷ வித்துவான்களும் சொல்லக் கேட்டிருக்கிறோம். நமது துணிபும் அவ்வாறே. அங்காரக தோஷமே கிடையாதென்றும் ஜாதகர்களுக்குத் தாரநாசத்தைச் செய்யப் பலவித கிரக அமைப்புகளும்! அவரவர்களுடைய பூர்வ ஜன்ம கர்மானுகுணமுமே காரணமாகுமென்றும் திடமாக அபிப்பிராயங் கொள்ளுகிறோம்.

---

# களத்திரபாவம்

1. ஜாதகன் பிறந்த ஜன்ம லக்கினத்திற் கேழில் சூரிய னிருந்தால் அதமத்தன்மை, அபகீர்த்தி, தகப்பனைவிட அதிக வியாதி, சிவந்த சியாமள வர்ண சரீரம்; சிவந்த தலைமயிர்; சிவந்த கண்; ரத்தபித்த சரீரம் அல்லது முகரோகமுடைய தன்மை; மேலும் சபல சித்தம், வெகு பேச்சு, சம இடை, சம ஸ்தனம், சீக்கிர ஸ்கலனம், வெகு சல்லியம், ராஜஸ குணம், பாண்டித்தியம், பிதுரு சுகம் இவைகளுடைய களத்திரம் வாய்க்கும்.

2. மேற்படி 7-ஆம் இடத்தில் * சம்பூர்ண சந்திரனிருந்தால் நன்மையும், நன்மையையே அனுசரித்தும், நல்ல ஒழுங்கான நடத்தையும், நல்ல கண்களும், நன்முகமும், சாத்துவீக குணமும், நீண்ட நீலநிறத் தலைமயிரும், பருத்த இடையும், பித்தாதிக்கமும், அழகிய ஸ்தனமும், அழகிய சரீரமும், பூர்ண பலமும், சம ஸ்கலிதமும், சாந்தமும், பிரியமும், சகல மித்திரமும், வெகு பந்துக் களும், தாய் சுகமும், சௌபாக்கியமும், மிருதுவும், மாதுரியமும், குளிர்ந்த ஆகாரமும், சிலேஷ்ம சரீரமும், வெகு இந்திரியமும் எப்போதும் அரிப்புடைய யோனி யுடையவளும், வெள்ளை வஸ் திரப் பிரியமும், சுகந்த புஷ்ப பிரியமும், புருஷனுக் கனுகூலவதியும் ஆன களத்திரம் வாய்க்கும்.

3. மேற்படி ஏழாமிடத்தில் புதனிருந்தால், சரீரம் கருப்பு நிறம், நல்ல ரூபம், அழகிய முகம், அழகிய கண்கள், நற் சரித் திரம், அழகான ஹாஸியம், ரஸமான பேச்சு, நீலநிற சுருண்ட தலைமயிர், நீண்ட பருத்த வட்ட மண்டலாகாரமான அழகிய ஸ்தன மத்தியம், அழகிய சரீரம், நாட்டியம், பாட்டு, சாஹித்தி யம், ஒழுக்கம், வாகனுதி விசித்திர சிற்பம் தெரிந்த தன்மை, ரஸிக் கும் காரியங்கள் செய்தல், சாந்தமாக வெகு நன்றாய் (பேசல்) வாசித்தல், சொற்ப சம்போகம், பிறரை வசியப்படுத்துங் குணம், அதிக இந்திரியம், வெகு அரிப்புடைய யோனி, புருஷனுடன் சிநேகம், ஞானமார்க்கச் செய்கை, தர்ம மார்க்கத்தில் உண்டான

* சம்பூர்ண சந்திரனென்பது பௌர்ணமி தினத்துச் சந்திரனைக் குறிக்கும்.

† 7-ஆம் இட செவ்வாயின் பலன் முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது. அது ஆரம்பத்தில் செவ்வாய் தோஷ சமாதானத்தில் வருகிறது.

சகல மந்திர ரகசிய ஞானம், பிரதாபம், வாகனம், தரும(ம்) கருமம் இவைகளமையும் களத்திரம் வாய்க்கும்.

4. மேற்படி ஏழாமிடத்தில் குரு இருந்தால், ஸ்தூல சரீரம், ஸ்தூல ஸ்தனம், வெளுப்பு நிறம், சாத்துவீகம், மனோஜயம், நிம்மதியான மனம், கறுத்த நீலநிறத் தலைமயிர், சகல சௌபாக்கியம், சகல தேவதா உபாசனை, மந்திர ரகசியம், உபாசகாமந்திர ரகசியம், மேன்மையான ஞானம், ஞான மார்க்கத்தினால் திரவிய சம்பாதனை, சொர்ண சாயையான சரீரம், தேவப் பிராம்மண (சந்தர்ப்பண) பூஜா மந்திரோபதேச சாமர்த்தியம், வெகு மித்திரர், வெகு புத்திரர், வெகு பந்துக்கள், வெகு சம்பத்து, கனக தண்டிகை, வெகு வித்தியை, மணிப்ரவாள முத்தாபரணப் பிரியம், ஸகல லக்ஷணம், சம்பூர்ண ஸம்போகம், சமஸ்கலிதம், சமயோனி, வெளுப்பு வஸ்திரம் பிரீதி, வசியம், தித்திப்பில் இஷ்டம், இஷ்டத்தைச் (செய்தல்) சொல்லல், சகல போக பாக்கியம், சம போஜனம், சுகம், சுக பந்துக்கள் முதலிய சற்குணமுடைய களத்திரம் வாய்க்கும்.

5. மேற்படி ஏழாமிடத்தில் சுக்கிரனிருந்தால் நல்ல ரூபம், சௌபாக்கியம், பெருத்த சரீரம், சுபமான வெளுத்த வர்ணம், ராஜஸ குணம், பரந்த சுருட்டையான தலைமயிர், சுப லக்ஷணமுடைய பெருத்த ஸ்தனங்கள், சிலேஷ்ம சரீரம், வெண்பட்டு அல்லது வெளுப்பு வஸ்திரம், முத்தாபரணம், சாந்தம், எப்போதும் பாலன்னமுண்ணல், தயிர் பிரியம், கோதுமையினால் சமைத்த (சாந்த) அன்னம், நானுவித ஷட்ரஸங்களுடன் கூடிய நித்தியான்ன தானப் பிரியம், சுதந்திரம், மிருதுவான சரீரம், சுகந்த குஸுமம கஸ்தூரி கதம்ப கற்பூரப் பிரியம், மஞ்சள் வர்ண (வஸ்திர)ப் பிரியம், சதா போஜனப் பிரியம், சம்பூர்ணேந்திரியம், நீண்டகாலம் சம்போகம், வெகு சம்போகம், வெகு காமம், வீட்டில் கிரம ஒழுக்கம், வெகு சீதள சரீரம், சுவஸ்தமான மனம், நிர்மல சித்தம், எப்போதும் சம்போகப் பிரியம், க்ஷேமமுள்ள தன்மை முதலியனவும் வீணுகானம் அறிந்தும், விடியற்கால சம்போகம், சும்பனம், ஆலிங்கனம், காம கலாசாஸ்திர மறிந்தும், அறுபத்துநான்குவித பந்தனுதிகளில் பிரியம், சதுரங்க பிரியம், சாகித்தியம்,சங்கீதம்,வீணு விநோதம், கௌரீ, லக்ஷ்மீ என்னப்பட்ட பெயர்களை (உடையவள்) கௌரீ, லக்ஷ்மீ இத்யாதி தெய்வங்களைச் சதா பூஜிப்பவள், புத்திர

பௌத்திரர், வெகு மித்திரர், தாஸீ தாஸ ஜன சம்பன்னாதிகள். உபய வம்சத்திற்கும் உத்தம விருத்தி, புருஷ வசியம், புருஷ வசியப் பிரியம், புருஷானுகூலம் முதலிய குணங்களுடைய தாரம் சித்திக்கும்.

6. மேற்படி ஏழாமிடத்தில் சனி யிருந்தால் அதிகக் கறுப்பு நிற(ம்), குரூபி, இளைத்த தேகம், நீண்ட தேகம், நிர்மாம்ஸ தேகம், நீண்ட நகம், தோலுக்குச் சம உடை, பருத்த பல்லு, ஹீன ஸ்தனம் அதாவது குறைந்த ஸ்தனம், அப்படி யில்லாவிட்டால் ஸ்தனமே யில்லாமை, சகலகுண சதா துக்கம், துக்க ஜீவனம், பருத்த முழங் தாள், விதண்டாவாத(ம்,) துர்க்குணம், தரித்திரம், துராசாரம், துர் போஜனம், புத்திர துவேஷம், மித்திர துவேஷம், பந்துஜன துவேஷம், நிந்திக்கப்பட்ட செய்கையுடைய தன்மை, நிந்திக்கப் பட்டவைகளை உண்ணல், வாதரோக பீடை, மலின வஸ்திரம் தரித்தல், அருவை மனம், சபை நடுங்கும்படியான (குரல்) குத்ஸித குணம், விபரீத மைதுனம், துர்க்கந்த யோனி, வெளுப்பு வஸ்தி ரத்தில் ஆசை, துர்போகம், ராஜ தர்ம மித்திர பேதாதி குணமுள்ள தாரம் சித்தியாகும்.

7. மேற்படி ஏழாமிடத்தில் ராகு கேதுக்களிருந்தால் விஷப் பிரயோகாதி செய்கையும் மேற்படி ஏழாமிடத்திலேயே சூரியன், ராகு, சனி, குஜ, கேது இவர்கள் அல்லது சூரியன், ராகு, அல்லது சூரியன் கேது, சூரியன் ராகு குஜன், அல்லது சூரியன் கேது குஜன் அல்லது சூரியன், சனி ராகு, அல்லது சூரியன் சனி கேது, அல்லது சனி குஜ கேது, அல்லது சனி குஜ ராகு அல்லது மேற்படி நால் வரும் அதாவது சூரியன் ராகு சனி குஜனிவர்களாவது, அல்லது சூரியன் கேது சனி குஜனிவர்களாவது கூடியிருந்தாலும் விஷப் பிரயோகாதி செய்கைகள் விஷ வாகனாதிகள் முதலிய செய்கை யுடைய களத்திரம் வாய்க்கும்.

8. மேற்படி ஏழாமிடத்தில் ஏழாமதிபதி, சுக்கிரன், ஷஷ் டாதிபதி, அதாவது ஜன்ம லக்கினத்திற்கு ஆறுக்குடையவன் இத்யாதி பாபர்களுடனும், சனி குஜருடனும் கூடி யிருந்தால் ஜாரத் தன்மையும்.

9. மேற்படி ஏழா மிடத்திலேயே ஏழாமாதி சுக்கிரன் ஆறுக் குடையவர், சூரியன், குஜனிவர்கள் கூடியிருந்தால் க்ஷத்திரிய சங்க மமும், குரு புத சுக்கிரர் கூடி யிருந்தால் பிராம்மண சங்கமமும்,

10. புதன் மட்டும் மேற்சொன்னபடி ஆறு ஏழுக்குடைய வர்கள் சக்கிரனிவருடன் கூடி ஏழில் இருந்தால் விரகதாபமும் சோர பிரதேசத்தில் ஈனஸ்திரீ சேர்க்கையும்,

11. மேற்படி மேலே சொல்லியபடி கூடியவர் குருவாயிருந்தால் தேவதாகிரகத்தில் பிராம்மண (ஸ்திரீ) சங்கமமும்,

12. மேலே சொல்லியபடி மேற்படி ஏழில் சுக்கிரனுகி யிருந்தால் சயன கிருகத்தில் ஹம்ஸதுளிகா மஞ்சத்தில் கட்டிலிலேயே வேசி ஸ்திரீ அல்லது பாலிய வாலிப ஸ்திரீ, கர்ப்பிணி ஸ்திரீ, சங்கமமும்,

13. சனியாகில் தாஸீதாஸஜனம் வயது முதிர்ந்த ஸ்திரீ, அல்லது விருஷள ஸ்திரீ சேர்க்கையும்,

14. ராகு கேதுக்களாயின் சண்டாளஸ்திரீ யல்லது, மிலேச்ச ஸ்திரீ யல்லது, தாஸி யல்லது, ரஜஸ்வலை யல்லது, குத்ஸித புஷ்பிணி ஸ்திரீயையாவது பலாத்காரமாகச் சங்கமம் செய்தல், அல்லது வனப் பிரதேசத்தில் குருபஸ்திரீ சேர்க்கை யல்லது நாற்கால் ஜீவனிடத்தில் சம்போகம், அல்லது புருஷனுடன் புருஷ கமனம் முதலியன நேரிடும்.

15. ஜென்ம லக்கினத்திற்கு ஏழாவது ஸ்தானாதிபதியுப் குரு புத, சுக்கிர சந்திரனிவர்களும் ஒன்று, நான்கு, ஏழு, பத்து, ஐந்து, ஒன்பது ஆகிய ஸ்தானங்களிலல்லது தன் உச்ச சொட்சேத்திரம், மித்திர க்ஷேத்திரம், சுபா சுப வர்க்கோத்தமாம்சம், பாரிஜாதாம்சம், குஸுமாம்சம், குங்குமாம்சம் இத்தியாதி அம்சங்களிருந்தால் சகல ஸௌபாக்கியங்களு முண்டாகுந் தாரம் வாய்ப்பாள்.

16. ஒன்பதாமிடத்தில் சனியும் சந்திரனும் கூடி யிருந்தால் குரு துரோகியாகியும்,

17. மேற்படி சனியும் சந்திரனுமே கூடிப் பாபநவாம்சையிலு மிருந்தால் குரு பத்னியைச் சம்போகிப்பவர்களாகியும்,

18. இவர்களுடன் ஐந்தாமாதியும் கூடியிருப்பின் குருவின் புத்திரியைச் சம்போகிப்பார்கள் என்று சிலரும், வேறு சிலர் தன் புத்திரியையே சம்போகிப்பரென்றும், இவர்களுடன் சுபர் கூடி

யிருந்தால் மேற்படி சேர்க்கை நேராமல் அபவாதம் மட்டும் நேரும் என்றும், பாபர்கள் கூடி யிருந்தால் நிச்சயம் சேர்க்கையே நேரிடும் என்றும் சொல்கின்றனர்.

19. ஜென்ம லக்கினத்திற்கு 7-ல் சூரியனிருந்தால் தகப்பனை விடக் காமி. அபயசசு முதலியன உடைய தாரம் வாய்க்கும்.

20. க்ஷீண சந்திரன் 7-ல் இருந்தால் அங்கவீன களத்திரம் வாய்க்கும். மேற்படி சந்திரன் சுபர் வீட்டில் இருந்தால் புருஷன் 100 ஸ்திரீகளை ரமிப்பன்.

21. செவ்வாய் 2, 7-ஆம் இடங்களிலிருந்தால் தார நாச சமபலனும் ஓர் சமயம் தாரநாசமும், சூரியனில் அஸ்தங்கதமடைந்த புதன் சப்தமத்திலிருந்தால் ஸ்திரீயை சபல சித்தமும், சடத் தன்மையும் உடையவளாகச் செய்வர்.

22. மேற்படி புதன் சுபவர்க்கத்தில் இருந்தால் ஸ்திரீயை தெளிந்த வாக்கும், வமிசத்தில் நல்லொழுக்கமும் சிலாக்கிய (ரூபமும்) குணமும் உடையவளாகவும் செய்வர்.

23. புதன் 7-ஆம் இடத்தில் சந்திரனுடன் கூடியிருந்தால் வெகு ஸ்திரீகளை யடைவார்கள். மேற்படி புதன் ரிஷப ராசியில் இப்படி யிருந்தால் வெகு ஸ்திரீ போகமும் முதல்தார நாசமு முண்டாகும்.

24. 7-ல் சுக்கிரனிருந்தால் ஜாதகன் வேசி ஸ்திரீஜன வல்லவனுவன்.

25. 7-ஆம் இடமாக விருச்சிக ராசியாகி அவ்விடத்தில் சுக்கிரனிருந்தால் தார நாசமுண்டாகும்.

26. சனி குஜ சுக்கிர சந்திரர் 7-ல் இருந்தால் உண்மையில் மனைவி யில்லாதவனுகச் செய்துவிடுவார். அல்லது சந்ததி யில்லாமற் போய்விடும்.

27. 7-ல் 5-மாதி யல்லது 8-மாதி யிருந்தால் தார நாச முண்டாகிப் போக ஹீனனுகி, சதா துக்கியுமாவார்.

28. செவ்வாயின் ராசியிலாவது அம்சத்திலாவது சுக்கிரன் இருந்து செவ்வாயுடன் கூடியிருந்தாலும் செவ்வாயால் பார்க்கப்

பட்டாலும் பரஸ்திரீ போக ஆசையும், சனியின் (அம்சத்திலல்லது) ராசியில் சுக்கிரனிருந்து சனியுடன் கூடியிருந்தாலும் நீச்ச நவாம் சத்திலிருந்து பாபருடன் கூடியிருந்தாலும் நீச்ச ஸ்திரீ சேர்க்கை ஏற்படும்.

29. 7-ஆம் இடத்தில் சுக்கிரன் வர்க்கத்தில் இருக்கப்பட்ட சனி செவ்வா யிவர்களுடன் சந்திரனும் கூடி யிருந்தால் பரஸ்திரீ சங்கமலோலனவன்.

30. சனி குஜ சந்திர னிவர்கள் அன்னியோன்னிய வர்க்கங் களிலிருந்தால் சுபரு மிவர்களைப் பாராமலிருந்தால் எப்போதும் பரதார கமனமே நிலையாகும்.

31. எந்த லக்கினமானாலும் எந்த விடத்திலானாலும் ஒரு இடத்தில் சந்திரன், குஜன், சனி ஆகிய மூன்று கிரகங்களும் கூடி யிருந்தால் புருஷ ஜாதகன் விபவமுள்ள ஜாரனுகவும் அவன் மனைவி யும் பரபுருஷ கமனஞ் செய்பவளாகவு மாவார்கள்.

32. சனி செவ்வா யிவர்களின் வர்க்கத்தில் 7-ஆம் இடத்தில் சுக்கிர னிருந்தாலும் இருந்து மேற்படியார்களால் பார்க்கப்பட்டா லும் சதிபதிகளிருவரும் மேற்படி தோஷத்தை யுடையவராவார்கள்.

33. ஜென்ம லக்கினத்திற்கு 7-ல் சனி செவ்வா யிவர்களி னம்சத்தில் சுக்கிரனிருந்து மேற்படி ஸ்தானுதிபதி சனி செவ்வா யிவர்களுடன் கூடியிருந்தால் அந்த ஜாதகன் மனைவி வேசியாக வல்லது ஜாரிணீயாக ஆவாள்.

34. கன்னியா நவாம்சத்தில் சனி ரிஷப லக்கினத்திலிருந் தாலும், சுக்கிரன் கடக, மீன விருச்சிக ராசிகளின் அந்தியாமசங் களிலிருந்து மேற்படி ஸ்தானம் லக்கினத்திற்கு ஏழாமிட மானுலும் ஜாதகன் மலடியின் கணவனுவான். மேற்படி 7-ஆம் இடங்களாகிற கடக மீன விருச்சிக ராசிகளின் அந்தியநவாம்சங்களில் சனி யிருந் தால், மேற்படி ஜாதகனுடைய ஸ்திரீகள் எத்தனை போயினும் காலங்கடந்து கடந்து மரிப்பார்கள்; அல்லது அவன் மனைவி ஹீன அங்கமுடையவளாகவாவது இரண்டாந்த (ர) ரமாகவாவது வாழ்க்கை நடத்துபவளாவாள்.

35. தன் உச்சத்தில் குரு ராகுவுடன் கூடியிருந்தால் தார நாசமே யுண்டாகும். மேலு மிவர்களுடன் வேறு பாபரும் கூடி யிருந்தால் சண்டாள மனதுண்டாகும். ஸ்திரீ சங்கமத்தினுல்

அல்லது அபவாதத்தினல் எப்போதாவது ஒரு சமயம் சகல சொத்துக்களும் அழிந்துவிடும்.

36. பாவக் கிரகங்களாகிய சூரியனும் ராகுவும் ஏழாமிடத்திலிருந்தாலுமிப் பலனே யுண்டாகும். சில கிரந்தங்களில் 3 தாரமுண்டாகும் என்று முளது.

37. ஜென்ம லக்கினத்திற்கு 7-ல் சந்திர சூரிய ரிருப்பின் புத்திர மித்திர ரில்லாத தாரமுடையவனுவன்.

38. 7-ல் சூரியனும் செவ்வாயுமிருந்தால் வெளி தேச வாசமும்,

39. 7-ல் சூரியனும் புதனும் கூடி யிருந்தால் காரியத் தடையும், செய்பவள் மனைவியாவள்.

40. மேற்படி ஏழாமிடத்தில் சூரியனுஞ் சனியு மிருந்தால் பிதுரு துவேஷமும், புருஷ ஜாதகத்தில் ஸ்திரீ நாசமும், ஸ்திரீ ஜாதகத்தில் புருஷநாசமும் அல்லது சதிபதிகளில் மனக் கசப்பும், ஒற்றுமையுடன் வாழாமையும், ரோகிகளாகியும் ஒருவருக்கொருவர் துரோகிகளாகியும், சதா அலைச்சலும் ராஜசேவை செய்பவர்களும் ஆவார்கள்.

41. சுக்கிரனும் சூரியனும் கூடி 7-ல் இருந்தால் தார துவேஷமும் தரித்திரமும் ஸ்திரீ துவேஷமும் தானே யுண்டாகும்.

42. 7-ல் சூரியனும் குருவும் கூடி யிருந்தால் மணி பூஷணுதிக ளுண்டாகும்.

43. 7-ல் செவ்வாயும் சந்திரனும் கூடி யிருந்தால் அற்பத்தனமும், புத சந்திரரிருந்தால் சூரத் தன்மையும், குரு சந்திர ரிருந்தால் அரசனுதலும் நல்ல விசேஷ அறிவும் போகமுமுடைய தாரம் வாய்ப்பாள்.

44. 7-ல் சுக்கிர சந்திரர் கூடில் அதிக புத்திரர் தனம் அதிக ஸ்திரீ பிரஜை இவைகளும், சனி சந்திரரிருந்தால் புத்திரனில்லாமையும், புருஷ ஜாதகருக்கு ஸ்திரீ யில்லாத்தன்மையும் கிராம புராதிகளும் உண்டாகும்.

45. 7-ல் குரு செவ்வா யிருந்தால் அரசனுக வல்லது வித்துவானுகவும் குஜ புதரிருந்தால் சஸ்திரம் அஸ்திரம் சேனை இவற்றால் குறைவுள்ளவனும், குஜ சுக்கிரரிருந்தால் ஸ்திரீயால் தனமும் வெகு பலமும் போக சேஷ்டைகளும் உடையவனுவன்.

46. சனி குஜர் சப்தமத்திலிருந்தால் தனமின்மை தோஷம் அசுசி இவை யுடையவளும்.

47. 7-ல் குரு செவ்வாயிருந்தால் வெகு சத்ருக்க ளுண்டாயினும் குலாதிபதி (யாயும்) ஆகும் யோகமுடையவளும் மனைவி யாவாள்.

48. 7-ல் செவ்வாயும் புதனு மிருந்தால் ஊமையான ஸ்திரீ யுடன் கூடி யிருப்பான்.

49. குரு சுக்கிரர் சப்தமத்திலிருந்தால் எப்போதும் ஸ்திரீ பிரபுவாகவும் ஸ்திரீரத்னம் வெகு புகழ், தனம் இவைகளுடன் கூடியும், 7-ல் குரு சனி கூடில் ஸ்திரீ துவேஷத்தாலேயே ஸர்வ சொத்துக்களின் கஷ்டமும்.

50. 7-ல் சனி சுக்கிரர் கூடி யிருந்தால் ஸ்திரீக்கு மாணத்தையும் விசனத்தையும் ஸ்திரீ துவேஷத்தாலேயே சகல சொத்துக்களும் கஷ்டமும் அவமானமும், அல்லது நிதான வாழ்க்கையும் அடைவார்.

51. ஜென்ம லக்கினத்திற்கு 7-ல் பாபரிருந்தால் தார நாசமும், அல்லது அங்கஹீனமுள்ள தாரமும், மேற்படி பாவரே தன் உச்ச சொட்சேத்திரங்களிருந்தால் தாரத்தை இழந்திருத்தலும்,

52. 7-மாதி 7-லேயே யிருந்தால் சகோதர வாத்சல்லியமும்.

53. 7-ல் சுபரிருந்து சுபரும் பார்த்தால் ஸ்திரீயால் தனலாபமும் அடைவர்.

54. 7-மாதிபதி சந்திரன், புதன், சுக்கிரன், குரு இவர்களுடைய வர்க்கத்தில் இருந்தாலும், பார்த்தாலும் இவர்களுள் ஒருவராவது அல்லது இவர்கள் 1, 7, 9 லாவது மேற்படி அம்சங்களிலாவது இருந்தால் அந்த அம்சத்திற்குரிய ஜாதி ஸ்திரீயால் (தனம் வரும்) சேர்க்கை யுண்டாகும்.

55. 7-மாதி 1, 4, 7, 10-ல் எங்காவது இருந்து சுபருடன் கூடி யிருந்தாலும் 7-மாதி சுபரால் பார்க்கப்பட்டாலும் 2 தாரமேற்படும், ஜாதகன் நீண்ட வயதடைவான்; அன்றி,

56. 7-ல் இவர்கள் அலிக்கிரக கவாம்சங்களி லிருந்தாலும் 2 தார முண்டாகும்.

57. 7-க் குடையவர் உச்சம், வக்கிரம் முதலிய வெகு குணங்க ளடைந்திருந்து, பாபதிருஷ்டியும் பெறுவிடில் வெகுதார முண்டாகும்.

58. லக்கினாதிபதி 7-லும் 7-மாதி லக்கினத்திலும், இருந்தால் மதனகோபால யோக முண்டாகும். இவ்விருவரில் ஒருவர் புத னுடன் கூடி யிருந்தாலும் 7-மாதியுடன் கூடி 7-மிடத்தில் சுக்கிர னுச்சத்திலிருந்தாலும்,

59. ஷை சுக்கிரன் 7-மாதியால் பார்க்கப்பட்டாலும் நூறு ஸ்திரீகளுடன் ரமிப்பர். வேறு சிலர் முந்நூறு ஸ்திரீகளுடன் ரமிப்பரென்று சொல்லுகின்றனர். ஷை ஸ்திரீகள் சுக்கிரனிருக்கும் நவாம்சத்திற்குச் சமானமான நிறம், ரூபம் குணமிவைகளை யுடைய வர்களா யிருப்பார்கள்; அல்லது ஒன்பதுக்குடையவர் ஏழுக் குடையவர் இவர்களுக்குடைய குணத்தடனுவது ஸ்திரீகளிருப் பார்கள். இவர்களின் பலத்தைப்போல் ஷை ஸ்திரீகளின் லக்ஷணமு முண்டாகும்.

60. 7-மாதி நீச்சவர்க்கத்தில் இருந்தால் ஜாதகருக்கு விவாக மும் நீச்ச வர்க்கத்திலேயே நேரிடும். 7-க் குடையவர் சுக்கிரனிவர் களுடைய திக்கில் அல்லது சுக்கிர னிருக்கும் ராசிக்கு ஏழுக் குடையவருடைய திக்கில் அல்லது இவர்களால் பார்க்கப்பட்ட ராசிக்குடைய திக்கில் விவாகம் நடக்கும்.

61. சந்திரன் 12-லிருந்து 6-ல் சூரியனிருந்தால் ஜாதகருக்குத் தாழ்ந்த ஜாதியில் விவாகம் நடக்கும். யோகமும் குறைவாகும்.

62. 5 அல்லது 9, 7-ஆம் இடங்களில் சூரிய சுக்கிரர் கூடி யிருந்தால் அந்த ஜாதகர்களுடைய மனைவி ஒரு அங்கக் குறை வுடையவளாவாள்.

63. ஸ்திரீ புருஷக் கிரகங்கள், சப்தமத்தில் அல்லது சனி செவ்வா யிவர்களிருந்தாலும் ஒரு சுபரால் எவராலாவது பார்க்கப் பட்டால் வயோதிக வயதில் சர்வபூபதி யாவர்.

64. ஜென்மலக்கினம் கன்னியாகி லக்கினத்தில் சூரியனும் சப்தமத்தில் சனியு மிருந்தாலும் சுக்கிரன் சுபரால் பார்க்கப்பட் டிருந்தாலும் ஜாதகனுக்குப் பின்னுடி மனைவி மரிப்பாள்.

65. 4, 8-ஆம் இடங்களில் சுக்கிரனிருந்து ஷை சுக்கிரன் சூரியன், செவ்வாய், சனி இவர்கள் மூவர்களுக்கு நடுவிலிருந்தால் நெருப்பினாலும், இவர்களில் இருவருக்கு நடுவிலிருந்தால் கிணற்றில் விழ்வதாலும் தாரத்திற்கு மரணம் நேரிடும். இவை நேருவதற்கு சுக்கிரன் இந்த பாபர் மத்தியிலேயே இருக்கவேண்டும். ஓரே ராசியில் முன் பின்னாக இருக்கப்பட்ட சூரியனுக்கும் சனிக்கும் மத்தியில், அல்லது சூரியனுக்கும் செவ்வாய்க்கும் மத்தியில் அல்லது சனி செவ்வா யிவர்களுக்கு மத்தியில் இருந்தாலும் அல்லது ஓரே ராசியில் ஓரே நக்ஷத்திரத்தில் முன் பாதத்திலும் பின் பாதத்திலும் ஷை பாபர்களிருந்து ஷை பாபர்கள் மத்தியில் மேற்படி நக்ஷத்திர மத்தியில் பாபருக்கிடையில் சுக்கிரன் இருந்தாலும் தாரநாசம் மேற் சொல்லியபடி நேரும். மேற்படி பாவர்கள் சுபருடன் கூடி யல்லது சுபரால் மேற்படி பாபர்கள் பார்க்கப்பட்டிருந்தால் சந்ததி யில்லாமற் போய்விடும்; தாரநாச முண்டாகாது.

66. சுக்கிரன், செவ்வாய் சனி இவர்களுடன் கூடி 2-ஆம் இடத்திலிருந்தாலும், 7-மாதி இப்படியிருந்தாலும் ஜாதகன் மனைவி விபசாரம் செய்வாள்.

67. 5, 7-க்குடையவர், சனி, சத்துருநாதன் அதாவது 6-மாதி யிவர்களுடன் கூடி யிருந்தாலும் பார்க்கப்பட்டாலும் ஜாதகன் மனைவி விபசாரியே யாவாள். ஜாதகனும் பரஸ்திரீ கமனமுடையவனாவான்.

68. தேய்பிறைச் சந்திரன் 7-ல், பாபருடன் கூடி யிருந்தால் கெட்ட நடத்தை யுண்டாகும்.

69. சுக்கிரன் மேற்படி சந்திரனுடன் கூடி யிருந்தாலும் மூடத்திலிருந்தாலும் தாரம் ஜலத்தில் மரண மடையும்.

70. 7-ஆம் இடத்தில் பாபக் கிரகங்கள் அப்பிரகாச கிரகங்களுடன்கூடி யிருந்தால் அசுபமான தாரமும்.

71. 7-ல் சூரியன் இருந்தால் மலடியும் க்ஷீண சந்திரனிருந்தால் விபசாரியும், செவ்வாயிருந்தால் மரணமும், சனி யிருந்தாலும் ராகு விருந்தாலும் அபகீர்த்தியுடையவளான மனைவியும்; ஜாதகன் பிறர் மனைவியைப் போகித்தலும் நிஷேகமின்றியே புத்திரலாபமும் அதாவது ருது சாந்திக்கு முன்பே புத்திரனைப்பெறும் மனைவியும்,

72. 7-ல் தூமனிருந்தால் விவாகமே யில்லாமலும் பரிவேஷ னிருந்தால் துச்சரிதை கெட்ட ஒழுக்கமுடைய மனைவியும் உப கேது விருந்தால் கெட்ட ஒழுக்கந்தரும் பான வகைகளை விரும் பிக் குடிப்பவளும், கெட்ட குரோத முடையவளும், துஷ்டையும், காலன், விதிபாதனிவர்களிருந்தால் அடிக்கடி கர்ப்ப நஷ்ட முடைய வளும், துச்சரியுடன் இருப்பவளும் பூர்ண சந்திரனிருந்தால் ஸ்திரீ பிரஜைகளைப் பிரசவிப்பவளும், புதனிருந்தால் நல்ல புத்திர ரும், குரு விருந்தால் சற்குணமும், நற்புத்திரிகளும், சுக்கிரனிருந் தால் சகல சௌபாக்கியங்களும், புத்திரிகளும் முண்டாகும் தாரம் வாய்க்கும்.

### விவாகமாகும் காலங்களும், தாரமரணம் புனர்விவாக மிவை நேரிடும் காலங்களும்

73. ஏழாமிடத்தி லிருப்பவருடைய, அல்லது ஏழாமிடத் தைப் பார்ப்பவருடைய, அல்லது ஏழாமிடத்திற் குடையவ ருடைய, தெசை வரும்போதும், இவர்களில் ஒருவருடைய தெசை நடக்கும்போது இவர்களுடன் கூடி யிருக்கப்பட்டவர்களுடைய, அல்லது இவர்களால் பார்க்கப்பட்டவருடைய தெசை புத்தி வரும்போதும்,

74. ஏழாமிடத்திற் குடையவன், சுக்கிரன் ஜன்ம லக்கினாதி பதி இவர்க ளிருக்கப்பட்ட நவாம்ச திரிகோணராசிகளில் கோட் சாரத்தில் மேற்படி லக்கினாதிபதி குரு சுக்கிரன் சந்திரனிவர்கள் கூடும்போதும் அல்லது மேற்படி திரிகோண ராசிகளில் ஸப்தமாதி பதியுடன் இவர்கள் கூடும் போதும்.

75. 7 மாதிபதி யிருக்கப்பட்ட நவாம்சத்திலும் சுக்கிரன் சந்திரனிவர்களில் பல முடையவர்களுடைய சப்தமாதி யிருக்கப் பட்ட ராசிநாதர்களுடையவும் தெசையில் 7-மாதியுடன் கூடியிருக் கப்பட்ட கிரகத்தின் நவாம்சராசியின் 22-வது திரேஷ்காண திரிகோ ணங்களில் குரு கோட்சாரத்தில் வரும்போதும் விவாகம் நடக்கும்.

76. சுக்கிரனுடனும், குடும்பாதிபதி, களத்திரஸ்தானாதிபதி இவர்களுடனும் கூடி யிருக்கப்பட்ட சுபர்களெத்தனை பேர்களோ அத்தனை களத்திர மிருக்கும்.

77. சுய க்ஷேத்திரத்தில், குடும்பாதிபதி, களத்திரஸ்தானாதி பதி இவர்களிருந்தால் கடைசி வரையில் ஏகதாரமே யிலாகும். ஏக என்பது ஒன்றே ஒன்று.

78. சுக்கிரன் சரராசியிலிருந்தாலும் குரு 7-ல் இருந்தாலும் லக்கினதிபதி பலிஷ்டனாகி யிருந்தால் சற்களத்திரமும்.

79. ஒன்பதாமாதிபதி 7 மாதிபதி இவர்கள் நீச்சராசியில் சர நவாம்சையில் பாபராசியில் வெகு பாபருடன் கூடி யிருந்தாலும், அலிக்கிரகம் 7-ல் இருந்தாலும் உதயநவாம்சத்தி லிருந்தாலும் இஷ்டமான தாரம் வாய்க்கும், வேறு ஒரு கிரந்தப்படி 2 தாரம் என்றும் வேறு சில கிரந்தப்படி 8 தாரம் வாய்க்கும் என்றும் ஏற்படுகின்றது

80. இரட்டை † ஹ்ருஸ்வ சூரூப ராசிகளில் சுக்கிரனிருந்து சுக்கிரனிருக்கும் ராசியாதிபதி தன் உச்சத்திலிருந்து 7 மாதியும் பலமுடையவனு யிருந்தால் வெகுதாரங்களேற்படும்.

81. 7 மாதி கேந்திரத்திலிருந்து சுபரால் பார்க்கப்பட்டா லும் கோபுராம்சத்தில் ஒன்பதாமிடத்திலிருந்தாலும் சத்களத்திர மேற்படும்.

82. 7 மாதி சுபர் ராசியிலிருந்து சுக்கிரன் தன் உச்ச கோட்சேத்திரங்களிலிருந்தால் 5 அல்லது ஒன்பது வயதில் விவாகமும்.

83. 7 மிடத்தில் சூரியனிருந்து 7 மாதி சுக்கிரனுடன் கூடி யிருந்தால் 7 அல்லது 11-வது வயதில் விவாகமும்.

84. 2 மிடத்தில் சுக்கிரனிருந்து 7 மாதி 11-ல் இருந்தால் 10 அல்லது 16 வயதில் விவாகமும், *

85. லக்கின கேந்திரத்தில் சுக்கிரனிருந்து 7-க்குடையவன் சனியின் வீட்டிலிருந்தால் 11 வயதில் விவாகமும்,

86. 4, 7, 10 ஆகிய இவ்விடங்களில் சுக்கிரனிருந்து மேற் படி சுக்கிரனுக்கேழில் சந்திரனிருந்தால் 12 அல்லது 19 வயதில் விவாகமும்.

87. சந்திரனுக்கேழில் சுக்கிரனிருந்து சுக்கிரனுக்கேழில் சனி யிருந்தால் 18 வயதில் விவாகமும்.

88. 2 மாதி 9-ல் இருந்து 7 மாதி 2-ல் இருந்தால் 13 வயது அடைந்ததும் விவாகமும்.

---

* 84-வது அவிட்டம் கும்பலக்கினத்திற்கு மட்டும் சோரது.

† ஹ்ருஸ்வ ராசிகள் எவை என்பதை நமது ஜாதக சாகரம் இரண்டாம் பாகத்தில் பார்க்கவும்.

89. 2 ஆம் இடத்தில் சுக்கிரனும் 2 மாதி செவ்வாயுடனும் இருந்தால் 20 வயதில் அல்லது 22 வயதில் விவாகமும்.

90. லக்கினத்தின் 7-வது நவாம்சமுதயமாகி 7 மாதி 12-ல் இருந்தால் 23 அல்லது 26 வயதில் விவாகமும்.

91. மேற்படி 8-வது அம்சத்தில் 7 மாதியிருந்து லக்கினாதி பதி சுக்கிரனுடன் கூடி யிருந்தால் 23 அல்லது 25 வயதில் விவாகமும்,

92. 5-ல் சுக்கிரனிருந்து (ராகு 4-ல் இருந்தால் 31 அல்லது 34 வயதில் விவாகமும்) 8-ல் ராகு இருந்தாலும் இதே வயதில் விவாகமும்.

93. * 3 மிடத்தில் சுக்கிரனிருந்து 9-ல் 7 மாதி இருந்தால் 27 அல்லது 30 வயதில் விவாகமும்.

94. 7 மாதி நீச்சராசியிலிருந்து சுக்ரன் 8, 6 இவ்விடங் களில் இருந்து மூடத்திலிருந்தாலும் 8-ல் சுக்கிரன் சத்துரு ஸ்தானத்தில் மூடத்திலிருந்தாலும் 18 அல்லது 33 வருஷத்தில் தாரநாசமும்.

95. 7 மாதி 8-ல் இருந்து 12 மாதி 7-ல் இருந்தால் 19 வருஷத்தில் தாரநாசமும்.

96. ராகு 2 ஆம் இடத்திலிருந்து 7-ல் செவ்வாயிருந்து பாப ருடனும் கூடி யிருந்தால் விவாகமான 3 வருஷத்தில் அக்னி, பாம்பு கடித்தல் இவற்றால் தார மரணமும்.

97. 2 ஆம் இடத்தில் ராகுவும் 7-ல் செவ்வாயும் இருந்து பாபருடன் சுக்கிரன் கூடி யிருந்தால் விவாகமான 3 நாளில் தாரத் திற்கு மரணமும்.

98. செவ்வாயுடன் கேது கூடி 5 ஆம் இடத்திலிருந்து 11-ல் குரு ராகுவுடன் கூடி யிருந்தால் விவாகமான 7-ம் நாளில் பாம்பு கடித்துத் தாரத்திற்கு மரணமும்,

99. 8-ல் சுக்கிரனிருந்து 8 மாதி சனியின் வீட்டிலிருந்தால் 12 அல்லது 19-ம் வருஷம் தாரநாசமும், (இந்த 99-வது அயிட்டம் விருச்சிக மகர கும்பங்களுக்கு நேராது.)

* 93-வது ஐடம் தனுசு கும்பம் மீனம் இவைகளுக்குப் பொருந்தாது.

100. லக்கினதிபதி நீச்சராசியிலிருந்து 2 மாதி 8-ல் இருந்தால், 13 வருஷத்தில் தாரநாசமும்,

101. சுக்கிரனுக்கேழில் சந்திரன் இருந்தாலும் சந்திரனுக்கேழில் புதனிருந்தாலும் 8 மாதி 5-ல் இருந்தாலும், முதல் தாரம் 10-வருஷத்திலும் மறுபடி 22-ல் 2-ம் தாரமும் 33-ல் 3-ம் தாரமும் விவாகம் நடக்கும்.

102. 2 மாதி நீச்சராசியிலிருந்து மூடத்திலிருந்தாலும், சத்துருராசியி லிருந்தாலும், நீச்சராசியிலேயே நீச்ச நவாம்சையி லிருந்தாலும், நீச்ச ஷட் வர்க்கத்திலிருந்தாலும் குடும்பச்சேத முண்டாகும்.

103. 7 மாதி யிருக்கப்பட்ட நவாம்ச நாதனுவது 7 மாதியுடன் கூடி யிருக்கும் கிரகநவாம்ச நாதனுவது, சுபருடன் கூடியல்லது பலமுடையவனுக பாராவதாம்சாதி அம்சங்களில் புதனுடன் கூடியிருந்தாலும் ஜாதகன் 100 ஸ்திரீகளுடன் கூடியவனுவன்.

104. 2 மாதி யிருக்கும் ராசிநாதன் ஐராவதாம்சம், கோபுராம்சம் இத்யாதி அம்சங்களில் இருந்தாலும் சுபர்கேந்திர மத்தியில் குருவின் அம்சத்தில் இருந்தாலும் 200 ஸ்திரீகள் மனைவியாவார்கள்.

105. சுக்கிரன் 7 மாதிபதியாகி சுயக்ஷேத்திரமூலத் திரிகோணத்தி லிருந்தாலும், 5, 9, 8, 11 ஆகிய ஸ்தானங்களிலிருந்தாலும் நல்ல குணமுள்ளதாரம் வாய்ப்பாள்.

106. 7 மாதி சுக்கிரன் சொட்சேத்திர சுய நவாம்சத்தில் அல்லது கேந்திரத்தில் இருந்தால் சத்களத்ரமுண்டாகும். மேற்படி சுக்கிரன் சரநவாம்சையில் சுபருடன் கூடினுலும் சுபாம்சத்திலிருந்தாலும் 2 தார மேற்படும்.

107. கடகத்தில் சுக்கிரனிருந்து 7-ம் சந்திரன் இருந்தாலும் கடகத்திலேயே சந்திர சுக்கிரர் கூடியிருந்தாலும் சத்களத்ரம் வாய்க்கும் என்று சிலரும் 2 தாரம் வாய்க்குமென்று வேறு சிலரும் சொல்லுகின்றனர்.

108. 7-ஆம் இடத்தில் சுக்கிரனிருந்து சூரியன் புதனிவர்களுடன் கூடி யிருந்தாலும், மூடத்தில் அல்லது பாபவர்க்கத்தி லிருந்தாலும் பரஸ்திரீ சேர்க்கை யுண்டாகும்.

109. 7-ஆம் இடத்தில் சுக்கிரனிருந்து நீச மூடத்திலுமிருந்து பாபருடன் கூடி யிருந்தாலும் பாபரால் பார்க்கப்பட்டாலும் நீச்ச ஸ்திரீ சேர்க்கை யுண்டாகும்.

110. 6-க் குடையவன் சுக்கிரனுடன் கூடி இருவரும் மூடத்தில் கேந்திரத்திலிருந்தாலும் அல்லது சனியுடன் கூடி யிருந் தாலும் மத்திய ஸ்திரீ சேர்க்கை யுண்டாகும்.

111. சனியின் அம்சத்தில் சுக்கிரனும் சுக்கிரன் அம்சத்தில் சனியும் இருந்தாலும் செவ்வாயினம்சத்திலிருந்தாலும் பக சும்பனம் செய்வர்.

112. 7-ஆம் இடத்தில் சுக்கிரனிருந்து சுபக்கிரகத்தினுல் பார்க்கப்பட்டாலும் பாபாம்சத்தில் பாபர் மத்தியில் இருந்தால் மூட ஸ்திரீ சேர்க்கை ஏற்படும்.

113. 2 மாதிபதி, சுக்கிரன், ராகு சனி இவர்களுடன் கூடி யிருந்தாலும் அல்லது மூடராசியி லிருந்தாலும் பக சும்பனம் செய்வர்.

114. 2 மாதி 7 மாதி இவர்களின் சேர்க்கையுள்ள கேந் திரத்தில் சூரியன் புதனிவர்களிருந்து குருவால் பார்க்கப்படாமலு மிருந்தால் வர்ணஹீனம் அதாவது ஜாதிக்குறைவு, வழிகுறைவு புருஷஹீனம் இத்யாதிகளால் போக முடையவர்களாவார்கள்.

115. லக்கினத்திற் கேழில் பாபரிருந்தால் தாரத்தினுல் விசார முண்டாகும். மேற்படி 7 மாதியே பலமுடையவனுகிப் பாபருடன் கூடி எங்கிருந்தாலும் 2 தாரம் ஏற்படும். அதுவுமில்லையேல் தாரத்துக்குக் கிரகசங்கை பீடை யேற்படும், அப்படி யில்லாவிடில் கர்ப்பகாலத்தில் பீடை யேற்படும், அல்லது தாரவர்க்கத்தில் அரிஷ்டங்கள் சம்பவிக்கும், அல்லது மறுதாரத்தினிடம் போக முண்டாகும். அல்லது பரஸ்திரீ சங்கமமுண்டாகும். அல்லது கர்ப்பகோளத்தில் கிருமி பீடை யுண்டாகும். அல்லது காலங்கடந்து புத்திர உற்பத்தி யுண்டாகும். முதலில் பெண் பிரஜை பிறக்கும் அல்லது தாரநாச முண்டாகும். அல்லது சகோதர வர்கத்தில் அரிஷ்ட முண்டாகும். அல்லது தாரத்தினிடம் வாக்கு குறூரத் தனம் காரணமாக துவேஷமுண்டாகும். அல்லது மனைவி மலடி யாவள். அல்லது சிசுக்களைப் பெற்றிழப்பாள், அல்லது கர்ப்பங்க

எழிந்து விடும், அல்லது நோயுறுவாள். அதுவுமில்லையேல் சோரம் போவாள், அல்லது தரித்திரமாவது, யோகமாவது நேரிடும்.

116. சிம்மராசியில் ஜன்ம காலத்தில் உத்திரம் 1-வது பாதத்தில் சந்திரனிருக்கப் பிறந்தால் 3-வது தெசையின் முடிவின்போது விவாகம் தனுசு லக்ன ஜாதகனுக்கு நடக்கும். மேற்படி தனுசு லக்கினத்திற்கே.

117. 7 மாதி 12-ல் இருந்து சுக்கிரனுடன் சூரியன் கூடியிருந்தால் 2 தாரம் ஏற்படும்.

118. 7 மாதி நீச்சத்தில் உச்சாம்சத்தில் ஆயில்யம் 2-ல் இருந்து சுக்கிரனும் நீச்சத்தில் உத்திரம் நாலாவது பாதத்தில் உச்சாம்சத்தில் இருந்தால் பாக்கிய வமிசத்தில் விவாகம் நடக்கும்.

119. மிதுன ராசியில் புனர்பூசம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து ஜனித்தால் 10 அல்லது 12 வயதில் விவாகம் நடக்கும். பாக்கியசாலியான மனைவியாவாள்—ரிஷப லக்கினம்.

120. மேற்படி மிதுன ராசியிலேயே புனர்பூசம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து தனுசு ஜன்ம லக்கினமாகின் இரண்டாம் திசை சுயபுக்தியில் விவாகம் நடக்கும்.

121. மகர ராசியில் உத்திராடம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து பிறந்தால் 3-ம் தெசையில் 10 அல்லது 12 வயதில் உறவினரில் விவாகம் நடக்கும். புருஷ ஜாதகமானல் 2 தாரம் ஏற்படுமென்பது சில ரிஷிகளின் மதம்—மிதுன லக்கினம்.

122. விருச்சிக ராசியில் கேட்டை 1-வது பாதம் ஜன்ம நக்ஷத்திரமானல் 2-வது தெசை சுயபுக்தியில் விவாகம் நேரிடும். இதற்கே 9-ல் குருவும் செவ்வாயும், 11-ல் சுக்கிரனும் கேதுவும் கூடில் மறுதாரமும் ஏற்படும், கிலேசமு முண்டாகும். மேலும் மேற்படி சுக்கிரனுக் கேழிலும் பாபரிருந்தால் தாரத்தினுல் வெகு கிலேசமும் தாரத்தின் சுகமின்றியும் இதற்கே 7 மாதி பாபருடன் கூடினுல் வழி வழியாக தாரலாபமும், தாரமூலம் விசாரமும், அனேக தாரங்கள் நாசமும் 5 அல்லது 7 தாரங்கள் வரை விவாகமும் முன் ஜன்மத்தில் தன்னை நெருங்கிய ஸ்திரீயைக் கொன்ற தோஷம் காரணமாக ஐந்து அல்லது ஆறு தாரம் வரை நாசமும் நேரிடும். ஏழாந்தாரம் (சாந்தி செய்த பின்பு) நிலைக்கும்—மிதுன லக்கினம்.

123. துலா ராசியில் சுவாதி 3-வது பாதத்தில் சந்திரனிருந்து ஜன்மலக்னம் சிம்மலக்கினமாகி ஜனனமானால் இரண்டாவது தெசையில் குருதெசை சுக்கிரபுத்தி வந்தால் விவாகம் நடக்கும்.

124. மேஷ ராசியில் அசுவனி 3-வது பாதத்தில் சந்திரனிருந்து அல்லது மேஷத்தில் யுக்மாம்சத்தில் சந்திரனிருந்து மகரம் ஜன்ம லக்கினமானால் சுக்கிரன் ரோகிணி 2-வது பாதத்திலிருந்தால் ரூபசாலியான மனைவி வாய்ப்பாள். இதற்கே சனி 7-ல் இருந்தால் 2 தாரம் ஏற்படும். மேற்படி சனியை சுபர் பார்த்தால் 2-ந்தாரம் நேரிடாது. ஆனால் தாரத்திற்கு ரோக பயமுண்டாகும். இதுவே தனுர் லக்கினமானால் 2 தாரம் ஏற்படும். மேஷ, மகர, கடக துலாலக்கினங்களுக்கு நேரிடாது ஏகதாரமாகவே நேரிடும்.

125. கும்பராசியில் சதயம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் அதுவே ராசியானால் பதினான்கு பதினைந்து வயதில் விவாகம் நடக்கும்.

126. மகர ராசியில் ஜென்மகாலத்தில் திருஓணம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து கன்னியா லக்கினத்தில் ஜனனமாகின் பதினான்காவது வயதில் விவாகம் நேரிடும். முன் ஜென்ம பாபத்தின் காரணமாக இவள் கணவனுடன் ருதுசாந்தி காலத்தில் விரோத மடைவாள். இதற்கு குரு சூரியர் கூடி 11-லும் சனி 6-லும் சுக்கிரன் 12-லும் இருக்கவேண்டும். இப்படியிருந்தாலும் இத்துடன் 2-ல் ராகு இருந்தாலும் 30 வயதுக்குமேல் 2-வது விவாகம் நடக்கும். 2-வது விவாகத்திற்கு 2 அல்லது 3 தடவை பிரயத்தனம் செய்தபின்பு நடக்கும்.

127. துலா ராசியில் விசாக நக்ஷத்திரம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் மேஷமாக ஜனித்தால் 2-வது தெசை சுக்ர புத்தியில் பந்து வர்க்கத்தில் விவாகம் நடக்கும்.

128. கடக ராசியில் பூசம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து தனுசு லக்கினமாக ஜனித்தால் 7-மாதிபாகிய புதன் நீச்சத்திலிருந்து சுக்கிரன் சூரியனிவர்களுடனும் கூடினால் மறுதாரமும் வாய்க்கும். அதாவது 2-தார மேற்படும். முதல் தாரம் 24-வது வயதில் பிரசவத்தில் மரிக்கும். கேது தெசை சுக்கிர புத்தியில் பிறகு மறுதாரம் வாய்க்கும்.

129. தனுசு ராசியில் மூலம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் மிதுனமானால் 2-வது தெசையில் 12 அல்லது 14-வது வயதில் விவாகம் நடக்கும்.

130. ரிஷப ராசியில் ரோகிணி 1-வது பாவத்தில் சந்திரனிருந்து மீனம் லக்கினமாகி சுக்கிரன் நீச்சமடைந்து இருக்க 7-மாதியான புதன் சூரியனுடன் கூடி 5-ல் இருந்தால் பாக்கிய வமிசத்தில் 12 அல்லது 14-வது வயதில் உறவினரில் விவாகம் நடக்குமென்று மனு சொல்லுகிறார். புருஷ ஜாதகத்தில் மேற்படி சுக்கிரனுடன் செவ்வாய் கூடினால் வீட்டில் வைப்பு ஏற்பட்டு மனைவிக்குக் கஷ்டமுண்டாகி அதனால் விசார மேற்படும். மனைவி மூர்க்ககுண முடையவளாவாள்.

131. கன்னியா ராசியில் ஹஸ்தம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து கன்னியா லக்கினத்தில் ஜனனமடைந்து குரு துலாத்திலும் சுக்கிரன் 11-லு மிருந்தால் தான் பிறந்த ஊருக்கு மேற்கில் அல்லது வடக்கில் (தன்) இருபது வயதில் பதிபக்தியுள்ள மனைவி வாய்ப்பாள்.

132. கன்னியா ராசியிலேயே சித்திரை 2-வது பாதத்தில் சந்திரனிருந்து சிம்ம லக்கினமாக ஜனித்து சுக்கிரனுடன் கூடி 5-ல் இருக்கும் ராகு தெசை நடந்தால் மேற்படி தெசையில் மேற்படி சுக்கிர புத்தியில் விவாகம் நடக்கும். இதற்கே லக்கினத்தில் குருவுமிருந்தால் 2 அல்லது 3 விவாகம் ஏற்படும். 7-மாதி திசையில் புத புக்தியில் மனைவி மரித்தபின் சுக்கிர புத்தியிலாவது பிறகு ராகு புக்தியிலாவது சந்தேகமின்றி விவாகம் 2-வதாக நடக்கும். இந்த 2-வது விவாகம் எருக்கஞ் செடிக்காகும். 3-வது தாரத்தை யோக மணப்பான்.

133. விருச்சிக ராசியில் கேட்டை 4-வது பாதத்தில் சந்திரனிருந்து மீன லக்கினத்தில் பிறந்து 2-ல் 7-மாதியும் சூரியனுமிருந்து சுக்கிரன் ராகுவோடு கூடி 4-ல் இருந்தாலும் சந்திரன் நீச்சத்திலிருந்தாலும் இரு தாரமேற்படுவர். 19-ல் அல்லது 20-ல் முதல் விவாகமும் 3-ந் தெசை முடிவில் புத புத்தியில் தார நாசமும் பிறகு மறு விவாகமும் நடக்கும்.

134. சிம்ம ராசியில் பூரம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து சிம்ம லக்கினமாக ஜனித்து சனி கடகத்திலும் சுக்கிரன் கேதுவுடன் கூடி துலாத்திலும் இருந்தால் இரண்டு விவாக மேற்படும்.

135. மேஷ ராசியில் அசுவனி 3-வது பாதத்தில் சந்திரனிருந்து சந்திரனுடன் நீச சனி கூடினாலும் லக்கினம் மகரமாக ஜனித்தவர்களுக்கும் இரு விவாக மேற்படும்.

136. மீனத்தில் சந்திரனிருந்து செவ்வாய் 8-மாதியாகி அங்கு சந்திரனுடன் கூடில் 25-ம் வயதில் விவாகம். 3-வது தெசையில் நடக்கும்.

137. கன்னியா ராசியில் உத்திர நக்ஷத்திரம் 3-வது பாதத்தில் சந்திரனிருக்கப் பிறந்து லக்கினம் சரதுலாமாகி சனி 8-லும் சுக்கிரன் 2-லும் செவ்வாய் 4-லும் இருந்தால் இரு விவாகம் ஏற்படும்.

138. மேஷ ராசியில் அசுவனி 2-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் ரிஷபமாக ஜனித்தால் 8-ல் சனி 2-ல் சூரியன் இப்படியிருந்து செவ்வாய் நீசமடைந்திருந்தால் 35-வது வயதில் அல்லது 37-ல் தாரநாசமும் பிறகு மறு விவாகமும் நடக்கும்.

139. மகர ராசியில் சந்திரனிருந்து விருச்சிக ராசியில் ஜனனமடைந்தால் 14 அல்லது 15 வயதில் பந்து வர்க்கத்தில் விவாகம் நடக்கும்.

140. ரிஷப ராசியில் கிருத்திகை 3-வது பாதத்தில் சந்திரனிருந்து சிம்ம லக்னமாக ஜனித்தவர்களுக்கு 7-ல் கேதுவிருந்து செவ்வாயும் களத்திரகாரக சுக்கிரனும் 6-ல் இருந்தால் 2 விவாகம் நேரும். 4-ந் தெசை சுயபுக்தியிலாவது குரு புக்தியிலாவது தாரநாச மேற்படும். பிறகு சனி புக்தியில் விவாகம் 2-வது நடக்கும்.

141. துலா ராசியில், சுவாதி நக்ஷத்திரத்தின் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து சிம்மலக்னமாக ஜனித்து 12-ல் குஜன் 7-ல் சனி யிப்படியிருந்து ராகுவோடு சுக்கிரன் கூடி 4-ல் இருந்து சனியின் பார்வையை சுக்கிரனடைந்தால் 3 தாரம் ஒன்றன்பின்னொன்றாக மரித்துவிடும்; பிறகு 4-ந் தாரத்திளிடம் சுகம் உண்டாகும். முதல் தாரம் 25-வது வயதில் பிரசவத்திலும் 2-ந் தாரம் ஒரு பெண் பிறந்த பின்பு துர் மாணமாக 33-லும் மரித்த பின், உடனே அதே

வருஷத்திலேயே 3-ந்தாரம் விவாகமாக உடனேயே இவள் மரித்துப் போனபின், 36-ல் 4-ந்தார விவாக முண்டாகும்.

142. ரிஷப ராசியில், ரோகிணி 4வது பாதத்தில் சந்திரனிருந்து கன்னியாலக்கினமாக ஜனித்து குரு நீச்சராசியில் லக்னாதிபதி சுக்கிரன் இவருடன் கூடி யிருந்து சனியுடன் கூடிய சந்திரனேயும் மேற்படி குருவையும் செவ்வாய் பார்த்தால் 10 அல்லது 12 வயதில் பாக்கியவம்சத்தில் ஜன்ம கிராமத்தில் வெகு சிறிய குழந்தைப் பருவமான பெண்ணை மணப்பான். இரு தாரயோக முடையவன், 30-வது வயதில் முதல் தாரம் மரித்தபின் வெகு சீக்கிரமே மறு விவாகம் நேரும்.

143. சிம்ம ராசியில், பூரம் 4-ம் பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் கும்பமாக ஜனித்தால் 3-ந் தெசையில் அல்லது 4-ந் தெசையில் உறவினரில் விவாகம் நடக்கும்.

144. கடக ராசியில் ஆயில்யம் 2-வது பாதத்தில் சந்திரனும் கும்ப லக்னமுமாக ஜனித்தாலும்,

145. தனுசு ராசியில் பூராடம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து கடக லக்னமாக ஜனித்தாலும் மூன்றுவது திசையில் தாரநாசமும் மறுவிவாகம் உடனேயும் நடக்கும் இதற்கு சனி ராகு 4-லும் 7-ல் ரவி, குஜ, புதகுருவும் இருந்தால் இப் பலனுண்டாகும்; இல்லையேல் ஏகதாரமே யாகும்.

146. மேஷ ராசியில் பரணி 1-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்னம் கும்பமாக ஜனித்தால் சூரியனும் சுக்கிரனும் 10-ல் இருந்தால் 17 அல்லது 18 வயதில் அல்லது 20 வயதில் விவாகம் நடக்கும். இரு தாரயோகம்.

147. மீன ராசியில் உத்திரட்டாதி 2-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்னம் மகரமாகி சனி சுக்கிரர் கூடி 5-ல் இருந்து 7-ஆம் இடம் சனியால் பார்க்கப்பட்டால் 2-ந்தாரம் நேரிடும்.

148. துலாராசியில் சுவாதி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து மேஷ லக்னத்தில் ஜனித்து லக்கினாதிபதி 5-ல் இருந்து சுக்கிரன் 7-ல் இருந்தால் 12 அல்லது 14 வயதில் விவாகம்.

149. தனுசு ராசியில் உத்திராடம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து கும்ப லக்னமாக ஜனித்து சுக்கிரன் சித்திரை 2-வது

பாதத்திலும் 7-மாதி நீச்சத்திலும் இருந்தால் தாயற்ற பெண்ணை 20 அல்லது 25-ம் வயதில் மணப்பான்.

150. ரிஷப ராசியில் ரோகிணி 2-வது பாதத்தில் சந்திரனிருந்து மேஷ லக்னமாக ஜனித்தால் 3-வது தெசையில் விவாகம் நடக்கும்.

151. சிம்ம ராசியில் மகம் 1-வது பாதத்தில் சந்திரனும் துலாம் லக்கினமுமாக ஜனித்து சுக்கிரன் 10-லும் 12-ல் குரு குஜரும் இருப்பின் 9-10 இந்த வயதுகளிலாவது 12 வது வயதிலாவது தன்னூரிலேயே பாக்கிய வமிசத்தில் விவாகம் நடக்கும்.

152. மிதுன ராசியில் திருவாதிரை 3-வது பாகத்தில் சந்திரனிருந்து அதுவே ஜன்ம லக்கினமுமானல் 10-ல் சுக்கிரனிருந்தால் ஸ்திரீ லோலனுவன்; வெகுகாமி.

153. சிம்ம ராசியில் பூரம் 4-வது பாதம் ஜன்ம நக்ஷத்திரமும் லக்னம் கும்பமுமானல் சூரியன் புதன் சுக்கிரன் குஜனிவர்கள் கூடி 3-ல் இருந்தால் இரு தாரம் நேரிடும்; ஓரே தாரமாயின் பரஸ்திரீ கமனி யாவன். 27 அல்லது 30-ல் தார சுகமடைவான்.

154. கும்ப ராசியில் சதயம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் மகரமானல் சுக்கிரன் 5-லும் குரு 11-லு மிருந்தாலும் 8-ல் ராகு இருந்தாலும் 20-லாவது 25-லாவது அல்லது 27-லாவது ரூபவதியான மனைவி வாய்ப்பாள்.

155. மகர ராசியில் அவிட்டம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து சிம்ம லக்கினமாக ஜனித்து சுக்கிரன் நீச்சத்திலும் சனி 10-ல் இருந்து செவ்வாயால் பார்க்கப்பட்டு மிருந்தால் 20 அல்லது 22 வயதில் விவாகம் நடக்கும்.

156. மேஷ ராசியில் பரணி 2-வது பாதத்தில் சந்திரனிருந்து தனுசு லக்கினமானல் 3-வது தெசையில் குரு புக்தியில் உறவினரில் விவாகம் நடக்கும், இருதார யோக முண்டாகும்.

157. சந்திரன் விருச்சிகத்தில் இருந்து ரிஷப லக்கினத்தில் பிறந்தால் 3-வது தெசையில் சுயபுக்தியில் விவாக மடைவான். இவனுக்கு 2 தார மேற்படும். 3-தார மென்பது சிலர் மதம்.

158. தனுசு ராசியில் மூலம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 7-ல் பாபருமிருந்து சுக்கிர சூரியர் கூடினல் 2 தாரம் ஏற்படும்.

முதல் தாரம் சுக்கிரதெசையில் பிரசவத்தில் மரிக்கும். பிறகு மறு விவாகம் நடக்கும்.

159. துலா ராசியில் சித்திரை 4-வது பாதத்தில் சந்திரனிருந்து கடக லக்னமாகப் பிறந்தால் குரு தெசையில் விவாகம் நடக்கும்.

160. தனுசு ராசியில் மூலம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து துலா லக்னமாக ஜனித்தால் லக்கினத்தில் புதனும் 3-ல் சுக்கிரனுமாகின் சுக்கிர தெசை புத புக்தியில் உறவினரில் ரூபவதியான பெண் மணமாகும்.

161. சுக்கிரனுடன் சனி கூடி துலாத்திலிருக்க ராகு கூடிய லக்கினம் மேஷமாகினும் 2-தாரம் வாய்க்கும். இத்துடன் 5-ல் குஜனிருந்தால் மனைவிக்கு கிரக சங்கையினால் ஏழு கர்ப்பம் வரையிலும் நஷ்ட முண்டாகும். சில கிரந்தப்படி 5-கர்ப்ப நஷ்டமென்று ஏற்படுகிறது.

162. 7-ல் குரு சனி புத சுக்கிரரிருந்து அல்லது சனி கூடாமல் பார்த்து மேஷ லக்கினத்தில் பிறந்தால் 3-தாரம் ஏற்படும்.

163. லக்கினாதிபதியாகிய சுக்கிரன் 3-ல் ராகுவுடன் கூடில் ஏகதாரமே நிலையாகும். இப்படியே ராகு சுக்கிரர் கூடி 9-ல் இருந்தால் விவாகத்திற்கு முன்னாடியும் பிந்தியும் ஒரு அன்னிய ஸ்திரீயுடன் வாழ்க்கை யுண்டாகும்—ரிஷப லக்கினம்.

164. 7 மிடத்தில் 9-க்குடையவனிருந்து 7-க்குடையவர் குருவின் ராசிகளான தனுசு மீன மிவைகளி லொன்றிலிருந்து 10-ல் பாபரிருந்தால் தாரம் அங்கவீன முடையதாகும், ஒரே தாரம். இது தனுசு கும்ப மிவைகளுக்கு நேரிடாது.

165. ராகு சனி யல்லது, ராகுவும் சூரியனும் 7-ல் இருந்தால் 3 விவாகம் நடக்கும். இவர்களைக் குரு பார்த்தால் மட்டும் தார சுக முண்டாகும். இல்லையேல் 3 தாரமு மிருந்தாலும் தார சுக முண்டாகாது.

166. லக்கினம் சந்திரனிவற்றிற்கு 7, 9-ஆம் இடங்களில் பாபரிருந்தால் 3 தார மேற்படும். 7 மாரூடத்திற்குமிப்படியே யுண்டாகும்; தாரநாசமுமுண்டாகும்.

167. 7, 2 ஆகிய ஸ்தானங்களில் பாபர்களின் இருப்பும் பார்வையும் ஏற்பட்டு 2, 7 மாதிகள் பலவீனர்களாகவும் ஆனல் கட்டாயம் மறுதாரம் ஏற்படும்.

168. விருச்சிக ராசியில் அனுஷம் 4-வது பாதத்தில் சந்திரனிருந்து மிருகசீரிஷம் 1-வது பாதத்தில் ரிஷப ராசியில் செவ்வாய் ராகுவுடன் கூடி யிருந்தால் சிம்ம லக்னத்தில் பிறந்தவனுக்கு 3-வது தெசையில் தார நாசமும் மறுவிவாகமும் நடக்கும். சில கிரந்தகர்த்தர்கள் 4-ந்தெசையில் 2-ந்தார விவாகமென்று சொல்லுகிறார்கள்.

169. தனுசு ராசியில் மூலம் 4-வது பாதத்தில் குரு சனியுடன் கூட விருந்து சிம்ம லக்கினத்தில் பிறந்தால் 2 தார மேற்படும்.

170. மீன ராசியில் உத்திரட்டாதி 1, பூரட்டாதி 4 இந்த நக்ஷத்திர பாதங்களில் ஒன்றில் சந்திரனிருந்து அவிட்டம் 1-ல் மகர ராசியில் செவ்வாயும் மேஷ ராசியில் அசுவனி 1-லாவது பரணி 4-லாவது சுக்கிரனு மிருந்தால் விருச்சிக லக்கினத்தில் அனுஷம் 2-வது பாதத்தில் பிறந்தால் ரிஷப சனி தெசையின் கடைசியில் விவாக மடைவர்.

171. 7-மாதிபதி பாபாம்சத்திலிருந்து, அதாவது சுக்கிரன் 7 மாதிபதியாகிய அசுவனி 1-வது பாதத்திலிருந்து 7-ல் சனி கேது கூடினுலும் 2-மாதி 4-ல் இருந்து அஷ்டமாதிபதியுடன் கூடினுலும் இரு தார மேற்படும். 2-ந்தாரம் ஏற்படாதென்பது கர்க்கருடைய மதம். ஆனல் பரஸ்திரீ கமனி யாவன் என்று மனு சொல்லுகிறார், இங்கு மனு சொல்லுகிறார் என்பதைப்போல் அநேக இடங்களில் சிலர் என்றும் சில கிரந்தம் என்பதும் இது எழுதப்பட்ட மூலக்கிரந்த கர்த்தாவாலேயே குறிக்கப்பட்டிருக்கிறார்கள்.

172. துலாராசியில் சித்திரை 3-வது பாதத்தில் சந்திரனிருந்து சனி செவ்வா யிவர்களுடன் கூடினல் 3-வது தெசை முதலில் சுயபுக்தியில் தகப்பனற்ற பெண்ணை (தன் தகப்பனின் சகோதரியின் புத்திரியை) மணப்பான், வெகு ஸ்திரீகளுக்கு நாயகனுவான்.

173. 2-லாவது 7-லாவது தனுசிலாவது, கன்னியிலாவது குரு இருந்து சனியுடன் கூடியல்லது சனியால் பார்க்கப்பட்டால் 3-தார மேற்படும். அதாவது தனுசில் பிறந்து குரு நீச்சமடைந்து சனியால் பார்க்கப்பட்டாலும், குரு துலாத்திலிருந்து கன்னியில் பிறந்து சனியால் குரு பார்க்கப்பட்டாலும், 2-தாரம் நாச மடையும். மேற்படி குருவுடன் சனி கூடியிருந்தாலும் இப்பலனே யுண்டாகும்.

174. மகர லக்கினத்தில் பிறந்து லக்கினத்தில் ரவி குஜரும் 7-ல் குருவும், 10-ல் சனியும் சுக்கிரன் மீனத்தில் இருந்தாலும் இப்படியே. சித்தப்பனுக்கு இருதாரம் ஏற்படும்.

175. தனுசு ராசியில் மூலம் 2-வது பாதத்தில் சுக்கிரனிருந்து மிதுனத்தில் பிறந்து குரு 10-லு மிருந்தால் சத் களத்ரம் வாய்க்கும்.

176. துலா ராசியில் சித்திரை 3-வது பாதத்தில் சந்திர னிருந்து சுக்கிரன் மிதுன லக்கினத்திற்கேழிலும், கும்பத்தில் 9-ல் ராகுவு மிருந்தால் 3 தாரமேற்படும். அந்திய காலத்தில் தாரத் தினல் சோக மூண்டாகும்.

177. மீன ராசியில் ரேவதி 4 பாதம் ஜன்ம சந்திரனிருந்து மீனமே லக்கினமாக ஜனித்தால் உத்திரம் 2, 3-வது பாதங்களில் சுக்கிரனும் குருவுமிருந்தால் ஜாரஸ்திரீ சேர்க்கை யுண்டாகும். அல்லது மனைவி சோரம் போவாள். மேற்படி 7 ஆமிடத்தில் கன்னியில் ஹஸ்தம் 1-வது பாதத்தில் சுக்கிரனிருந்து ராகுவுடன் கூடினலும் ராகுவால் சுக்கிரன் பார்க்கப்பட்டாலும் தாரவமிசமே தோஷ முள்ளதாகும். ஜாதகன் மனைவியின் சகோதரிகூடச் சோரம் போவாள். மேற்படி லக்கினத்திற்கே 5-ல் செவ்வாயும் 6-ல் சனியும் இருந்தால் சூதிகா கிரகதோஷத்தால் தார நாச மேற் படும், பாக்கிய வமிசத்தில் விவாகம்.

178. விருச்சிக ராசியில் கேட்டை நக்ஷத்திரத்தில் சந்திர னிருந்து லக்கினம் மேஷமாகி 12-ல் சனி ராகு இருவரும் கூடி யிருந்தால் தார சுக மூண்டாகாது. மேற்படி சந்திரதிசை வரும் போது குரு புத்தியில் தாரநாச மூண்டாகி க்ஷேமத்துரும பலனு மேற்படும். மேலும்,

179. மேற்படி கேட்டை நக்ஷத்திரத்திலேயே சந்திரனிருந்து பூசம் 4-வது பாதத்தில் சுக்கிரனிருந்தால் வேசிஸ்திரீ சேர்க்கை யுண்டாகும். இரு தாரமு மேற்படும். 32 அல்லது 38 அல்லது 42-ல் அல்லது 44-ல் தாரத்திற்கு மரணம் சம்பவிக்கும்.

180. கும்ப ராசியில் சதய நக்ஷத்திரத்தில் சந்திரனிருந்து துலா லக்கினமாக ஜனித்து கடக ராசியில் சுக்கிரன் பூச நக்ஷத் திரத்தின் 4-வது பாதத்தில் கேதுவுடன் கூடியிருந்தாலும் இதற்கே லக்கினத்திற்கிரண்டில் சனி குலக்ன ஷஷ்டியம்சத்தில் இருந்தாலும் சகோதரன் மனைவி சோரம் போவாள்.

181. பொதுவாக 2-ல் சனி 4-ல் சுக்கிரன் 8-ல் செவ்வா யிப்படி யிருந்தாலும் மேற்படி சனி சுக்கிரனிருவரும் இரு பாபரால் பார்க்கப்பட்டால் சனிக்குத் தெசை வரும்போது குலக்ன ஷஷ்டி அம்சத்திலுள்ள மேற்படி சனிக்குச் சத்துருக்கிரகத்தின் புக்தியில் செவ்வாயின் 7 - மாதிபத்திய தோஷத்தினல் சகோதரனுக்கும் தனக்கும் தாரம் தோஷ முண்டாகும். இதுவே துலா லக்கின மானல் ஜாதகனுக்கு இரு மனைவி யேற்பட்டு இருவரும் ஆயுளுட னிருப்பர்.

182. லக்கினத்திற் கேழில் ராசியில் அல்லது நவாமிசத்தில் சனி யிருந்து செவ்வாய் ராகு இவர்களால் மேற்படி சனி பார்க்கப் பட்டால் ஜாதகன் மனைவி ரோகவதியாவாள். அல்லது துர் சொப் பன பீடையடைவாள். இதரபிரதி பந்தங்களும் ஏற்படும்.

183. லக்கினத்திற்காறில் 2 பாபரிருந்தால் 2 தாரமென்று சிலரும், 3 தாரம் என்று சிலரும் சொல்லுகின்றனர். இத்துடன் 12-ல் சனி யிருந்தாலும் இப்பலனே ஏற்படும்.

184. மிதுன ராசியில் சுக்கிரன் திருவாதிரை 4-வது பாதத்தி லிருந்து மேற்படி சுக்கிரனுக்கிரண்டில் சனி லக்கினத்திற்கு 12-ல் ஆயில்யம் 3-ல் கடக ராசியிலிருந்து ராகுவால் மேற்படி சனி பார்க் கப்படின் தாரம் துன்மார்கச் செய்கையுடையவளாவாள்.

185. சனி செவ்வாயிவர்களிருவரும் கூடி மேஷத்தில் 9-ல் இருந்தால் 2 தாரம் ஏற்படும். குருவால் இவர்கள் பார்க்கப்பட் டாலும் தாரத்திற்குப் பீடை யுண்டாகும். இதற்கே சந்திரன் ஸ்திராசி அம்சங்களிலிருந்து ராகுவால் பார்க்கப்பட்டிருந்தாலும்

ராகுவுடன் கூடி யிருந்தாலும், அல்லது சந்திரன் இரு பாபர்கள் அதாவது சனி செவ்வா யிவர்களால் பார்க்கப்பட்டாலும் தாசி வீட்டிற்குச் செல்லத் தன் வீட்டிலேயே தனத்தைத் திருடுவான். வேசி லோலன். இவனுக்கு விவாகமும் தரித்திரன் வீட்டில் நடக்கும்.

186. மேஷ ராசியில் கிருத்திகை நக்ஷத்திரத்தின் 1-வது பாதத்தில் சுக்கிரன் இருந்து கடக லக்கினமாகப் பிறந்து மிதுன ராசியில் சனி புனர்பூசம் 1-வது பாதத்திலிருக்க, மிருகசீரிஷம் 2-வது பாதத்தில் உள்ள செவ்வாயுடன் குரு கூடினல் துர்த்தை யான மனைவி வாய்ப்பாள். அல்லது மேற்படி சுக்கிரன் மேஷ ராசியில் பரணி 2-வது பாதத்திலாவது அசுவனியின் 3-வது பாதத்திலாவது இருந்தால் தாரத்திற்கு அபவாதம் மட்டும் உண்டாகும். தாரவமிசம் நாசமடையும் ஆனல் ஒரே தாரம்தான் ஏற்படும்.

187. மகர விருச்சிக லக்கின ஜாதகங்களுக்குப் பூரட்டாதி 1-வது பாதத்தில் கும்பராசியில் குரு இருந்தால் இரு தாரம் நேரிடும். அன்றி மேற்படி ஜாதகங்களுக்குப் பரணி 2-ல் சந்திரனும் மிதுனத்தில் சுக்கிரன் கேதுவுடன் கூடி யிருந்தால் எப்போதும் மைதுனமே சிந்தனையாகும்.

188. சனி சுக்கிரனுடன் கூடி 5-ல் மீனத்தில் இருந்து 10-ல் உள்ள செவ்வாயால் சுக்கிரன் பார்க்கப்பட்டால் ஜாதகன் வேசிகளை அணைவான். இவனுடைய மூத்தவன் மனைவி சன்னியாசியுடன் சம்போகம் செய்வாள்.

189. சூரியன் 7 மாதியாகி ரிஷபத்தில் 2 கிரகங்களுடன் கூடி யிருந்தால் இருதார மேற்படும்.

190. மேற்படி சூரியனே ரிஷபராசியில் ரோகிணி 4-வது பாதத்திலும் மீனராசியில் சந்திரன் உத்திரட்டாதி 4-வது பாதத்திலுமிருந்து சனியுடன் கூடியிருந்தாலும் சனியால் சந்திரன் பார்க்கப்பட்டாலும் 16 அல்லது 18 வயதில் விவாகம் இரண்டாவது தெசையில் மேஷம் முதலாவது மூன்று மாதங்களில் ஒன்றில் தப்பாமல் நடக்கும். 36-வது வயதில் முதல் தாரம் மரித்துவிடுவாள். உடனேயே மறு விவாகமுமாகும்.

191. மீனராசியில் உத்திரட்டாதியில் சந்திரனிருந்து கும்ப லக்கினமாகப் பிறந்து சனி சுக்கிரர் கடகத்திலும் கேதுவுடன்

சூரியன் கூடிச்சிம்மத்திலு மிருந்தால் 14-வயதிலாவது பிறகு மூன்றுவது தெசையில் 25 வயதிலாவது விவாகம் நடக்கும்.

192. சந்திரன் தனுசு ராசியில் இருந்து சதயம் 2-ல் கும்பத்தில் சனியும் ரேவதி 3-ல் மீனத்தில் சுக்கிரனுமிருந்து தனுசு லக்கினத்தில் பிறந்தால் விவாகத் தடை ஏற்படும். இதற்கே புதன் மிருகசீரிஷம் 1-வது பாதத்தில் ரிஷபத்தில் இருந்தால் இரண்டாவது தெசையில் 3-வது பாதத்தில் விவாகமானது தன்னூரிலேயே அல்லது வடக்கில் நடக்கும். இருதாரயோகம். பரஸ்திரீகமனமு முண்டாகும்.

193. ரிஷபலக்கின ஜாதகனுக்கு 9-ல் சனி செவ்வா யிருந்தாலும் சுக்கிரன் 7-லாவது 11-லாவ திருந்தாலும் மறு தாரம் நேரும்.

194. மேஷராசியில் கிருத்திகை முதலாவது பாதத்தில் சந்திரனிருந்து கடக லக்கினத்தில் பிறந்தவனுக்குச் சனி சூரியன் கேது கூடி 4-ல் இருந்தால் ஜாதகன் மனைவி ரோகவதியாவள். அல்லது துர்த்தத் தன்மையுடையவளாவாள். கலகக்காரி, ஆயினும் மரணமடைந்தாலும் பதிவிரதையே. இவனுக் கிருதார மென்பது சிலர் மதம்.

195. மீனராசியில் ரேவதி 2-ல் சந்திரனிருந்து கேதுவுடன் கூடி யிருந்து 2-ல் சனியும் 9-ல் ராகுவு மிருந்தால் மூலம் 1-ல் இருக்கும் சுக்கிரனுடைய தெசை நடந்தால் மேற்படி தெசையில் தாரநாசமுண்டாகி உடனேயே மறு விவாகம் நடக்கும்.—மகர லக்கினம்.

196. 5, 6, 7 மாதிகள் கூடி 7-ல் இருந்து லக்கினத்தில் குருவுள்ள மீனலக்கின ஜாதகருக்கு அதிபாலிய விவாகம். இருதாரயோகம், சிலர் மதம் 3 தார மென்பது. இத்துடன் கன்னியா ராசியில், சந்திரன் உத்திரம் 2-வது பாதத்தில் இருந்து சனி 5-ல் கடகத்தில் இருந்தாலும் மேற்படி பலனே யுண்டாகும்.

197. கடகராசியில் ஆயில்யம் 4-வது பாதத்தில் சந்திரனும் உத்திரட்டாதி 2-வது பாதத்தில் மீன ராசியில் சுக்கிரனுமிருந்து மேற்படி சுக்கிரன் ராகுவுடன் கூடினுலும் பார்க்கப் பட்டாலும் 2 தாரம் ஏற்படும், தாரவம்சம் களங்க முள்ளதாகும். இதுவே மீன லக்கினமானல் குடும்பமே விபசார தோஷ முள்ளதாகும். ஜாத

கன் தாரம் மட்டும் பதிவிரதையாகும். இந்தப்படி குடும்பதோஷ மேற்படுவதற்கு 2-ல் 6 மாதி, 11 மாதி, 7 மாதி யிவர்கள் மூவரு மிருக்கவேண்டும்.

198. விருச்சிக ராசியில் கேட்டை நக்ஷத்திரத்தில் சந்திர னிருந்து புனர்பூசம் 1-வது பாதத்தில் செவ்வாயும் சிம்மத்தில் சனி சுக்கிரனு மிருந்தாலும், சந்திரனுடன் ராகுகூடி யிருந்து குரு 7 லிருந்தாலும் இரு தாரம். 30 வயதில் முதல் தாரம் மரிக்கும். மேலும் தன் ஜன்மதேசத்தில் கிழக்கில் நகரத்தில் விவாகம் நடக்கும்.

199. தனுர் லக்கின ஜாதகனுக்குச் சனி 12-ல் ஷஷ்டி யம்சத் தில் ஹன்றுன தாவாக்னி யம்சத்திலிருந்தால் இரு தாரம் ஏற்படும்.

200. கடக ராசியில் ஆயில்யம் 4-வது பாத மல்லது புனர் பூசம் 4-வது பாதத்தில் சந்திரனிருக்கப் பிறந்தவனுக்கு நாலாவது திசை சுய புத்தியில் தாரம் நாசமடைவாள். இருதாரயோகன். உடனே சீக்கிரம் விவாகம் நடக்கும். தகப்பனின் சகோதரியின் புத்திரியை மணப்பான். இது கும்ப லக்கினமானால் ஆயில்யம் 4-வது பாதத்தில் பிறந்தவனுக்குச் சூரிய தெசை முதலிலும், புனர் பூசம் 4-வது பாதத்தில் பிறந்தவனுக்கு 4-வது தெசை சுய புக்தியிலும் தாரநாச முண்டாகி, மறு விவாகம் நடக்கும்.

201. சனி 7 மாதியாகி 2-ல் ஸ்திர ராசியில் இருந்தால் சுக் கிரன் தன் உச்ச சொட் சேத்திரங்களில் இருந்தாலும் ஏக தாரமே யாகும். மேற்படி சுக்கிரன் சரராசியில் இருந்தால் பல ஸ்திரீ சம்போக மேற்படும். ஆயினும் தாரம் மட்டும் பாக்கியமுள்ள சற்களத்திரமாக வாய்க்கும்.

202. மகர ராசியில் திருஓணம் 3-வது பாதத்தில் சந்திர னிருந்து லக்கினத்தில் செவ்வாயும், குரு 3-லும் இருக்கும் ஜாதகன் நன் மனைவியும், பலதார போகமும், வெகு பாக்கியமும் அடைவ துடன் 5, அல்லது 7, தாரம் விவாகமும் செய்து கொண்டு வாழ் வான். முதலில் 2-வது தெசையில் விவாகமடைவான். சார்வ பௌம யோக ஜாதகம்.

203. ரிஷப ராசியில் சந்திரன் ரோகிணி 2-வது பாதத்தில் இருந்து மேஷத்தில் அசுவனி 1-ல் சனியும் அங்கு சுக்கிரன் நீச்

சாம்சம் விட்டு மிருந்து, கிருத்திகை 1-வது பாதத்தில் புதனு மிருந்தால் வைசியஜாதி சூத்திர ஜாதிகளில் ஸ்திரீ சேர்க்கையும், இவர்களைக் குரு, துலாத்திலிருந்து பார்த்தால் அவர்கள் குணசாலியான ஸ்திரீகளுமாகச் சேர்க்கை யுண்டாகும். இரு தாரயோகம். மூத்த தாரம் துர்மரணமாக கிணற்றில் வீழ்ந்தாவது விஷத்தை யுண்டாவது மரிப்பாள். இது மிதுன லக்கினமானல் அனேக ஸ்திரீ சேர்க்கை நேரும்.

204. ரிஷப ராசியில் சந்திரன் ரோகிணி 2-வது பாதத்தில் இருந்து ராகு 4-ல் இருந்தால் துருஷ்க்க ஜாதி ஸ்திரீயைச் சேர்வான். வேறு சிலர் மேறபடி எண்ண மிருக்கும் என்கின்றனர்.

205. 9-ல் ராகுவும், ஒன்பதாமாதி 9-ல் உச்சமு மடைந்து இருக்க, சுக்கிரன் கேதுவுடன் கூடினாலும் கேதுவால் சுக்கிரன் பார்க்கப்பட்டாலும் மூன்று தார முண்டாயினும் அன்னிய ஸ்திரீகளிடம் ரமிப்பான். தன் மனைவியின் சகோதரி ஒரு விதவை துஷ்ட நடவடிக்கையுள்ளவளாவாள். இத்துடன் செவ்வாய் சிம்ம ராசியில் மகம் 1-வது பாதத்தில் இருந்தால் எவனாவது ஒரு சகோதரன் மூன்று தார முடையவனாவன். கன்னி விருச்சிக மிவற்றிற்கு மட்டும் நேரும்.

206. தனுசு ராசியில் மூலம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து தனுசே லக்கினமாகப் பிறந்தால் பலவந்தப் புணர்ச்சி செய்வார்கள்.

207. மேஷ ராசியில் பரணி 4-வது பாதம் சந்திர னிருக்கும் ஜன்ம நக்ஷத்திரமாகி 2-மாதி லக்கினத்திலும் 10-ல் செவ்வாயும் 2-ல் சனியு மிருந்தால் 3-வது திசை சுக்கிர புக்தியில் விவாகம் ஆகி 4-வது தெசை முடிவில் தாரநாச மேற்பட்டு 5-வது திசையிலல்லது 4-வது தெசை முடிவிலேயே 2-வது விவாகமும் நடக்கும்.—மேஷ லக்கினம்.

208. தனுசு ராசியில் உத்திராடம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் மிதுனமாகப் பிறந்து லக்னத்தில் குருவும் 2-ல் சுக்கிரனு மிருந்தால் 2-வது தெசையில் சந்திரதெசை சூரிய புக்தியில் 15-வயதில் விவாகம் நடக்கும்.

209. தனுசு ராசியில் உத்திராடம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் ரிஷபமாகி 7-ல் ராகும் 12-ல் குஜ சுக்கிரு மிருந்தால் 2 தார மேற்படும், 2-வது திசையில் ராகு வல்லது சுக்கிர

புத்தியிலாவது அல்லது அதற்கு முன்பே சனி புத்தியிலாவது விவாகம் நடக்கும். மூன்றாந் தெசையில் தார நாச முண்டாகும்; உடனே மறுமணம் நடக்கும்.

210. கன்னியா ராசியில் சித்திரை நக்ஷத்திர 1-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் ரிஷபமாகிப் பிறந்தால் சனியும் புதனும் கூடி 4-லும் செவ்வாய் 12-லு மிருந்தால் இரு தார மேற்படும்; ஓரே தாரமென்பது சிலர் மதம். 17, 18 வயதில் விவாகம் ராகுதெசை சுக்கிர புத்தியில் நடக்கும்.

211. மூலம் 1-வது பாதத்தில் தனுசு ராசியில் சந்திரனிருந்து 10-ல் சுக்கிரன் 7-ல் குரு, லக்கினத்தில் செவ்வாய் இப்படியிருக்கும். ஜாதகர் சுக்கிரதிசையில் சந்திர புத்தியில் அம்மான் பெண்ணை மணப்பார். அவள் கடுத்த பேச்சுடையவளாவள்.

212. மேஷ ராசியில் பரணி நக்ஷத்திரம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து மேஷமே லக்கினமாகிப் பிறந்து சனி 7-லும் 10-ல் செவ்வாயும் 7 மாதி உச்சத்திலு மிருந்தால் 3 தார மேற்படும்.

213. துலா ராசியில் சுவாதி 1-ல் சந்திரனிருந்து சுக்கிரன் அவருடன் கூடினால் ஜன்ம திசையிலேயே 14 அல்லது 15-வது வயதில் விவாக முண்டாகும். சிலர் மதம் 2-வது திசையில் 22 வயதில் என்பது.

214. மிதுன ராசியில் புனர்பூசம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து சுக்கிரன் 4-லும் குரு 11-லு மிருந்தால் ஜன்மதிசையின் முடிவிலாவது 2-வது திசையிலாவது விவாகம் நடக்கும்.

215. கும்ப ராசியில் சதயம் 4-வது பாதத்தில் சந்திரனிருந்து குரு லக்கினத்திலும் சுக்கிரனுச்சத்திலு மிருந்தால் 2-வது திசையில் சூரிய புக்தியில் விவாகம் நடக்கும். சிலர் மதம் சந்திர புக்தியின் முதலில் என்பது; மேற்படி சுக்கிரனுடன் சூரியன் கூடினால் தாரம் ரோகத்தை யடையும்.—மேஷ லக்கினம்.

216. தனுசு ராசியில் பூராடம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து சுக்கிரன் 6-லும் செவ்வாய் 9-லும் இருந்தால் மேற்படி ஜன்ம திசையின் கடைசியிலாவது 2-வது திசை முதலிலாவது விவாகம் நடக்கும் 2 தார மென்பது சிலர் மதம்.—மேஷ லக்கினம்.

217. கும்ப ராசியில் சதயம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து 7-ல் சப்தமாதிபதி கேதுவுடனிருந்து 7-ல் பாபரிருந்தாலும் பார்த்

தாலும் 2-வது தெசையில் விவாகம் நடக்கும். இரு தார மேற் படும். இதற்கே சுக்கிரன் லக்கினத்திலிருந்தால் அதிக பாலியத் திலேயே விவாகம் நடக்கும்.

218. தனுசு ராசியில் மூலம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து குருவுடன் சுக்கிரன் லக்கினத்தில் இருந்தால் சுக்கிர திசையில் குரு புக்தியிலாவது சனி புக்தியிலாவது விவாகம் நடக்கும் ரூப லக்ஷணமுடையவள் மனைவியாவள்.

219. தனுசு ராசியில் ஜன்மகாலத்தில் மூலம். 1-வது பாதத் தில் சந்திரனிருந்து லக்கினத்தில் சனியும் கேதுவும் இருந்து குரு 5-லும் சுக்கிரன 4-லு மிருந்தால் இரு தாரம் ஏற்படும். 2-வது தெசை சனி புக்தியிலல்லது அதற்கு முன்பே குரு புக்தியில் விவாக மடைந்து மேற்படி தெசை முடிவில் தாரநாச முண்டாகி 3-வது தெசையில் 2-வது விவாகம் நடக்கும்.—மிதுன லக்கினம்.

220. கும்ப ராசியில் ஜன்ம காலத்தில் அவிட்டம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து கடக லக்கினமாக ஜனித்து லக்கினத் திற்கு 7-ல் செவ்வாயும் குருவு மிருந்து 5-ல் சுக்கிரனும் 4-ல் சனியு மிருந்தால் 2 தாரம் ஏற்படும்; வேறு சிலர் தாரத்தை விட்டு விலகிப் பரஸ்திரீ கமனியாவானென்று சொல்கின்றனர். மனைவி கடுத்த சொல்லுடையவளாக ஆவாள். ரூபசாலியுமாவாள். வயது 12 அல்லது 14-ல் 2, 3 தடவைகளில் தடைப்பட்டுப் பின்பு விவாகம் நடக்கும்.

221. மேஷ ராசியில் ஜனனகாலத்தில் அசுவனி 2-வது பாதத்தில் சந்திரனிருந்து 3-ல் குருவும் சுக்கிரன் 10-லு மிருந்தால் ரூபவதியான கிரகஸ்தன் வீட்டுப் பெண்ணை சுக்கிரதிசை சனி புக்தியில் மணப்பான்.—கடக லக்கினம்.

222. பூராட நக்ஷத்திரத்தில் தனுசு ராசியில் சந்திரனிருந்து சனி உச்சத்திலும் 5 மாதி நீச்சத்திலு மிருந்தால் பரஸ்திரீ கமனி யாவன். பலவந்தப் புணர்ச்சி செய்பவன். 2 தார முடையவன்.

223. மகாராசியில் ஜன்ம காலத்தில் உத்திராடம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினத்தில் சனியும், சித்திரை 3-வது பாதத்தில் சுக்கிரனு மிருந்தால் 18-வது வயதில் தன் ஜன்ம கிராமத் திலேயே விவாகம் நடக்கும்.—கடக லக்கினம்.

224. விருச்சிக ராசியில் ஜன்ம காலத்தில் கேட்டை 1-வது பாதத்தில் சந்திரனிருந்து சனி மீனத்திலும் 2-ல் கேதுவு மிருந்தால் மேற்படி கேது தெசையில் கடைசியில் 22-வது வயதில் தன் ஜன்ம பூமிக்கு மேற்கில் அல்லது வாயு திக்கில் மணமடைவார்.

225. கடக ராசியில் ஜன்ம காலத்தில் பூசம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து சனி 8-லும் சுக்கிரன் 3-லு மிருந்தாலும் புதன் 4-ல் இருந்தால் மேற்படி புத தெசையில் சுய புக்தியிலல்லது பிறகு மேற்படி தெசை சுக்ர புக்தியில் 20 வயதிலாவது விவாகம் நடக்கும்.

226. விருச்சிக ராசியில் ஜன்ம காலத்தில் அனுஷ நக்ஷத்திரத்தில் சந்திரனிருந்து 6-ல் சனியும் 8-ல் சுக்கிரனு மிருந்தால் ஏக தாரமே யுடையவனுவான். பரஸ்திரீ சுமனியாவன். 2-வது திசை சுக்ர புக்தியில் மேற்கில் தாரலாப மேற்படும்.

227. ஜன்ம காலத்தில் சிம்ம ராசியில் மகம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினத்தில் குரு சுக்கிரிருந்து சனி மேற்படி சந்திரனுக் கேழிலிருந்தால் 3-ந் தெசையில் நிதான விவாகம். தாய் வர்க்கப் பெண் மனைவியாவள். மேற்படி குரு தெசையில் பாதியில் தார நாசம் நேரிடும்.

228. ஜன்ம காலத்தில் ரிஷபராசியில் கிருத்திகை 2-வது பாதத்தில் சந்திரனிருந்து சனி 9-லும் சுக்கிரன் 2-லு மிருந்தால் 3 தாரம் நேரிடும். 16 அல்லது 17 வயதில் முதல் விவாகம் நடக்கும்.

229. உத்திராடம் 2-வது பாதத்தில் மகர ராசியில் சந்திரனிருந்து 2-ல் சனியும் 10-ல் குருவும், சுக்கிரன் சித்திரை 4-வது பாதம் அல்லது விவாகம் 1-வது பாதத்திலும் இருந்தால் 2 தார முண்டாகும். மூன்ருவது திசையில் சூரிய புக்தியிலல்லது சந்திர புக்தியில் விவாகம் நடக்கும். முதல் மனைவி பிரசவத்தில் முன் ஜென்ம ஸ்திரீ சாபத்தினுல் மரிப்பாள். பிறகு மறு விவாகம் நடக்கும்.

230. தனுசு ராசியில் பூராட நட்சத்திரத்தின் 4-வது பாதத்தில் சந்திரனிருந்து 7 மாதி 1-லும் சுக்கிரன் 5-லு மிருந்

---

* இது முதல் 237-வரை சிம்ம லக்கின பலன்கள்.

தால் 3-வது தெசையில் சுக்கிர புத்தியில் விவாகம் நடக்கும். 2 தாரம் மரித்துவிடும். 3-தார யோக ஜாதகம்.

231. ரிஷப ராசியில் கிருத்திகை 3-வது பாதத்தில் சந்திர னிருந்து ரவி சுக்கிரர் 12-லும் சனி 3-லு மிருந்து ராகு 10-ல் இருந் தால் ராகு தெசை குரு புக்தியல்லது சனி புக்தியில் 23 அல்லது 25 வயதில் விவாகம் நடக்கும்.

232. கிருத்திகை நக்ஷத்திர 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 7-ல் ரவியும் 4-ல் செவ்வாயும் 3-ல் குருவும் 12-ல் சனியு மிருந்தா லும் 7-மாதியும் சூரியனும் குரு செவ்வாய் இவர்களுடன் கூடினு லும் 1, 7-மாதிகள் குரு குஜனிவர்களால் பார்க்கப்பட்டாலும் 2 தார மேற்படும். முதல் தாரம் ரோக பீடையும் அற்பாயுளு மடை யும். 2-ந்தாரம் சுக முள்ளதாகும். 20 அல்லது 21-வது வயதில் ஜன்ம பூமிக்குக் கிழக்கிலாவது தென்கிழக்கிலாவது முதல் தார விவாகமும், 26-ல் 2-வது விவாகமும் நடக்கும்.

233. அசுவனி 2-வது பாதத்தில் சந்திரனிருந்து 7-மாதி 12-ல் இருந்து 7-ல் சூரியனிருந்தால் களத்திரத்தினுல் கஷ்டமுண் டாகும். இரு தார மேற்படும். 2-வது திசையில் குரு புக்தியில் விவாகமென்று சிலரும் சனி புக்தியில் நடக்குமென்று சிலரும் சொல்லுகிறுர்கள். அம்மான் பெண்ணை முதல் தாரமாக மணப் பான் சந்திர தெசையில் செவ்வாயி லல்லது ராகு புக்தியில் மறு விவாகம் நடைபெறும்.

234. சதயம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 3-ல் செவ்வா யும் 7-ல் சனியு மிருந்தால் விவாகம் காலத்திலில்லாமல் தடைப் பட்டு சனி தெசை சுய புக்தியில் யத்தனமின்றி நடக்கும்.

235. அசுவனி 2-வது பாதத்தில் சந்திரனிருந்து சுக்கிரன் 4-லும் சனி 5-லு மிருந்தால் வெகு பாலியத்தில் 10 வயதில் விவாகம் நடக்கும்.

236. ரேவதி 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 7-மாதி 3லும் 1-மாதி 8-லும் 10-ல் கேதவு மிருந்தால் 14 அல்லது 16-வது வய தில் விவாகம் நடக்கும் 2-தார மேற்படும்.

237. அனுஷம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து சுக்கிரன் 5-லும் ரவிபுதர் 4-லும் இருந்தால் 20 அல்லது 24 வயதில் 2-வது தெசை சுக்கிர புக்தியில் விவாகம் நடக்கும்.

## கன்னியா லக்கின பலன்

238. ஹஸ்தம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து சுக்ரன் சித்திரை 2-வது பாதத்திலும் குரு 4-லும் சனி 9-லு மிருந்தால் 2-வது தெசை சனி புக்தியில் அல்லது சுக்ரபுக்தியில் பாக்கியவமிசத்தில் விவாகம் நடக்கும். ஏகதாரமே நிலையாகும். பரஸ்திரீகமனியாவர்.

239. அனுஷம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 2, 7 மாதிகள் 11-ல் 1-மாதிபதியுடன் கூடி யிருந்தால் 21-வது வயதில் தன்னூரிலேயே விவாகம் நடக்கும். இதற்கே, 8 மாதியுடன் கேது கூடி 5-ல் இருந்தால் விவாகமான 7-ம் நாளில் தார மரணம் நேரும், உடனே மறு விவாகம் நடக்கும், 2-வது தெசை சுக்கிர புக்தியில் முதல் விவாகமும், பிறகு சந்திர புக்தியில் 2-வது தெசையிலேயே மறு விவாகமும் நடக்கும்.

240. ரேவதி 3-வது பாதத்தில் சந்திரனிருந்து சுக்ரன் 7-லும் 7 மாதி 8-லும் சனி 10 மிடத்திலு மிருந்தால், 3-வது தெசை சுய புக்தியில் விவாக மடைந்து 25-ல் தார நாசமும் பிறகு 2-வது விவாகமும் 39-ல் 2-வது தார நாசமும் 41-வது வயதில் 3-வது விவாகமும் நடக்கும்.

241. ரேவதி 4 பாதத்தில் சந்திரனிருந்து சுக்ரன் லக்னாதிபதியுடன் லக்னத்திலும் குரு 7-லு மிருந்தால் பாக்கிய வமிசத்தில் தெற்கில் சுக்ர தெசை சுய புக்தியில் விவாகம் நடக்கும். சிலர் சூரிய புக்தியில் நடக்கு மென்கின்றனர்.

242. ரோகிணி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து 7 மாதி 9-லும் குஜ சுக்ரர் லக்னத்திலு மிருந்தால் ஜாதகர் வெகு காமியாவர் 2-வது தெசையில் விவாகம் நடக்கும்.

243. கும்பராசியில் சந்திரனும், திருஓணம் 4-வது பாதத்தில் குருவுமிருந்து சுக்ரன் 2-லு மிருந்தாலும் லக்னத்தில் புதனும் 8-ல் செவ்வாயு மிருந்தாலும் 2-வது தெசை புதபுக்தியில் விவாகம் வெகு பாக்கியமுள்ள வீட்டில் நடக்கும். விவாகமான பின்பு விசேஷ சுக முண்டாகும்.

244. உத்திரட்டாதி 1-வது பாதத்தில் சந்திரனிருந்து சுக்ரன் சிம்மத்திலும் புதன் 12-லும் இருந்தால் 2-வது தெசையில்

சயபுக்தியில் விவாகம் ஜன்ம பூமிக்குக் கிழக்கில் நடக்கும். லக்கினம் துலாம்.

245. புனர்பூச நக்ஷத்திரத்தின் 1-வது பாதத்தில் மிதுன ராசியில் சந்திரனிருந்து, சனி சுக்ரர் 7-லிருந்தால் ஜன்ம பூமிக்குக் கிழக்கில் அல்லது தென் கிழக்கில் 17 அல்லது 18-ம் வயதில் விவாகம் நடக்கும். மேற்படி லக்கினமே.

## விருச்சிக லக்கின பலன்

246. மகராசியில் சந்திரனிருந்து 7 மாதி 11-லும் ரேவதி 4-வது பாதத்தில் சனியு மிருந்தால் மூன்றுவது தெசை குரு புக்தியிலாவது சனி புக்தியிலாவது விவாகம் நடக்கும். பரஸ்திரீ கமனியென்று சிலரும் 2 தாரமு முண்டென்றுவேறு சிலரும் சொல்லுகிறார்கள்.

247. உத்திராடம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து சுக்ரன் 10-லும், லக்னுதிபதி 11-லு மிருந்து ராகு 4-ல் இருந்தால் 3-வது தெசை ராகு புக்தியில் விவாகம் நடக்கும்.

248. அசுவனி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து குரு 10-லும் சுக்ரன் 4-லு மிருந்து சனி மகரத்திலிருந்தால் சுக்ர தெசை குரு புக்தியல்லது சனி புக்தியில் ஜன்மபூமிக்கு மேற்கிலாவது வாயு திக்கிலாவது விவாகம் நடக்கும்.

249. கிருத்திகை 4-வது பாதத்தில் சந்திரன் 9 மாதியாகி 7-ல் உச்சத்தில் மீன நவாம்சத்திலிருந்து ரோகிணி 2-ல் சுக்ரனிருந்தால் 3-வது தெசை குரு புக்தியில் விவாகம் நடக்கும். போகஸ்திரீ சுகமடைவான். 1-தாரமே நிலையாகும்.

250. உத்திரட்டாதி 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 7 மாதியும் லக்னுதிபதியும் தசமத்திலிருந்து சனி கும்பத்திலிருந்தால் மேற்படி சனி தெசை குஜபுக்தியில் 13 அல்லது 14 வயதில் விவாகம் நடக்கும்.

251. அசுவனி நக்ஷத்திரத்தின் முதற்பாதத்தில் 45 விநாடியில் சந்திரனிருந்து லக்னுதிபதி 7-லும் சுக்ரன் 4-லு மிருந்து 2-ல் சனி யிருந்து மேற்படி சனியால் சுக்ரன் பார்க்கப்பட்டால் மேற்படி சுக்கிரதெசை குரு புக்தியிலல்லது சனி புக்தியில் விவாகம்

நடக்கும் 7-ல் செவ்வா யிருப்பதால் மனைவி கடுத்த சொல்லுடைய வளாவள்.

252. மகம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து, சூரியனும்கூடி மேற்படி சந்திரனுடனிருந்து சுக்கிரன் 11-லும் செவ்வாய் 9-லு மிருந்தாலும் 3 மிடத்தில் கேதுவு மிருந்தால் இருதார மேற்படும். இரண்டாவது தெசையில் சனி புக்தியில் முதல் விவாகமும் சந்திர தெசை மத்தியில் தார நாசமும் உடனே மறு விவாகமும் நடக்கும்.

253. பூரட்டாதி நக்ஷத்திரத்தில் கும்பராசியில் சந்திரனி ருந்து லக்கினுதிபதி 7-லும், 2-ல் சனி சுக்கிரரும் இருந்தால் 2-வது தெசையில் சுயபுக்திபிலல்லது புதபுக்தியில் விவாகம் நடக்கும். வேறு சிலர் சுக்கிர புக்தியில் நடக்கு மென்று சொல்கின்றனர், நானு ஜாதிகளின் ஸ்திரீகளையும் போகிப்பான்; தன் தாரத்திடம் துவேஷ முண்டாகும்.

254. சதயம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து குரு புத சுக்ரர் 2-லிருந்தால் குரு தெசை புத புத்தியிலாவது சுக்கிர புக்தி யிலாவது விவாகம் நடக்கும்.

255. உத்திரட்டாதி 1-வது பாதத்தில் சந்திரனிருந்து சுக்கி ரன் 11-ல் இருந்தாலும் 7-ல் ராகு இருந்து லக்னுதிபதி 2-ல் இருந்து 12-ல் சனி இருந்தாலும் 2 தார மேற்படும். 42-வது வய தில் தார நாசமும் பிறகு மறு விவாகமும் நேரிடும். 19 அல்லது 20-வது வயதில் முதல் விவாகம் நடக்கும்.

256. ரோகிணி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து சுக்கிரன் 10-ஆம் இடத்தில் இருந்தால் 12 அல்லது 14 அல்லது 15-வது வய தில் விவாகம் நடக்குமென்று சிலரும் 16 அல்லது 17, 18-ல் சுய கிராமத்திலேயே விவாகம் நடக்குமென்று சிலரும் சொல்லுகிறார் கள். இதற்கே ஏக தாரமென்று சுக்கிர நாடியிலும் இதர கிரந்தத் தில் 2 தாரமென்றும் சொல்லப்பட் டிருக்கிறது.

## தனுர் லக்கின பலன்

257. மேஷராசியில் சந்திரனிருந்து சுக்கிர புத னிவர்களுடன் கூடி யிருந்தால் 17 வயதில் விவாகம் ஜன்ம தேசத்திலேயே நடக் கும், மேற்படி 7 மாதியே சனி குஜனிவர்களுடன் கூடி

யிருந்தாலும் சனி குஜனிவர்களால் பார்க்கப்பட்டாலும் நானு ஜாதி ஸ்திரீகளையும் சேருவர். ஜாரத்துவமும் சோரத்துவமும் குரூத்துவ மும் கூட இருக்கும்.

258. அசுவனி நக்ஷத்திரத்தின் 1-வது பாதத்தில் சந்திர னிருந்து 7 மாதி 5-லும் 7-ல் கேதுவும் இருந்து சுக்கிரன் உச்சத்தி லிருந்தால் ஷ சுக்கிர தெசையில் சப்த மாதிபதியுடன் கூடிய குஜபுக்தியில் விவாகம் நடக்கும். இதற்கு முந்திய சந்திரபுக்தியி லேயே விவாகம் நடக்கும் என்பது சிலர் மதம்.

259. ரிஷப ராசியில் சந்திரனிருந்து லக்கினாதிபதி 7-லும் சுக்கிரன் 12-லும் 7-மாதி 1-லு மிருந்தால் 12 வயதிலேயே விவாகம் நடக்கும்.

260. பூசம் 2-ம் பாதத்தில் சந்திரனிருந்து 7-மாதி சூரிய னுடன் கூடி 7-லும், 1 மாதியுடன் சுக்கிரன் கூடி 5-லும் இருந்தா லும் 9-ல் சனி ராகு இருந்தாலும் 2 தாரம் நேரிடும். 7 மாதி தெசையிலேயே 2 தாரமும் விவாகமாகும். சுக்கிரதெசை கேது புக்தியில் முதல் தாரத்திற்கு நாச முண்டாகும்.

261. துலா ராசியில் விசாகம் 2-வது பாதத்தில் சந்திர னிருந்து மகர ராசியில் 2-ஆம் இடத்தில் ரவியும் உத்திராடம் 2-வது பாதத்தில் சுக்கிரனும், ரேவதி 4-ல் குருவும் சனி 12-லு மிருந்தா லும், மேற்சொல்லியபடி ஷ துலாராசியில் சந்திரனிருந்து 7 மாதி குஜனுடன் கூடி கும்பத்திலிருந்து சுக்கிரன் முன் சொன்னபடி யிருந்தாலும் 9 வயதிலல்லது 10-வது வயதிலேயே விவாகம் நடக்கும். இருதார மேற்படும் புருஷ ஜாதக விஷயத்தில் முன் போல் விவாகமும் ஷ புததிசை சுயபுக்தியில் ஷ தார நாசமும் உடனேயே மறு விவாகமும் நடக்கும்.

262. சதயம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து சூரிய சுக்கிரர் 1-லும் 5, 7 மாதிகள் 2-லு மிருந்து சனி 4-ல் இருந்தால் பரஸ்திரீ கமனி யாவர். 2-வது தெசை புத புக்தியில் விவாகம் நடக்கும்.

263. உத்திரட்டாதி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து குரு குஜ புதனிவர்கள் 7-ல் இருந்தால் ஷ புத தெசை குஜபுக்தியில் விவாகம் நடக்கும்.

264. மகம் 4-வது பாதத்தில் சந்திரனிருந்து சுக்கிரன் 11-லும் புதன் 10-லு மிருந்தாலும் குரு 2-ஆம் இடத்திலிருந்தால்

மேற்படி சுக்கிர தெசையில் குரு புக்திக்கு முன்பே விவாகம் நடக்கும்.

265. மூலம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து 7-க் குடையவர் 9-லும் சுக்கிரன் 11-லும் குரு 5-லு மிருந்தால் மேற்படி சுக்கிர தெசை குரு புக்தியிலாவது விவாகம் நடக்கும்.

## மகர லக்கின பலன்

266. மேஷ ராசியில் சந்திரனிருந்து லக்கினுதிபதி 5-லும் சுக்கிரன் 11-லு மிருந்தால் 14 அல்லது 15-வது வயதில் விவாகம் நடக்கும்.

267. தனுசு ராசியில் உத்திராடம் 1-வது பாதத்தில் சந்திரனும் உத்திராடம் 2-வது பாதத்தில் மகரத்தில் சனியும் ரிஷபத்தில் சுக்கிரனு மிருந்து லக்கினத்தில் செவ்வா யிருந்தால் மேற்படி செவ்வாய் தெசை ராகு புக்தியில் 16 வயதிலாவது 17 வயதிலாவது 20 வயதிலாவது இதன் மத்தியிலாவது விவாகம் நடக்கும்.

268. மிதுன ராசியில் திருவாதிரை 2-வது பாதத்தில் சந்திரனிருந்து சுக்கிரனும் புதனும் லக்கினத்திலிருந்து குரு குடும்ப ஸ்தானமான 2-ஆம் இடத்திலிருந்தால் மேற்படி குருதெசை புத புக்தியில் அல்லது சுக்கிரபுக்தியில் பந்து வர்க்கத்தில் விவாகம் நடக்கும்.

269. மகர ராசியில் திருஓணம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து சித்திரை 3-வது பாதத்தில் சுக்கிரனும் லக்கினுதிபதி உச்சத்திலு மிருந்தால் மேஷத்திலுள்ள ராகுதெசை சுயபுத்தியில் விவாகம் நடக்கும், 15 அல்லது 16 வயதில் அம்மான் பெண்ணை மணப்பார்.

270. கடக ராசியில் பூசம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து சுக்கிரன் 11-லும் சனி 10-லு மிருந்தால் மேற்படி சனி தெசையில் சந்திர புக்தியிலேயே 9 அல்லது 10-வது வயதிலேயே விவாகம் நடக்கும்.

271. மிதுன ராசியில் திருவாதிரை 2-வது பாதத்தில் சந்திரனிருந்து சுக்கிரன் மிதுனத்திலும் லக்கினுதிபதி 9-லும் செவ்வாய் மீனத்திலு மிருந்தால் மேற்படி சனி தெசை சுயபுக்தியில் ஜன்ம பூமிக்குக் கிழக்கில் அல்லது தென்கிழக்கில் யோகசாலியான மனை

வியை 28-வது வயதில் மணம் முடிப்பான். இரு தார யோக மென்பது சிலர் மதம்.

272. ரிஷப ராசியில் ரோகிணி நக்ஷத்திரத்தின் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து சுக்கிரனும் லக்கினுதிபதியும் லக்கினத்திலிருந்து 7-ல் கேது விருந்தால் இருதார முண்டாகும். மேற்படி லக்கினத்தில் சூரியனிருந்து சுக்கிரன் ராகு இவர்களுடன் கூடினுலும் இரு தார மேற்படும். 2-வது தெசையில் முடிவில் விவாகமென்று சுக்கிர நாடியிலும் மூன்ருவது தெசை சுயபுக்தியில் விவாகம் நடக்கு மென்று இதர கிரந்தங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஷி 3-வது தெசை சுக்கிரபுத்தியில் முதல் தார நாசமும் 2-வது விவாகம் உடனேயும் நடக்கும்.

## கும்ப லக்கின பலன்

273. விருச்சிக ராசியில் கேட்டை 3-வது பாதத்தில் சந்திரனிருந்து கடகத்தில் சுக்கிரன் 6-லும் லக்கினுதிபதி 8-லு மிருந்து சூரியன் 7-லு மிருந்து ஷி சுக்கிரனுடன் கேது கூடி இருந்தால் மேற்படி கேது தெசையில் கடைசியில் அல்லது 11வ-து வயதில் ஜன்ம பூமிக்குக் கிழக்கில் விவாகம் நடக்கும்.

274. ரிஷப ராசியில் ரோகிணி 2-வது பாதத்தில் சந்திரனிருந்து சூரியன் சிம்மத்தில் அஷ்டமாதிபதியுடனிருந்து கடகத்தில் சுக்கிரன் 6-லும், சனி 12-லு மிருந்தால் 19-வது வயதில் விவாகம் நடக்கும். 18 வயதிலேயே நடக்கும் என்பது சிலர் மதம். ஜாதகன் மூன்று தார யோகமுடையவன். கன்னியிலுள்ள குரு தெசை சனி புக்தியில் தார நாசமும் உடனேயே மறு விவாகமும் நடக்கும். மிருகசீரிஷம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்தாலும் இதே பலன் தான் நடக்கும்.

275. தனுசு ராசியில் மூலம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து 7 மாதிபதி 12-லும் சுக்கிரன் 2-ல் ராகுவுடனுமிருந்து சனி 11-லு மிருந்தால் 10 அல்லது 12-வது வயதில் விவாகம் நடக்கும். 14-வது வயதிலென்பது சிலர் மதம். வேறு சில கிரந்தங்களில் 19-வயதிலென்பதாகவும் புருஷ ஜாதகத்தில் மனைவிரோக முடையவளாவாள் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

276. மிதுன ராசியில் திருவாதிரை நக்ஷத்திரத்தின் மூன்று வது பாதத்தில் சந்திரனிருந்து (மேற்படி மூன்றுவது பாதத்தில் ஆறு நாழிகை செல்லாகியுள்ள ஜாதகருக்கும்) லக்னாதிபதி 11-லும் ஏழாமாதியாகிய சூரியன் புதனுடன் கூடி 3-லு மிருந்தால் 16 அல்லது 17 வயதில் விவாகம் நடக்கும் இருதாரயோகம். ஜன்ம காலத்தில் ராகுதெசையில் 7-வருஷம் நிலுவை என்று ஒரு கிரந்தத் திலும் அதிகமாக ஆறுமாதம் கூட இருப்பதாக வேறு ஒரு அபிப் பிராயமும் உள்ளது.

277. மகர ராசியில் உத்திராட நக்ஷத்திரத்தின் 4-வது பாதத் தில் சந்திரனிருந்து லக்கினாதிபதி 3-லும் 7 மாதி 2-லும் சுக்கிரன் 4-லு மிருந்தால் 3-வது தெசை முடிவில் விவாகம். இத்துடன்,

278 ஏழாமிடத்தில் ராகுவு மிருந்தால் பரஸ்திரீகமனம் நேரிடும். தன் மனைவியிடம் நிதான ஆசை யுடையவனாவன். அதா வது எப்போதாவது (ஒரு சமயம்) ஏற்பட்டுவிடும். சிலர் மதம் தன் மனைவியிடம் அன்பு குறைவென்பதாகவே உள்ளது.

279. சிம்ம ராசியில் பூரம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கின சப்தமாதிகள் 5-ல் இருந்து சுக்கிரன் சுயக்ஷேத்திரத்தில் இருந்தால் வயது 10 அல்லது 12-ல் அல்லது 14-வது வயதில் விவாகம் நடக்கும். புருஷ ஜாதக விஷயத்தில் இருதார மேற்படும் விவாகத்தின் பிறகு மாமனார் வர்க்கம் நாசமடையும்.

280. மிதுன ராசியில் திருஆதிரை 3-வது பாதத்தில் சந்திர னிருந்து லக்கினாதிபதி 5-ல் மிதுனத்திலும் சூரியன் சிம்மத்திலு மிருந்தால் 25 அல்லது 26 வயதில் சனி தெசை சுயபுக்தியின் கடைசியில் தன் ஜன்ம கிராமத்திலேயே விவாகத்தை யடைவர்.

281. மேற்படி மிதுன ராசியில் சந்திரன் மிருகசீரிஷ நக்ஷத் திர 3-வது பாதத்தில் இருந்து சூரியன் 6-லும் சுக்கிரன் நீச்சத்தில் 8-லு மிருந்து லக்கினாதிபதி தசமத்திலிருந்தால் 10 அல்லது 12 வயதில் விவாகம் நடக்கும். புருஷ ஜாதக விஷயத்தில் 3-வது தெசை சுக்கிரபுத்தியில் தாரநாச முண்டாகும். உடனேயே மறு விவாகம் நடக்கும்.

282. மேற்படி மிதுன ராசியிலேயே திருவாதிரை 3-வது பாதத்தில் சந்திரனிருந்து 7-மாதி உச்சத்திலிருந்து சனி 11-ல்

இருந்தாலும் சுக்கிரன் சூரியனுடன் கூடி இருந்து உச்ச செவ்வா யால் பார்க்கப்பட்டாலும் இரண்டாவது தெசையில் புத புக்தியில் விவாக முண்டாகி முதல் மனைவி ரோகியாவாள். மூன்றாவது தெசை சுயபுக்தியில், பிறகு 2-வது விவாகம் நடக்கும்.

283. கும்ப ராசியில் பூரட்டாதி 3-வது பாதத்தில் சந்திர னிருந்து சூரியன் 7 மாதியாகி மேஷத்திலும் சனி துலாத்திலு மிருந்து சுக்கிரனு முச்சத்திலிருந்தால் 2-வது தெசையில் பந்துவர்க் கத்தில் 10 அல்லது 11-வது வயதில் விவாகம் நடக்கும்.

284 கன்னியா ராசியில் ஹஸ்தம் 2-வது பாதத்தில் சந்திர னிருந்து சனி சூரியர் தனுசிலும் சுக்கிரன் மகரத்திலு மிருந்தால் 2-வது தெசை முடிவிலாவது 3-வது தெசை ஆரம்பத்தில் சுய புக்தி யிலாவது விவாகம் நடக்கும்.

285. கன்னியா ராசியில் சித்திரை 1-வது பாதத்தில் சந்திர னிருந்து சனி சுக்கிரன் மேஷத்திலும் சூரியன் புதனுடன் லக்னத் திலுமிருந்தால் இரண்டாவது தெசை புத புக்தியில் விவாகம் நடக்கும்.

286. கடகராசியில் புனர்பூசம் 4-வது பாதத்தில் சந்திர னிருந்து சூரியன் ரிஷபத்திலும் சுக்கிரன் மிதுனத்திலும் சனி கும் பத்திலு மிருந்தால் 2-வது தெசை சந்திர புக்தியில் விவாகம் நடக் கும்.

287. சிம்ம ராசியில் மகம் 4-வது பாதத்தில் சந்திரனிருந்து சனி கடகத்திலும், சூரியன் 11-லும், சுக்கிரன் ராகுவுடன் கூடி 10-லு மிருந்தால் 3 தாரமேற்படும். 2-வது தெசையில் குரு வல்லது ராகு புக்தியில் முதல் விவாகமும் ஷை தெசை முடிவில் தார நாசமும் உடனே மறுவிவாகமும் சூரிய தெசை முடிவில் 2-ந்தார நாசமும் 3-வது விவாகம் உடனேயும் நடக்கும்.

288. மேஷ ராசியில் அசுவனி 4-வது பாதத்தில் சந்திர னிருந்து சனி 11-லும் சுக்கிரன் மிதுனத்திலும் 7 மாதியாகிய சூரியன் 4-மிடத்திலு மிருந்தால் 2-வது தெசையில் ஷை சனி புக்தி யில் யத்தனமின்றி விவாகம் நடக்கும்.

## மீன லக்கின பலன்

289. மீன ராசியில் உத்திரட்டாதி 1-வது பாதத்தில் சந்திர னிருந்து புத சுக்கிரர் 9-ல் சனியுடன் கூடியும், இருந்தாலும் லக்கி னாதிபதி 9-லும் ராகு 2-லு மிருந்தாலும் இரு தார முண்டாகும். மூன்றுந்திசை ராகு புக்தியில் முதல்தார நாசமும், இரண்டாவது விவாகமும் நேரிடும்.

290. மீன ராசியில் பூரட்டாதி 4-வது பாதத்தில் சந்திர னிருந்து சுக்கிர புதர் கன்னியிலும் குரு மேஷத்திலு மிருந்தால் 9 அல்லது 10-வது வயதில் விவாகம் நடக்கும்.

291. தனுசு ராசியில் மூலம் 4-வது பாதத்தில் சந்திரனிருந்து புதன் தனுசிலும் சுக்கிரன் மகரத்திலும் குரு மீனத்திலு மிருந்தால் 2-வது தெசையின் முடிவிலல்லது மூன்றுவது திசை முதலில் விவாகம் நடக்கும். புருஷ ஜாதகத்தில் மேற்படி புதனுடன் சனி கூடினால் மேற்படி காலத்தில் முதல் விவாகமும் பிறகு மறு விவாக மும் நடக்கும். இதற்கே தாரம் ரோகமுடைய தென்றும் ஏக தாரமே யுண்டாகு மென்றும் சுக்கிர நாடியில் சொல்லப்பட்டிருக் கிறது.

292. கடக ராசியில் சந்திரனிருந்து குரு ரேவதி 4-லும் புதன் தனுசிலும் சுக்கிரன் விருச்சிகத்திலு மிருந்தால் 2-வது தெசை சுய புக்தியில் விவாக முண்டாகும்; வேறு சிலர் கேது புக்தியில் நடக்கு மென்கின்றனர். மேற்படி புதன் சூரியனுடன் கூடியிருந் தால் புருஷ ஜாதகத்தில் மேற்படி காலத்தில் முதல் விவாகமும் ராகு புக்தியில் தார நாசமும் முதல் மனைவி வழியிலேயே 2-வது விவாக மும் பிறகு நடக்கும்.

293 கும்ப ராசியில் அவிட்டம் 4-வது பாதத்தில் சந்திர னிருந்து குரு மேஷத்திலும் சுக்கிரன் மகரத்திலும் புதன் விருச்சி கத்திலும் இருந்தால் 2-வது தெசை சுக்கிர புக்தியில் ஜன்ம தேசத் திலேயே விவாகம் நடக்கும். ஸ்திரீயானவள் ரோக முடையவளா வாள்.

294. சிம்ம ராசியில் மகம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து குரு மீனத்திலும் புதன் தனுசிலும் சனி சுக்கிரர் விருச்சிகத்திலு மிருந்தால் 13 வயதில் விவாகம் நடக்கும்.

295. மகர ராசியில் உத்திராடம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து குரு தசமத்தில் தனுசிலும் 7-மாதி சந்திரனுடனும் கூடி சுக்கிரனும் மகரத்திலேயே யிருந்தாலும் துலா ராசியில் செவ்வாயும், சனி மேஷத்திலு மிருந்தாலும் பல தடவைகளில் விவாகத்திற்குத் தடங்கல் உண்டாகிப் பிறகு நடக்கும்.

296. மீன ராசியில் உத்திரட்டாதி 3-வது பாதத்தில் சந்திரனிருந்து குரு மிதுனத்திலும் புதன் கடகத்திலு மிருந்தாலும் சுக்கிர குஜர் சிம்மத்திலிருந்து கும்பத்தில் சனி யிருந்தாலும் 2-வது தெசை குரு புக்தியிலாவது, சனி புக்தியிலாவது விவாக முண்டாகும். இத்துடன் மீன லக்னம் முடிவு.

297. மீன ராசியில் உத்திரட்டாதியில் சந்திரனிருந்து ஜன்ம லக்கினம் மிதுனமாகி சுக்கிரன் குரு புதனிவர்கள் 4-லு மிருந்தால் 12 அல்லது 14 வயதில் விவாகம் நடக்கும்.

298. ரிஷப லக்கின ஜாதகனுக்குச் சந்திரன் 7-ல் இருந்தால் 3 தாரம் வாய்க்கும். மேற்படி சந்திரனுடன் சனி குஜர் கூடினும் தாரம் 3 ஆகும். இதற்கே சுக்கிரனுடனும் ஸப்தமாதிபதியுடனும் பாபர் கூடாமலிருந்தால் ஏக தாரமேயாகும்.

299. ஸப்தமாதிபதி பாபருடன் கூடியிருக்க 2, 7-ஆம் இடங்களிலும் பாபரிருந்தால் மறுதாரம் வாய்க்கும்.

300. சுக்கிரன் 11-லிருந்தாலும் நீச்சத்திலிருந்தாலும் மறு தாரம் வாய்க்கும்.

301. ஸப்தமாதிபதி 12-லாவது 6-லாவ திருந்தாலும் 2-ந் தாரம் வாய்க்கும்.

302. 4, 2, 12, 8, 7, 1 இந்த ஸ்தானங்களில் சுக்கிரன் குஜனிவர்கள். பலஹீனர்களாக இருப்பினும் 2-ந் தாரம் வாய்க்கும்.

303. மேற்படி 4,2,12,8,7,1 இந்த ஸ்தானங்களில் செவ்வாயிருந்து 3,1,12,11,7,6 இந்த ஸ்தானங்களில் குருவும் இருந்தால் அதாவது செவ்வாய் லக்கினத்திலிருந்தால் 12-ல் குருவும் 2-ல் செவ்வா யிருந்தால் 1-ல் குருவும் 12-ல் செவ்வா யிருந்தால் 11-ல் குருவும் 8-ல் செவ்வா யிருந்தால் 7-ல் குருவும் 7-ல் செவ்வா யிருந்தால் 6-ல் குருவும் 4-ல் செவ்வா யிருந்தால் 3-ல் குருவும்

இப்படி யிருந்தால் விவாக யுக்த காலங் கடந்தே விவாகம் நேரிடும். *வெகுகாலங் கடந்து நடக்குமென்பது சிலர் மதம்.

304. ராகுவுக்கு 12-ல் அல்லது 7-ல் சனி யிருந்தால் 2-ந் தாரம் வாய்க்கும்.

305. 7-ல் சனி சுக்கிரர் கூடியே யிருந்தால் ஏக தாரமே யாகும்.

306 7-மாதி 2-ல் அல்லது 6-ல் இருந்தால் மனைவி தோஷ முள்ளவளாவள்.

307. 7-மாதி 4-ல் இருந்தால் தாய் தோஷ முள்ளவளாவாள்.

308. 7-க் குடையவன் லக்கினத்தி லிருந்தாலும்,

309. 9-க் குடையவன் லக்கினத்தி லிருந்தாலும்,

310. 11-க் குடையவன் லக்கினத்தி லிருந்தாலும்,

311. 1-க் குடையவன் 1-லாவது 7-லாவது 10-லாவதிருந் தாலும்,

312. 1-மாதி 9-ல் அல்லது 11-ல் இருந்தாலும்.

313. 10-ல் கேது இருந்தாலும், 8-ல் சனி இருந்தாலும். 2 மாதி 2-ல் இருந்தாலும்.

314. 8-மாதி 2-ல் அல்லது 1, 7 இவ்விடங்களி லிருந்தாலும் மறு தார முண்டாகும்.

315. ரிஷப லக்கின ஜாதகனுக்கு லக்கினாதிபதியும் 7 மாதி யும் கூடினால் 2 தார மேற்படும்.

316. மேஷ லக்கினத்தில் ஜனித்து சுக்கிரன் செவ்வா யிவர் கள் ஆயில்யம் 4-ல் இருந்தால் தன்னூரிலேயே விவாகம் நடக்கும். இதற்கே அவிட்டம் 4-ல் சனி யிருந்தால் விவாகத் தடை யேற் படும். மேல்படி சுக்கிரன் 12-ல் இருந்தால் 3 தார மேற்படும்.

317. மேஷத்திற்கே சுக்கிரன் 7-லேயே இருந்தால் 2 தார முண்டாகும் ஏக தாரமென்பது சிலர் மதம்.

---

* பொதுவாகவே குருவுக்கு 2, மிடத்தில் செவ்வாய் இருந்தால் விவாக மானது விவாக யுக்த காலங் கடந்தே நடக்கும். இரண்டாவது விவாகம் காலங் கடந்து நடக்கு மென்பது சிலர் மதம்.

318. 7-ல் உள்ள மேற்படி சுக்கிரனுடன் ராகு கூடினல் 3 தார மேற்படும். ஏகதாரமாகவே யிருந்தால் தாரத்திற்குக் கிரகசங்கையால் பீடையேற்படும்.

319. சுக்கிரன் கேதுவுடன் கூடியிருந்தால் தாரம் துர்மரணமாகும். மேல்படி சுக்கிரன் புதனுடன் கூடியிருந்தால் தாரம் ரோகத்தினல் மரிக்கும். செவ்வாயுடனும் சூரியனுடனும் கூடியிருந்தால் 3 தார மேற்படும்.

320. மேஷ லக்கின ஜாதகனுக்கு முதல் தாரஸ்தானுதிபதி, நீச்ச மடைந்த 2-ங் தார ஸ்தானுதிபதியுடன் கூடியிருந்தால் 2 தாரம் ஏற்படும். சுக்கிரனும் கூடி இவர்களுடனிருந்தால் 2 தாரமும் உயிருடனிருக்கும். சிலர் மதம் 1-தார மென்பது.

321. குரு சனி செவ்வாயிவர்கள் 8ல் இருந்து 4-ல் உள்ள சுக்கிரன் மேல்படி குருவால் பார்க்கப்பட்டால் மேஷ லக்கின ஜாதகனுக்கு 2-வது தாரத்தினல் பாக்கியம் வரும்.

322. ரிஷப லக்கின ஜாதகனுக்கு எட்டில் செவ்வாய் 7-ல் குரு 6-ல் சனி இப்படி யிருந்தால் மறு தாரம் சேரிடாது. தாரம் ரோக மடையும். இதற்கே சுக்கிரன் 4-ல் இருந்தால் தாரம் கிரக சங்கை பீடை யுடையதாகும்.

323. குரு லக்கினத்திலும் செவ்வாய் 11-லு மிருந்து சனி சுக்கிரனுல் பார்க்கப்பட்டாலும் சுக்கிரனுடன் கூடினுலும் 3 தாரம் சேரும்.

324. சனி செவ்வாயிவர்கள் சந்திரனுடன் ஏழாமிடத்தி லிருந்தால் ரிஷப லக்கின ஜாதகன் இரு தாரமடைவான்.

325. குரு குஜன் இவர்கள் கூடினல் ரிஷப லக்கின ஜாதகனிருதார மடைவான். ஷை குரு குஜனிவர்கள் 12-லிருந்து சூரியன் புத னிவர்களால் காணப்படினும் தாரம் 2 ஆகும். வேறுசில கிரந்தப்படி தாரம் ரோயுற்றிருப்பாள் என்றும் ஏக தாரமென்று தெரிகிறது.

326. 7, 9 மாதிகள் கூடி 7-ல் இருந்தால் தாரத்தினல் பாக்கியம் வரும்.

327. சிம்ம லக்கின ஜாதகருக்கு சுக்கிர சனி 11-லும் லக்கினத்தில் குரு புதனும் இருந்தாலும் 9 மாதி நீச்சத்தி லிருந்தாலும் ஜாதகன் தார மூலம் அபவாத மடைவான். மூன்று தாரயோக ஜாதகமாகும்.

328. கன்னியா லக்கின ஜாதகனுக்கு 7-ல் சனி யிருந்தால் 2 தாரம், கர்ப்பத்துடன் தோஷ மடையும்.

329. இதற்கு செவ்வாய் 7-ல் இருந்தாலும்.

330. ஏழாமதிபனுன குரு பதினென்றில் இருந்தாலும் 3 தாரம் ஏற்படும்.

331. 2 மிடத்துக்குடையவன் 6, 8, 12-ல் இருந்து 2ல் குருவு மிருந்தால் 2 தாரம் வாய்க்கும்.

332. 7-க்குடையவன் 9-ல் இருந்து 2 மாதி 12-ல் இருந்தால் 4 தார மேற்படும்.

333. 7-ல் பல கிரக மிருந்து அங்காரகன் பார்த்து சுக்கிரன் பலஹீனனுனல் 3 தார மேற்படும்.

334. 7-க்குடையவன் கேந்திரத்தில் அதாவது ஜன்ம லக்கினம் அல்லது 4 மிடம், அல்லது 7 மிடம் அல்லது 10 மிடம் இந்த ஸ்தானங்களில் ஒன்றில் இருந்து 2 மாதி 8-ல் இருந்தால் 3 தார மேற்படும்.

335. 7 மாதி 5-ல் இருந்து 2 மாதி 12-ல் இருந்து ராகுவுடன் கூடினுல் மனைவியிருந்தும் ஸௌராஷ்டிரப் பெண்ணை மணப்பார்.

336. கும்ப லக்கினத்தில் ஜனித்தவனுக்கு குரு உச்சத்திலிருந்து 7-க்குடையவனும் வலுத்தால் மறு விவாக முண்டாகும்.

337. 7-ல் சனியிருந்து 2 மாதி 12-ல் இருந்தால் சீக்கிரம் மணமாகாது.

338. 7-ல் சந்திர புதனிருந்தால் தார நாசமல்லது தாரம் அபவாத முள்ளதாகும்.

339. 7-ல் குருவும் சந்திரனுமிருப்பின் 2 தாரம் ஏற்படும். மனைவி வம்சமும் நாசம் அடையும்.

340. 7-ல் சுக்கிரனிருந்தால் 3 தாரம். மேல்படி சுக்கிரனைச் சுபர் பார்த்தால் ஏகதாரம். பாபிகள் பார்த்தால் தாரம் அந்திய காலத்தில் இராது.

341. சிம்ம லக்கின ஜாதகனுக்கு சனி சந்திரர் 7 லிருந்தாலும் சுக்கிரனுடன் சூரியனும் கூடினுலும் 2-ந் தாரம் நேரும்.

342. மகர லக்கின ஜாதகனுக்கு குரு 7-ல் இருந்தால் 2-ந் தாரம் சேரும்.

343. லக்கினத்தில் சூரியனும் 11-ல் குருவும் 6-ல் சனியுமிருந்தால் மிதுன லக்கின ஜாதகனுக்கு 36 வயதில் விவாகம் நடக்கும். 7-ல் சனியும் 7 மாதி 11-லும் இருந்து சுக்கிரன் 4-லிருந்தால் 3 தாரம் நடக்கும். இதில் ஒன்று இரண்டு 2-ம் ஒரே சகோதரிகளும் 3-வது முன் தாரத்தின் சித்தப்பன் மகளுமாகும்.

344. 2-ல் சனி 4-ல் சுக்கிரன் தார மிரண்டாகும்.

345. 7 மாதிக்கு ராகு பார்வையிருந்தால் மனைவி துஷ்டையாயிருப்பாள்.

346. 9-ல் சனி செவ்வாய் கூடியிருந்து இவர்களைக் குரு பார்த்தால் மிதுனம் சிம்ம மிந்த லக்கின ஜாதகன் 2- தார மடைவான். அன்றி தாசி வீட்டுக்காகத் தன் சொந்த வீட்டிலேயே தனத்தைத் திருடுவான்.

347. 7-ல் 9 மாதி உச்சமடைந்து 9-ல் ராகு விருந்தால் சகோதரன் மனைவி துஷ்டையாவாள். கன்னி விருச்சிக மிவற்றிற்குப் பொருந்தும்.

348. 7-மாதி 7-ல் குரு கேது இவர்களுடன் கூடின கும்ப லக்கின ஜாதகனுக்கு தாரம் 2 ஆகும். இதற்கே சந்திர சனி கூடி மீனத்திலிருந்தால் 16 அல்லது 18 வயதில் விவாகம் நடக்கும்.

349. மகர லக்கின ஜாதகனுக்கு சனி அவிட்டம் 3-ல் செவ்வாயுடன் கூடியிருந்தால் 2 தாரம் ஏற்படும்.

350. 2-ல் சனி ராகு இப்படி இருந்தால் 2 தாரம்.

351. 5, 6, 7 மாதிகள் 7-ல் இருந்தால் 3 தார மேற்படும். இவர்களைக் குரு பார்த்தால் தார முண்டாகும்.

352. 8 மாதி லக்கினத்தில் ராகுவல்லது கேதுவுடன் கூடியிருந்து குருவால் பார்க்கப்படாமலிருந்தால் தார நாச முண்டாகும்.

353. 7-ல் குரு 9-ல் செவ்வாய் இப்படி யிருந்தாலும்,

354. சனி புத சுக்கிரர் 11-லிருந்தாலும் துலா லக்கினத்திற் பிறந்தவருக்கு இரு தாரம் வாய்க்கும்.

355. 7 மாதி கேது கூடி யிருந்து 7-ஆம் இடம் செவ்வாயால் பார்க்கப்பட்டால் தார வமிசம் நாசமுறும்.

356. கன்னியா லக்கின ஜாதகனுக்கு சுக்கிர குஜன் கூடில் விவாகத்தில் விக்கினம் நேரும்.

357. 7-ல் செவ்வா யிருந்தாலும் விக்கினமே நேரிடும். 8-ல் செவ்வா யிருந்தால் வெகு சம்போகியாவர். ஸ்திரீ ஜாதகமானல் சம்போகத் தடை யடைவாள் !

358. சிம்ம லக்கின ஜாதகனுக்குச் சனி சுக்கிரர் 11-லிருந்து களத்திர ஸ்தானமான 7-ஆம் இடத்தை புதன் குரு செவ்வா யிவர்கள் பார்த்தால் 2 தாரங்களை அபவாதங்களை முன்னிட்டு விலக்கம் செய்து மூன்ருந்தாரத்தை மணப்பான்.

359. லக்கினுதிபதி 9-ல் செவ்வாயுடன் கூடியிருந்தாலும் 7 மாதி 6-ல் ராகுவுடன் கூடியிருந்தாலும் 7-ல் சனி யிருந்து குடும்பாதியுடன் கூடி மேற்படி லக்கினுதிபதியைப் பார்த்தாலும் விதவையை மணப்பார். சிலர் குலஹீன ஸ்திரீயை மணப்பாரென்று சொல்லுகின்றனர். ஸ்திரீ ஜாதகத்தில் இவ்வாறு இருந்தால் இப்படிப்பட்ட வாழ்க்கையல்லது சம்போகம் நேரிடு மென்றும், இவை நேரிடையாக வல்லது திருட்டுத்தனமாகவாவது நடக்கு மென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

360. லக்கினத்திற்கு 2-ல் சூரியனிருந்தாலும் பார்த்தாலும் வேசி ஸ்திரீ சேர்க்கை யுண்டாகும்.

361. லத்கினத்தில் சனி யிருந்தாலும் பார்த்தாலும் 7-ஆம் இடம் சனி வீடாகி வந்தாலும் வயதான (தோற்றமுடைய) மெல்லிய சுந்தரமான மிருதுவான கெட்ட ஸ்திரீ (சேர்க்கை ஏற்படும்) யை மணப்பார்கள்.

362. 5-ல் 7 மாதியுடன் ராகு கூடி யிருந்தாலும்,

363. 7-ல் ராகு இருந்தாலும் விவாகத்தடை யுண்டாகும்.

364. சுக்கிரன் பாபரோடு கூடினுலும் விவாகத் தடை யுண்டாகும். குரு பார்த்தால் இவைகளுக்குப் பரிகாரமாகி உடனேயே விவாகம் நடக்கும்.

365. 7 மாதி 8-ல் இருந்தால் உச்சனுகி யிருந்தாலும்,

366. 9 மாதி 2-ல் ராகுவுடன் கூடி யிருந்தாலும் இரு தாரம் ஏற்படும்.

367. 3 மாதி 7-ல் இருந்தால் சதா போகி: அதின்றி பல போகி: பல ஸ்திரீ போகி.

368. சுக்கிரன் 6-ல் சனியுடன் கூடினுல் மேஷ லக்கின ஜாதகனுக்கு கிருதாரம் ஏற்படும்.

369. துலா லக்கின ஜாதகனுக்கு செவ்வாய் லக்கினத்தில் கேதுவுடன் கூடி யிருந்தால் விவாகத் தடை யுண்டாகும்.

370. கும்பத்தில் ராகு சந்திரன் (பூரட்டாதி 1-வது பாதத்தில்) கூடி யிருந்தால் (மகர லக்கின) ஜாதகனுக்கு ரூபமுள்ள ஓரே தாரம் வாய்க்கும்.

371. கன்னியா லக்கின ஜாதகருக்கு மீனத்தைச் சனி பார்த்துக் குருவும் சிம்மத்தில் இருந்தால் 2 தார மேற்படும். அல்லது 8-ல் குரு சனி கூடினுலும் 10-ல் ரவி சுக்கிரர் கூடினுலும் 2 தாரம் ஏற்படும்.

372. விருச்சிக லக்கின ஜாதகருக்கு ராகு சுக்கிரர் 11-லும் மேற்படி சுக்கிரன் ஹஸ்தம் 3-வது பாதத்திலும் இருந்து 7-ல் குரு சந்திரரிருந்து 7-ஐ சனி பார்த்தால் விவாகமின்றி மேற்படி ஜாதகர்கள் பிரம்மசாரியாயிருப்பார்கள்.

373. சிம்ம லக்கின ஜாதகருக்கு 7-ல் குரு சனி கூடி யிருந்தால் ஏக தாரமே.

374. மகர லக்கின ஜாதகருக்கு 1-ல் சுக்கிரன், சூரியன் ராகு குஜன் இவர்களுடன் கூடினுலும் சந்திரன் மீனத்தில் இருந்தால் வெகு ரூப லக்ஷணமுடைய தாரம் வாய்த்தாலும் தன்னுடைய இனவர்க்கத்திலேயே மேற்படி ஜாதகர்கள் விவாகமாகாத கன்னியா ஸ்திரீகளைச் சேர்வார்கள். வெகு ஸ்திரீ போகி, வெகு காமியுமாவார்கள்.

375. 6-ஆம் இடத்தில் செவ்வாயும் 7-ல் ராகுவும் 8-ல் சனியும் இருந்தால் இந்த ஜாதகனுடைய மனைவி பிழைத்திராள்.

376. 7-ல் ராகு இருந்து இரு பாபர்களால் மேற்படி ராகு பார்க்கப்பட்டால் பத்தினி சேர்க்கை யோக மிருந்தும் சீக்கிரமாகவே தாரங்களுக்கு மரணம் நேரும். *

---

* சில கிரந்தங்களில் சுக்கிர நாடியில் புத்திரன் மனைவி இவர்களுக்குப் பாம்பைப் பார்த்தாலே மரண முண்டாகு மென்று கூறப்பட்டிருக்கிறது.

377. 8-ல் சனி, ராகு, சூரியனிவர்களும் லக்கினாதிபதியும் கூடி யிருந்து, 6-ல் செவ்வாயும், குடும்ப ஸ்தானத்தில் குரு கேது வுடன் கூடியும் இருந்தால் தாரம் ரோகத்தை யடைந்து துர்ப்பல மாகி பலவித பீடைகளை யடையும்:—கன்னியா லக்கினம்.

378. கன்னியா லக்கின ஜாதகனுக்கு குரு 12-ல் இருந்து 7 மிடத்தைச் சனி பார்த்து சுக்கிரன் 4, 7, 10-ல் அல்லது லக்கி னத்தில் இருந்தாலும் தாரம் 2 ஆகும்.

379. கடக லக்கின ஜாதகனுக்கு 6-ல் சனியும் லக்கினத்தில் குருவு மிருந்தால் இரண்டு தாரமும் சகல சம்பத்துடனு மிருப் பார்கள்.

380. சிம்ம லக்கின ஜாதகனுக்கு சனி 2-லிருந்து அல்லது இரண்டைப் பார்த்து இருக்க, செவ்வாய் ராகு ஐந்திலிருந்தாலும் குரு 8-ல் இருந்தாலும் இரு தார மேற்படும். இத்துடன் சுக்கிரனும் 8-ல் இருந்தால் இப் பலன் தவறாது.

381. 8 மாதிபதியுடன் சுக்கிரன் கூடில் விவாகத் தடை யுண் டாகிப் பிறகு அதே ஸ்தானத்தில் விவாகம் நேரும்:—கன்னியா லக்கினம்.

382. 7-ல் சனி குஜர் பார்த்தாலும் விவாகத் தடை ஏற்படும் கன்னியா லக்கினம்.

383. மகர லக்கின ஜாதகருக்கு சந்திரன் 9-லும் சனி 12லும் இருந்து சுக்கிரன் 7-லு மிருந்தால் 3 மனைவிய ரேற்படுவர். இத் துடன் 6-ல் செவ்வாயு மிருந்தால் வயிற்றிலேயே சிசு மரித்துத் தாரமும் மரிக்கும். இப்படி 2 தாரம் மரிக்கும். பிறகு மூன்றாவ தாக இளைய சகோதரன் மாதா இவர்களின் பலவந்தங் காரணமாக அம்மான் பெண்ணை மணப்பார்.

384. கடக லக்கினத்தில் ஜனித்தவருக்கு 10-ல் சனியும் 4-ல் புத சுக்கிரனுமிருப்பின் 21-ல் முதல் விவாகமும் 31-ல் 2-வது விவாகமும் நடக்கும்.

385. கடக லக்கின ஜாதகனுக்கு 7-ல் சனி சந்திரிருந்து 4-ல் குரு சுக்கிரரிருந்தால் 4, 5 இடங்களில் விவாகம் யத்தனப் பட்டுத் தடைப்பட்டுப் பிறகு சனி 2-வது பரிவர்த்தியில் மகரத்தில் வரும்போது நடக்கும்.

386. கும்ப லக்கின ஜாதகருக்குச் சூரியன் 10-லும் சுக்கிரன் (சித்திரை 3-ல்) 9-லு மிருந்தால் விவாகமான பின் மாமியார் வீட்டில் வாசம் ஏற்படும். அந்த ஆஸ்தியையும் அடைவன்.

387. நீச்ச ஸ்தானாதிபதி நீச்ச நவாம்சையிலிருந்தால் பிள்ளையின் விவாக காலத்தில் 2 புத்திரர் காணாமல் போய் விவாகம் தடைப்பட்டு பிறகு 2, 3 மாதத்தின் பிறகு நடக்கும்.

388. கன்னியா லக்கின ஜாதகனுக்கு ஆயில்யம் 3-ல் குருவும் செவ்வாயு மிருந்து கிருத்திகை 4-ல் சுக்கிரனும் மகம் 1-ல் சனியும் உத்திரட்டாதி 4-ல் ராகுவு மிருந்தால் பாலியத்தில் விவாகமில்லை. மனைவியால் சுகமில்லை. 30 வயதிற்கு மேல் விவாகமாகிச் சுக பாக்கியாதிகளுண்டாகும். சிலர் மதம் 2 தாரம் என்பது, சுக்கிர நாடியில் ஓரே தாரமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

389. சூரியன் 7-மாதிபதியாகி ரேவதி 4-ல் புதனுடன் கூடி இருந்து ரோகிணி 1-ல் சுக்கிரனும் உத்திரட்டாதி 3-ல் ராகுவும் சனியு மிருந்தால் 20 அல்லது 21 வயதில் விவாகம் ரூப லக்ஷண தாராம் வாய்க்கும். ஆனால் மேற்படி தாரத்திற்கு ஒவ்வொரு கர்ப்பத்திலும் கர்ப்பந்தரித்த நாள் முதல் பிரஸவ காலம் வரையும் பீடையுண்டாகித் தேக ஜாட்டிய முண்டாகிப் பிரஸவமான பின் குணமேற்படும். இதற்குத் துர்க்காதேவி ஆலயத்தில் ருத்திராபிஷேகமும் பிராம்மண போஜனமும் செய்வித்து மேலும் தான தர்மாதிகளும் செய்தால் சம்பூரணமாகக் குணமுண்டாகும். சாந்திக்கு முன் ஒரு சமயம் நிலைத்தாலும் ஸ்திரீ சந்ததி நிலைக்கும். ஓரே தாரமே நிலையாகும். சாந்திக்குப் பிறகு ஆண் சந்ததி நிலைக்கும் என்றுமுளது.

390. 7-மாதியாகிய சனியே ரோக ஸ்தானாதிபதியாகிச் சூரியனுடைய ராசியில் சிம்மத்தில் இருந்து ராகுவுடனும் கூடியிருந்து சூரியன் புதனுடன் கூடி யிருந்தால் விவாகமான பின்பு பித்தரோகம் ஏற்பட்டு பிறகு சோகை யுண்டாகிச் சதிபதிகளில் ஒருவரை யொருவர் விபசார தோஷ முள்ளவரென்று சந்தேகித்து அதுமுதல் மனஸ்தாப முண்டாகிப் பிறகு சந்தேக நிவர்த்தியான பின் சுக முண்டாகும்.

391 2, 7 மிடங்களில் பாபரிருந்து இந்த ஸ்தானாதிபதிகளும் பாபருடன் கூடி யிருந்தால் சன்னியாசத்தினால் மனைவி

யிடம் விரோத முண்டாகும். அல்லது மனைவி மரித்துவிடுவாள். பிறகு விவாகமில்லை.

392. சூரியன் அசாத்திய பாபியா யிருந்தாலும் சிம்ம ராசியி லிருந்தால் முன்சொன்ன பலனுண்டாகாமல் தார சுகமுண்டாகும்.

393. மேஷம் முதலிய பாப ராசிகளில் அல்லது சூரியன் 2, 7-ஆம் இடமான சுய க்ஷேத்திரத்திலேயே அசாத்திய பாபருடன் கூடியிருந்தால் முன் சொன்னபடி தார நாசத்துடன் சன்னியாச யோகமும் நேரும். சுபர் திருஷ்டி யல்லது சேர்க்கையிருந்தாலும் இப் பலனே யுண்டாகும்.

394. இப்படியே நீச்ச ராசியில் பாபருடன் கூடி யிருந்தாலும் நீச்சக் கிரகத்துடன் பாபராசியிலிப்படி யிருந்தாலும் தாரநாச முண்டாகும். இவர்களே நீச்சத்தில் உச்சாம்ச (உச்சக்கிரக)த்துடன் கூடி யிருநதால் வெகு ரூப லக்ஷணமுடைய வெகு தாரம் ஏற்படும்.

395. இப்படியே மிதுனம் மேஷம் இரட்டை ராசி இவைகளி லிருந்தாலும் வெகு ரூப லக்ஷணமுள்ள வெகு தாரமே யுண்டாம்.

396. இந்த ராசிகள் 2, 7-ஆம் இடமல்லது ஆரூட ஸ்தானங் களாக ஆனுல் அங்கு சுய க்ஷேத்திரத்தில் அந்தந்த ஸ்தானுதிபதி யிருந்தால் தாரம் முன்னிறந்து விடும்.

397. ரிஷபத்திலாவது துலாத்திலாவது சுக்கிரனும் குருவும் கூடி யிருந்தாலும் அல்லது அன்னிய ராசியில் கூடி யிருந்தாலும் தாரம் முன்னிறந்துவிடும்.

398. தார ஸ்தானுதிபதியும் அல்லது 2, 7-ஆம் இடத் ததி பதியும் சுக்கிரனும் உச்சத்தில் இருந்தால் உத்தம வம்சத்தில் தாரம் வாய்க்கும். இவர்களே நீச்ச வர்க்கத்திலிருந்தால் நீச்ச வழியில் தாரம் வாய்க்கும். இந்த உச்ச உச்சாம்ச கிரகங்களை சுபர் கூடினும் பார்க்கினும் வெகு ரூப சுந்தரியான பெண் மனைவியாவள்.

399. மேற்படி 2, 7-ஆம் இடங்களில் சனி ராகு கூடி யிருந் தால் தாரம் எதிர் வழக்காடும் ஸ்திரீயாகும். அல்லது தாரத்தை இழந்து விடுவர். அல்லது மனைவியைப் புருஷனும், புருஷனை மனைவியாவது ஒருவரை யொருவர் வில(க்)கி விடுவார். மேற்படி

ஸ்தானுதிபதிகளுடன் சனி ராகு கூடினும் சிலர் இப் பலனையே சொல்கின்றனர்,

400. மேற்படி ஸ்தானங்களில் சுக்கிரனும் கேதுவும் கூடி யிருந்தால் சதாகாலமும் மனைவிக்கு ரத்தப் பிரவாகமான ரோக முண்டாகும். ரக்தசிராவ ரோய் என்பதும் பெயராகும்.

401. மேற்படி ஸ்தானங்களில் செவ்வாயும் கேதுவும் கூடி யிருந்தால் ஜாதகன் மனைவி அஸ்திஸ்ராவ நோயால் வருந்துவாள்.

402. மேற்படி ஸ்தானங்களில் ராகு, சனி, சூரியனிவர்கள் கூடி யிருப்பின் ஜாதகன் மனைவி அஸ்தி ஜுரத்தினுல் இரவும் பக லும் தவிப்பவளாவள்.

403. மேற்படி ஸ்தானங்களில் புதனும் கேதுவும் கூடி யிருந்தால் ஜாதகன் மனைவி ஸ்தூல அங்க முடையவளாவாள்.

404. மேற்படி ஸ்தானங்கள் புதனுடைய அல்லது செவ் வாயினுடைய க்ஷேத்திரமானுல் அங்கு சனியும் செவ்வாயும் கூடி னுல் பித்த பிராணரோக, கிராணிரோக, ரணரோகாதிகளுண்டாகி மனைவி பீடை யடைவாள்.

405. செவ்வாயும் சனியும் புதனும் மேற்படி ஸ்தானங்களி லிருந்தால் அதாவது புத செவ்வா யிவர்களுடைய தல்லாத மேற் படி வேறிடத்தில் இருந்தால் மனைவி, காது கண் இவற்றில் ரோகத்தை யடைவாள்.

406. செவ்வாய், ராகு, புதன், குரு இவர்கள் கூடி 2, 7-ஆம் இடங்களில் புதன் குஜ னிவர்களுடைய தல்லாத வேறு க்ஷேத்திரங் களில் இருந்தால் மனைவி பல்வலி யுடையவளாவாள்.

407. மேற்படி ஸ்தானங்கள் கன்னியா ராசியாகினும் வேறு ராசிகளானுலும் சனி ராகு இவர்கள் கூடி யிருந்தால் ஜாதகன் மனைவி நொண்டியாக வல்லது முடமாவாள்.

408. 7-மாதிபதி லக்கினத்திற்கு எட்டில் இருந்தால் தாரம் ரோகமடையும். காமியாவாள், அல்லது கோபியாவாள். அற்ப சுகி.

409. 7-மாதி 9-ல் அல்லது 2-ல் இருந்தால் சதா ஸ்திரீ களிடமே மனம் செல்லும்.

410. 7-மாதி 10, 4 இவ்விடங்களில் இருந்தால் சம்சயிக்கத் தக்கினவள் மனைவியாவாள். அல்லது மனைவியிடம் சந்தேகம் பிறக்கும். மனைவி தருமவதி, சத்தியவதி, தந்தரோகவதியு மாவாள்.

411. 7-மாதி 11-ல் அல்லது 3-ல் இருந்தால் சந்ததி இறந்து பிறக்கும். பிரயத்தினத்தினால் சந்ததி யுண்டாம். எப்போதாவது சந்ததி நிலையாகும். அதாவது பாலியத்திலாவது அந்தியத்திலாவது நிலைக்கும் என்பதாம்.

412. 7-மாதி 12-ல் இருந்தால் தரித்திரை யல்லது கிருபணத் தன்மையுள்ளவள் மனைவியாவாள். மனைவி ரூபவதியாவாள். ஜாதகன் தனஹீனனாவன். மானி. எவ்வளவு சம்பத்திருப்பினும் சர்வ குணங்களிருப்பினும் சதா மனச் சஞ்சல முண்டாகும்.

413. ஏழாமிடத்துக் குடையவன் ஐந்தாமிடத்தில் இருந்தால் எப்போதும் சந்தோஷ முண்டாகும்.

ஸப்தமபாவம் முற்றும்.

---

# ஜீ வ ன பா வ ம்

அல்லது

# தொ ழி ல் நி ர் ண ய ம்.

ஜாதகர்களுக்குப் பொதுவாக ஜீவன ஸ்தானமானது பத்தாமிடமென்று சில கிரந்தத்திலும் 3-வது ஸ்தானம் என சில கிரந்தத்திலும் போஜன ஸ்தானம் 2-ஆம் இடமுமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. தொழில் மூலம் தனந்தேடி உண்ணல், பிரதி (ஒரு ஜீவராசியில் பிறந்த) மனிதர்களுக்கும் பொருந்தும். அப்படிப்பட்ட தொழிலைச் செய்துவரும்போது தகப்பன், தாய் சகோதரன், தாரம், வேலையாள், சத்துரு இவர்களிடமிருந்தும் இன்னம் பலவாறாகவும் தனம் தேடுவதையும் அதன் காலத்தையும் உபதேசிக்கப்படுகிறது.

ஜாதகன் பிறந்த காலத்தில் ஜன்ம லக்கினத்திற்குப் பத்தாமிடத்திலுள்ள கிரகங்களைக் கொண்டும் பத்தாமிடத் ததிபதி யிருக்கும் கிரகத்தைக் கொண்டும் தொழிலை நிர்ணயஞ் செய்யவேண்டும். ஜன்ம லக்கினத்திற்குப் பத்தாமிடத்தில் கிரக மில்லாவிடில் சந்திரனுக்குப் பத்தாமிடத்திலுள்ள கிரகங்களால் அறியவும், அல்லது சூரியனுக்குப் பத்தாமிடத்திலிருக்கும் கிரகத்தாலு மறியலாம்.

ஜாதகனுடைய ஜென்மகாலங்களி லேற்பட்ட ஜன்ம லக்கின சந்திர லக்கினங்களுக்குப் பத்தாமிடத்தில் ஒரு கிரகமுமில்லாவிடினும், மேற்படி பத்தாமிடத்தை ஒரு கிரகமும் பாராதிருப்பினும் (பிறந்த) ஜாதகர்கள் தரித்திரத்தினால் பூமியில் அங்கு மிங்கு மலைந்து திரிபவர்களாவார்கள்.

மேற்படி பத்தாமிடத்தில் சூரியனிருந்தால் புத்தி, தைரியம், பராக்கிரமம், கீர்த்தி, புத்திரன், ஸ்திரீ சஞ்சலம் இத்தியாதிகளுண்டாகும்.

சந்திரன் 10-ஆம் இடத்திலிருந்தால், செய்யப்படுகிற தொழிலாலேயே தனத்தை யடைவார்கள். காம சம்பந்தமான செய்கைகள் விவேகம், இத்தியாதிகள் மூலம் தனமுண்டாகும். செய்யப்படுகிற தொழில் என்பது குலத்தொழிலைக் குறிக்கும்:

லக்கினாதிபதி 11-ல் இருந்து 11-மாதி 1-ல் இருந்தால் 33-வது வயது வந்ததும் 1000 தனம் சம்பாதனை யுண்டாகும்.

2-மாதி 11-லும் 11-மாதி 2-லுமாகி யிருந்தால் விவாகமான பின்பு வெகு பாக்கிய முண்டாகும்.

3-மாதி 11-லும் 11-மாதி 3-லுமாகி யிருந்தால் சகோதரனால் தனலாப முண்டாகும்.

4,7,10,1,5,9-இந்த ஸ்தானங்களில் சுபருடன்கூடி 1, 2, 11, ஆகிய இந்த பாவாதிக ளிருந்தால் 40 வயது முதல் 1500 தனம் சம்பாதனை யுண்டாகும்.

11-மாதிபதி 2-லிருந்து 2-மாதிபதி 1,4,7,10-இந்த விடங்களி லிருந்தாலும், இந்த இடங்களில் குருவுடன் இருந்தாலும் 36-ம் வயது வந்தபின்பு 2000 தன சம்பாதனை யுண்டாகும்.

11-ல் குருவும் 9-ல் சுக்கிரனும் 2-ல் சந்திரனு மிருந்தால் ஆருயிரத்துக்கு அதிபதியாவன்.

9-ஆம் இடத்தில் அதாவது பதினொன்றுக்குப் பதினொன்றில் குருவுடன் சந்திர சுக்கிரரும் கூடியிருந்தால் தனம், ரத்தினம், ஆபரண மிவைகளுடைய எஜமானவன். ஸ்ரீமானுமாவான்.

12-ல் பாபரிருந்து 12-மாதியுடனும் பாபர் கூடி யிருந்தால் சுதேசத்தைத் தவிர்த்துத் தேசாந்திரத்திலும் சம்பாதனை யுண்டாகும்.

12-ல் சுபரிருந்து 12-மாதியுடன் சுபர் கூடினாலும் பார்த்தாலும் சுதேசத்திலேயே சஞ்சரித்தலால் தனம் தேடலுண்டாகும்.

12-ல் சனி முதலியவர்கள் செவ்வாயுடன் கூடி சுப திருஷ்டியு மடைந்தால் பாப மூலமாக தனார்ஜன முண்டாகும்.

10-லும் பாபரிருந்து 11-லும் பாபரிருந்தால் சுய ஜனங்களைக் கெடுத்தும், அவர்களைக் கெடுத்துத் தூஷித்தும் அவர்களால் தானும் தூஷிக்கப்பட்டும் துச்சரிதையுடன் ஜீவனம் செய்வர்.

10-மாதி 8-லிருந்து ராகுவுடன் கூடியிருந்தால் மகா மூர்க்கத் தன்மையால் ஜனத்துவேஷ மடைந்து கெட்ட காரியங்களையே செய்து ஜீவனம் நடத்துவார்கள்.

10-மாதி 7-லிருந்து சனி செவ்வா யிவர்களுடனும் கூடி யிருந்தாலும் 7 மாதி பாபருடன் கூடி இருந்தாலும் உண்பதும் மைதுனமுமே நினைவாகும்.

7-மாதி உச்சத்தை யடைந்து குருவுடன் கூடியிருந்து 9 மாதி 10-ல் இருந்தால் வெகுமான ஐசுவரியாதிக ளுண்டாகும். சுக ஜீவனம் உண்டாகும் இது கும்பலக்கினத்திற்கு மட்டும் சேரிடாது.

11-மாதி 10-லும், 10-மாதி 1-லும் இருந்தாலும், இருவரும் கூடி 10, 11-மாதிகள் அல்லது 1, 10-மாதிகள் அல்லது 1, 11 மாதிகள் 4, 7, 10 இந்த ஸ்தானங்களிலிருந்தாலும் சுக ஜீவனம் உண்டாகும்.

10-மாதிபதி சரவாம்சையிலிருந்தால் சஞ்சாரத்தினாலும் ஸ்திர நவாம்சையிலிருந்தால் ஓரிடம் நிலையாகவும் உபயாம்சத்திலிருந்தால் வெளிதேசம், தன் தேசம் இவற்றிலிரண்டிலும் தன சம்பாதனை ஏற்படும்.

ஒன்பதா மாதிபதி. குரு, புதன், சந்திரன், சுக்கிரனிவர்கள் கூடி யிருந்தாலும், ஒன்பதா மாதிபதியும் குரு, சந்திர சுக்கிரரும் கூடி யிருந்தாலும், இவர்களுடன் நான்காமாதிபதியும் கூடியிருந்தால், விசேஷ பாக்கிய முண்டாகி ஜீவன முண்டாகும். இவர்களைச் சூரியன் கூடி யிருந்தால் வித்தையாலும், ராஜ்ஜிய சேவகத்தாலும், ராஜ்ஜிய பாரத்தினாலும், மருந்தினாலும், ரத்ன பரீக்ஷையாலும், குதிரை விற்பதாலும் தன ரத்ன பாக்கியங்களுண்டாகும். இவர்களைச் சந்திரன் பார்த்தால் ராஜ சன்மானத்தினால் பாக்கியமும், இவர்களைச் சனி பார்த்தால், தாஸி தாஸ ஜனங்களாலும், சூத்திராலும், மற்றைய கிரகங்கள் அதாவது ராகு கேதுக்கள் கூடினாலும் பார்த்தாலும் கண்ணுக்கு மறைவான இடத்தில் (நீச்சத்) தொழிலாலும் தனம் வரும்.

சாமர யோகத்தில் பிறந்தால் 12 வருஷம் தொடர்ந்து யோகமாகவே நடக்கும்.

ஜாதகன் பிறந்த ஜன்ம நக்ஷத்திராதிபதி உச்சத்திலிருந்து 6, 7, 8 முதலிய ஸ்தானங்களில் சூரியன் புதனிவர்களும், குரு சுக்கிரனிவர்களும் வரிசையாக இருந்தால், ராஜ்ய லக்ஷ்மீ யோகம் உண்டாகும். இந்த ஜாதகருக்கு வயது 25 அல்லது 30 முதல் பதினாறு வருஷம் தொடர்ந்து ராஜயோகம் நடக்கும்.

ஜாதகன் பிறந்தபோது மூன்று கிரகங்கள் *உச்சத்தில் இருந்தால் ஜாதகன் யோக ஜீவன முடையவனுவன். இரண்டு கிரகங்களுச்சத்தி லிருந்தாலும், மேற்படி பலனே யுண்டாகும். சுக்கிரன் உச்சத்தில் கேதுவுடன் கூடியிருந்தாலு மிப்பலனே.

மேற்படி கிரகங்கள் உச்ச ராசியில் நீச்ச பாவத்தில் இருந்தாலும், நான்கு கிரகங்கள் சுய க்ஷேத்திரங்களில் இருந்தாலும், துக்க ஜீவனமும் ஜீவனத்திற்கே கிலேசமும் அடைந்து துராத்துமாவாகவு மாவன். மேற்படி கிரகங்கள் நீச்ச ராசியிலேயே நீச்சாம்சத்திலிருந்தால் பின்னும் வெகு கிலேச முண்டாகும்.

ஷை கிரகங்கள் நீச்ச ராசியில் உச்சவாம்சையி லிருந்தாலும், சுய க்ஷேத்திரத்தில் பலமாக இருந்தாலும், நீச்சாம்சையி லில்லாமலிருந்தால் சுக ஜீவனமும் நல்ல யோகமுமுண்டாகும்

ஸ்திர லக்கினங்கள் நான்கிலும் ஜனித்த ஜாதகர்களுக்கு லக்கினத்திற் கிரண்டில் பாபரிருந்தால் யோக பங்க மேற்பட்டுவிடும். இத்துடன் கொஞ்சம் அங்க விகாரமுமுண்டாகும்.

சந்திரனுக்கு எட்டு பன்னிரண்டா மிடங்களில் பாபரிருந்தாலும் மேற்படி பலனே யுண்டாகும். யோக பங்கம் முதலானவைகளும் சேரிட்டுவிடும்.

ராசியில் எல்லாக் கிரகங்களும் உச்ச ராசிகளிலிருந்து நவாம்சையில் மேற்படி கிரகங்கள் நீச்ச நவாம்சத்தி லிருந்தால் பெரிய அரச வமிசத்தில் பிறந்து சமுத்திரங்களுக் கெல்லாம் அதிபதியாயிருந்தாலும் முக்கிய திகம்பரனுகி பிக்ஷாசன முண்பான்.

குருவானவர் ஜாதகன் ஜனன காலத்தில் லக்கினத்திற்கு ஆறிலாவது, பத்திலாவதிருந்து நவாம்சத்தில் சுப நவாம்சத்தி லிருந்தால் தரும சீலனுக ஜீவிப்பான். பாப புத்தியில்லாதவனுவன். சுபாம்சம் என்பது நவாம்சத்தில் கடைசி நவாம்சமுமாகும். மேற்படி குருவே கன்னியில் மேஷ நவாம்சத்திலும், தனுசு ராசியில் கடக நவாம்சத்திலும், மீன ராசியில் துலா நவாமசத்திலும் இருந்தால் வித்யா சௌக்கியமின்றித் துக்க முடையவனுவன். கஷ்ட ஜீவனம்.

---

* இந்தத் திரிக்கிரக உச்ச பலன் கலியுகத்தில் நடப்பது சாத்தியமில்லை என்று கர்க்க மகரிஷி சொல்லி யிருக்கிறார். மேலும் அந்த ஜாதகர்கள் நற்பலனை யடையாமல் கிரகச் சித்ரங்களினுல் தாபத்தையே யுடையவராவார்கள்.

குரு அஷ்டமாம்சத்தில் லக்கினத்திற் கிரண்டா மிடத்திலும் சந்திரன் நீச்சநவாம்சத்திலு மிருந்தால் பிறந்த பதினறு வருஷம் வரை ஒரு யோகமாக எண்ணப்படுகிறது. மேற்படி குருவே ஷெ அஷ்டமாம்சத்தை விட்டு விலகி லக்னத்திற் கிரண்டாமிடத்தி லிருந்தால் வித்தை, விநயம், மதுரமான பேச்சு, தர்மத்தை ரக்ஷித்தல் இவைகளுடன் சுகமடைவான். மேற்படி குருவே இரண்டா மிடத்தில் சுபருடைய அம்சத்தில் இருந்தால் வித்தை புத்தி யிவற்றை யடைந்து ராஜத்துவாராவாக பிரசித்தியாகி ஜீவிப்பான்.

பொதுவாகவே குரு 1,4,7,10,5,9 ஆகிய ஸ்தானங்களில் ஜன்ம காலத்தில் இருந்தால் விசேஷ பாக்கிய முண்டாகும்.

எந்த ஜாதகனுக்கும் பிறக்கும்போது சந்திர லக்கினத்திற்குப் பத்தில் சுபக்கிரக மிருந்தால் அந்த ஜாதகர் சந்திர சூரியருள்ள வரை கீர்த்தியும், ஆயுள்வரை அழியாத சம்பத்து மடைவானென்று ரிஷிகள் சொல்லுகிறார்கள். வேறு சிலர் பாபக்கிரக மிருப்பினும் மேற்படி பத்தாமிடத்தில் இதே பலனைச் சொல்லுகின்றனர்.

ஒரு ராசியில் அல்லது லக்கினதிபதியுடன் சூரியன் புதனுடன் கூடினாலும் அல்லது லக்கினதிபதி புதனாகி அவருடன் சூரியன் கூடியிருந்து குரு தன் உச்சத்திலிருந்தாலும், ஷெ சூரியன் புதன் லக்கினதிபதி இவர்கள் உச்சத்தில் இருந்து குரு ஐந்தாமிடத்தி லிருந்தாலும் 2 ஆம் இடத்திலிருந்தாலும் ஜாதகன் பண்டித யோக மடைவான். மேற்படி யோகப் பலனாக அரசர்களின் சம்மதியினால் சாஸ்திரங்களைப் பார்த்து அறிந்து (பிராம்மணர்) வித்துவான்களின் சமாஜத்தில் வித்துவானாகித் தர்ம சீலனாகவும் துதிக்கப்பட்டும், ஞானவானாகவும் ரகசியவானாகவும் ஆவான். ராஜ சபையில் ஜீவனம். 42 வயது முதல் யோகம் ஆரம்பமாகும்.

ஜாதகத்தில் பாபக் கிரகங்கள் நீச்சத்திலிருந்து சுபர்கள் 1,4,7,10,5,9 இந்த ஸ்தானங்களி லிருந்தாலும், இவர்கள் 9, 10 ஆம் இடங்களி லிருந்தாலும், ஒன்பதா மிடத்திலேயே அல்லது பத்தா மிடத்திலேயே யிருந்தாலும், அந்த ஜாதகன் மகா பலம், கியாதி, பிரதாபம் மேன்மையான நிலமை, தீர்க்காயுள், சுகம் இவை களுடன் மற்றைய அரசர்கள் வணங்கும் அரசனாவன்.

சந்திரனிருக்கும் வஹுவினல் 4-வித யோகங்கள் சொல்லுகிருர்கள். அவை; உத்தமம், மத்திமம், அதமம், அதமாதமம் என நான்கு விதங்களாகும். ஷை சந்திரன் கேந்திரத்தில் உத்தமாம்சத்திலிருந்தால் சிரேஷ்டமான ஜீவனமும், ரஜோகுணமும் பாப புண்ணியங்களுடனும் கல்வி யறிவுடனும், அதமாம்சத்தி லிருந்தால் சதா ரோகமும், அதர்மப் பிரியமும் காமமும் அநாசாரமும், அதமாதமாம்சத்திலிருந்தால் துக்க ஜீவனமும் துக்கமும் குத்வித சம்பந்தமும், உக்கிர கோபமும், கலஹப் பிரியமும், வியர்த்த ஜீவிதமும், சதா பாபச் செய்கையும் துஷ்ட ஜனப் பிரியமும் நற்பலன் நிஷ்பலனுர் பலனுகும்.

நீச்ச பங்க ராஜயோகத்தில் பிறந்தவர்கள் 33 அல்லது 35 வயது முதல் ராஜ யோகமடைந்து விசேஷ பாக்கியாதி சுக மனுபவிப்பார்கள். இதைத் தெசையின் பேதங்களினு லறியவும். ஷை நீச்ச பங்க தெசை குரு தெசையாயின் 46 வயது முதல் மாதம் 10-ஆயிரம் சம்பாதனை யுண்டாகும்.

சுக்கிரன் ஜென்ம லக்கினத்திற்கு 2-லாவது 5-லாவது இருந்து அந்த ஸ்தானதிபதி பலவானுக எங்கிருந்தாலும் ராஜாபிமானியாகி ஜீவிப்பார்கள்.

சந்திரன் விக்ஞானும்சத்தில் இருந்தால் விக்ஞான ஆராய்ச்சியால் ஜீவனமும், ஜடிலாம்சத்தில் இருந்தால் ஜடாதாரியாகி ஜீவனமும், பாரகாம்சத்தி லிருந்தால் மூட்டை சுமத்தலால் ஜீவனமும், பிரேஷ்யம்சத்தி லிருந்தால் பிறரை அடுத்தல்லது பிறரை எதிர் பார்த்து அவர்கள் தயவால் ஜீவனமும், சரஸ்வதி யம்சத்திலிருந்தால் நல்ல கல்வி கற்றுக் கவிதையில் பிரசண்ட கவியாகி ஜீவனமும்.

சுக்கிரன் எட்டாமிடத்தி லிருந்தால் ஸ்திரீ தனத்தினல் அல்லது ஸ்திரீகளை யண்டி (தனமும்) அதனுல் ஜீவனமும் நேரிடும்.

9-க் குடையவன் 6-மாதியுடன் கூடி 5 அல்லது 10 ஆம் இடத்திலிருந்தால் வெகு பாக்கியம் தேடி ஜீவனம்.

9-க் குடையவன் 10-ல் 3-மாதியுடன் கூடியிருந்து சனியால் பார்க்கப்பட்டிருந்தால் சுதேசத்திலேயே பாக்கியம் தேடுவான்.

9,10,5 இந்த ஸ்தானங்களுக் குடையவர்கள் கூடியிருந்தாலும் 9,10,5-மாதிகள் கூடி லக்கினத்தி லிருந்தாலும், இவர்கள்

சந்திரனுல் பார்க்கப்பட்டிருந்தால் பசுக்களின் விருத்தியால் தன மூண்டாகும்.

10-மாதியாகிய ராஜ்யாதிபதி ஏழிலிருந்து லக்கினுதிபதியுடனும் கூடியிருந்தால் தடாகவனம், நந்தவன மிவைகளை விருத்தி செய்து தனமடைவார்.

5,9-மாதிகள் அல்லது 9, 10-மாதிகள் கூடினுல் சுயதேசத்திலேயே பூமி தேடுவான்.

10-மாதி ஒன்பதா மாதிபதியுடன் கூடி ஐந்தாமிடத்தில் இருந்து சந்திரன் இவர்களைப் பார்த்தால் சுய புத்தியால் (சர்வமுமறிந்து) தனம் தேடுவார்கள்.

10-மாதிபதி நீச்சனுடன் கூடி யிருந்தாலும் 10 மாதிபதி நீச்சனுகி யிருந்து ராகுவால் அவர் பார்க்கப்பட்டாலும் ஜாதகர்கள் புத்தியற்ற நீச்ச செய்கைகளால் தனம் தேடுவார்கள்.

10-மாதிபதி 5-ல் இருந்து 3,9-மாதிகளுடன் கூடி யிருந்தால் தெற்கில் விக்ஞானத்தினுல் தனம் தேடுவான். வேறு சிலர் பாலியத்திலேயே மேற்படி வழியால் தேடுவானென்று சொல்லுகின்றனர். மேலும் இவர்களைக் குரு பார்த்தால் யாகம் செய்வானென்றும்,

5-மாதி 5-ல் 10-மாதியுடன் கூடியிருந்தாலும் சுக்கிரனுல் பார்க்கப்பட்டால் யானை கட்டி வாழ்வான். சமுத்திரத்தில் வசிப்பானென்றும் சிலர் சொல்லுகின்றனர். வடக்கில் தனம் சேர்ப்பான். இது கும்பம், மேஷம், ரிஷபமிவற்றிற்கு நேராது.

10, 11-மாதிகள் 5-ல் இருந்தால் கிழக்கில் விக்ஞானத்தினுல் தனம் தேடுவான்.

11-மாதிபதி 5-மாதியுடன் கூடி 3 ஆம் இடத்தில் இருந்தால் விக்ஞானத்தினுல் தெற்கில் தனம் தேடுவான்.

11-மாதி 3-ல் பார்சுவ ஸ்தானுதிபதியுடன் கூடியிருந்தால் மேற்கில் விக்ஞானத்தினுல் தனந் தேடுவான்.

2-மாதிபதி குரு இவர்கள் 1,4,7,10,5,9 ஆகிய ஸ்தானங்களில் கூடி யிருந்தாலும், 2,3 ஆம் இடங்களில் கூடி யிருந்தாலும், சகல கலைகளும் கற்று ஜீவிப்பான். இங்கு சூரியன் இவர்களுடன் கூடி

யிருந்தால் வேதார்த்தம், மருந்து, ரத்தின பரீக்ஷை மாச் சாமான்கள், சகல மணி வித்ருமாதிகள் இவற்ருலும் இதிஹாஸ புராணுதிகளா லும், குஜன் கூடி யிருந்தால் தர்க்க சாஸ்திரத்தினுலும், கபடம், திருட்டுத் தொழில் இவற்ருலும், புதன் கூடி யிருந்தால், யக்கியம் செய்தல், ஜோதிஷ மறிந்து சொல்லல், மந்திர சாஸ்திரம், சிற்ப வித்தை இவைகளாலும், குரு கூடி யிருந்தால் சப்தாதி சாஸ்திரம், மந்திரோபதேசம், தர்ம சாஸ்திரமிவற்றின் விதி கர்த்தாவாகவும், சுக்கிரன் கூடி யிருந்தால் காவிய, நாடக, அலங்காராதி வித்தைகளா லும், சனி கூடி யிருந்தால் மூடனுகி, வயது முதிர்ந்திருக்கப்பட்ட ஸ்திரீ, உயிர் சம்பந்தம், இன்ஷியூர் இவற்ருலும், அஸத்தியத்தினு லும், அபாகர்மங்கள் அதாவது, க்ஷயம், சுபமல்லாத அசுப காரியங் கள், அதாவது பிரேத சம்பந்த சகல காரியங்களும், பிரேத (சடங்கு களும்) புரோகிதமும், பிராம்மணுர்த்த முன்னல் ஆம சிரார்த்தம் வாங்கல் இவற்றினுலும் சூதாட்டம் பிச்சை யெடுத்தல் பஞ்சு, கருப்பு தானியவகை பயிர்செய்தல், கெட்ட வஸ்து வியாபாரம், மண் பாத்திரம், இரும்பு, எள்ளு, கல்லுடைத்தல், சுமை யெடுத்தல் கடின வேலை செய்தல், தண்டித்தல் செய்தல், தண்டனை யடைதல், தாழ்ந்தோரை ஏமாற்றல், பாவத் தொழில் செய்தல், கட்டை உடைத்தல், பன்றி, மான் தோல், சவுரிமயிர், தார், கல் சம்பந்த வியாபாரம், சேவகத் தொழில், வெட்கங்கெட்ட தன்மை, வாயடித் தல், நீலம், சன்னியாசம், கிராமாதிகாரம், நகராதிகாரம், அஞ்சனம் செக்காடுதல், எண்ணெய், புண்ணுக்கு, பொய் பேசல், கிரிமினல் சம்பந்தம், எரு, குப்பை கூளம் சேர்த்தல், கோள் சொல்லுதல், திருடல், மது வியாபாரம், சாத்தான், ஐயனுர், சாமி ஆடல், டம்பம் இவைகளின் மூலம் தனமும், மேற்படி சனியுடன் பாபர் கூடில் அநியாய வழியிலும், சுபர் கூடில் நியாய வழியிலும் சம்பாதித்து ஜீவன முண்டாகும்.

2-மாதியும் 11-மாதியும் சந்திரனும் கூடி மேற்படி ஸ்தானங் களில் இருந்தால் இலை, புஷ்பம், தளிர், சந்திரகாந்த நீலம், வஸ்திரம், சுகந்தம், அரிசி வியாபாரம், சங்கு, பாலாடை, தித்திப்பு சம்பந்தம், தயிர், நெய், பசு, சீரப் பயிற்சி, வெங்கலம், வெள்ளி ரூபாய், முத்து, சுகபோஜனம், ரூபம், தாய் வர்க்கம், தேவி பூஜை செய்தல், ரஸவஸ்து, சாப்பாட்டுக்கடை, சில்லறை வியாபாரம், நூல், வெண் பட்டு, குதிரை, பாரிச வாயு வயித்தியம், பயிர், சீதளம், வட்டிக்

கடை, பழ வியாபாரம், ஜல பதார்த்தம், காய் கறிகள் இவைகளா லும் தாதுக்களை பஸ்மம் செய்தலாலும்,

செவ்வாயும் 2, 10, 11-மாதிகளும் மேற்கூறியபடி ஷை ஸ்தா னங்களில் இருந்தால், தானிருக்கும் அல்லது ஜனித்த கிராமத்திற்கு அதிபதியாதல், பூமி க்ஷேத்திரம், பிறருடைமையை அபகரித்தல், சால்வைகள் ஆட்டாலுற்பத்தி, ரோகம், அயோக்கியத் தொழில், காசம், மந்திரம், சுப்ரமணியர், வீரியம், சாகஸம், வித்துவேஷம், அக்னி யந்திர மோட்டல், சமையல் செய்தல், தாயாதி வகை குரூர குணம், உற்சாகம், ஏமாற்றல், போலீஸ், கபடம், கிருஸ்ணுயில், தீப்பெட்டி, பவழம், கர்ப்பூரம், ஹிம்சித்தல், செங்கல் (ஓடு) (சுண்ணும்பு) சுடுதல், ராணுவம், தட்டான் வேலை, கலாய் பூசல், நெருப்புத் தொழில் பலவும், துவரை, சடுதி மரணம், பிளவை, கட் டிடவேலை, பதட்டம், செங்கல் வீடு, கூட்டிக் கொடுத்தல், சபல புத்தி, சகோதரன், மேற்படி வர்க்கம், அறுத்தல், சத்துரு, பாபச் செய்கை, பிடிவாதம், துணிவு இவற்ருலும் டிப்டி கலெக்டர், கஜா னுதிகாரியாதல், பென்ஷன் சர்வீஸ், தபாலாபீஸ், ஆயுதந்தரித்தல் இவற்ருலும், தாதுர்வாதம் இவற்ருலும் புதனும் மேற்படியார்களும் கூடி அதாவது 2, 10, 11-மாதிகளும் குருவும் கூடி யிருந்தால் கலை நிபுணத்துவம், பாண்டியத்தியம், வாக்கு சாதுரியம், உபாசனை, யாகம் செய்தல், விவகார ஸ்தலம், சிற்பம், பந்துக்கள், மாமன், யுவராஜன் போதனை செய்தல் ஹாஸியம், துத்துாகம் விஷ்ணு தேவதை, குழந்தைகள், முக்குணம், சிஷ்யனுதல், யதி, பாஷண்டி, கணக்கெழுதல், பத்திரிகை சம்பந்தம், வியாபாரம், வேர்கள், நாட்டி யம், நன்னுரி, ஜோதிடம், சித்திரமெழுதல், மத சம்பந்தம், என்ஜினீ யர், ஸ்டாம்பு விற்றல், முத்திரைக் கடிதம், தூது செல்லல், வெந் தயம், வேசித் தொழில், இளமை, தாதன், பஞ்சாயத்துப் பேசல், நாடகம், நாட்டியம், பக்ஷி பிடித்தல். குல்மரோகம், கிராணி ரோகம், நல்வாக்கு, நல்ல யுக்தி, மருமகன் இத்தியாதிகளாலும்,

மேற்கூறியபடி குருவுடன் கூடி யிருந்தால் மூத்த சகோதரன் குருத்துவம், புத்திரன், புத்தி, ஞானம், மந்திரித்துவம், சுத்தம், புராண இதிகாசாதிகளாலும், பாங்கு அல்லது கஜானு இந்த இடங் களிலும் சரீர புஷ்டிதரக் கூடியவைகளாலும், யானை, ஸ்தூல சம்பந் தம், ரக்ஷித்தல், சாஸ்திர விதி விதித்தல், புரோகிதம், கிரந்த கர்த்தா வாதல், பாதிரி, ஆண்டி பரதேசி, பிரசங்கம் செய்தல், ஆலோசனை,

அஷ்டமகா சித்துக்கள் செய்தல், தேன், கடலை, சீரகம், உபதேசம் செய்தல், சிஷ்யர்களால் ஜீவனம் இத்தியாதிகளாலும்,

சுக்கிரன் மேற்கூறியபடி யிருந்தால் ரூப ஸ்திரீ, ரூப ஸ்திரீ சம்போகம், மந்திரியாதல், வாசனைத்திரவியம், மனைவி வர்க்கம் கவிதை, சரஸம், பூஷண(ம்) வியாபாரம், குடி வஸ்துக்கள், ஆடை, பருத்தி, கலர்கள், ஹோட்டல் வைத்தல், பாய் செய்தல், பட்டப் பெயர், அழகு செய்தல், கப்பல் வியாபாரம், காமம், புளி, ஈயம், மொச்சை, குதிரை, மாடிவீடு, அரண்மனை, ஜலப்பிரயாண மிவற்றாலும் விலையுயர்ந்த வஸ்திரங்களாலும், பசுமாடு மேய்த்தல் இத்தியாதிகளாலும்,

சூரியனுகில் தந்தம், தோல், நகம், கிருஷ்ணாசனம், புலித்தோல் சூரிய நமஸ்காரம் பிதுர்வர்க்கம், பிதா, உலர்ந்த புல், பூஜை செய்தல், தாகு சொர்ணம், சிரசு சம்பந்த ரோய், ராஜ சேவை, தேவஸ்தானம் ஹோமம், அரசாங்கம், வைத்தியம் செய்தல், தாமிரம், நெல் கோதுமை, பரத நாட்டியம், உத்தியோகம், கண்ணோய் சம்பந்தம், சாமரம், கொம்பு, ஸி. ஐ. டி. இத்யாதிகளாலும் அந்தத்தெசை காலங்களில் அந்தந்தப் புக்தி நாதர்கள் அனுகூல காலங்களில் கர்மானுகுணமாகச் செய்துவரும் தொழில் மூலமும் அந்தக் கிரகத்திற்குரிய காரகர் காரக தொழிலிவற்றாலும் கிரகத்தின் அவஸ்தாவனுவுக் கேற்பப் பலனை யடைவார்கள்.

ஜன்ம லக்கினத்திற்கு 2-ஆம் இடத்துக் குடையவர் பரமோச்ச பாகத்தில் குருவுடன் கூடியிருந்து சுபரால் பார்க்கப்பட்டாலும் 2. மாதிபதி பரமோச்ச பாகத்திலிருந்து சுபருடன் கூடிய குருவால் பார்க்கப்பட்டாலும் 2 மாதிபதி ஐராவதாம்சத்தில் சுபர் மத்தியில் கேந்திரங்களில் இருந்தாலும் ஆயிரம் பேரை ரக்ஷிப்பான்.

2-மாதி கோபுராம்சத்திலிருந்து 2-ஆம் இடத்திற்குச் சுபர் பார்வையுண்டாகி யிருந்து பூர்ண சந்திரன் 9-மிடத்தில் இருந்தால் பிரசண்ட தனவானுவா னென்றும் வெகு பிரதாபத்துடன் ஆயிர லக்ஷம் தனம் தேடுவானென்றும் சொல்லுகிறார்கள்.

2-மாதி குருவின் ராசியிலிருந்து உத்தமாம்சத்தை யடைந்திருந்து சுபர் மத்தியிலு மிருந்தால் லக்ஷத்திற்குமேல் தனந் தேடுவான்.

ஜென்ம லக்கினத்திற்குப் 10-ல் சூரியனிருந்தால் 18 வயது முதல் தினம் தினம் தன விருத்தியுண்டு. ஆயுள்வரை கவலையு முண்டு.

மேற்படி 10-ல் புதன் இருந்தால் வியாபாரத்தினாலும், குரு விருந்தால் சுய அறிவால் விசேஷ தனமும், 10-ல் ராகு இருந்தால் பல தொழில்கள், ஜோதிஷம், வேதாந்தம் இவற்றால் தனமும், கேது விருந்தாலும் மேற்படி வழியேயாகி தனமும் வரும்.

குரு செவ்வாய் சூரியனிவர்கள் மேஷத்தி லிருந்தால் வெகு செல்வமாய் வாழ்வான்.—மேஷ லக்கினம்.

புதன் சனி ராகு இவர்களுடன் கூடிய மேஷ லக்கினத்தில் ஜனித்தாலும், சூரியனும் சனியும் கூடி கடகத்திலிருந்து கடகமே லக்கினமானாலும், உற்றார் உறவினர் ஒருவருமின்றி உலகெல்லாம் இரந்துண்பான்.

சனியுஞ் சந்திரனுங் கூடிச் சிம்மத்திலிருக்க அந்தச் சிம்மமே ஜன்ம லக்கினமானாலும், சனியுஞ் சந்திரனுங் கூடிச் சிம்மத்திலிருக் கக் கன்னியா ராசியில் செவ்வாயும் சூரியனுமிருந்து கன்னியே லக்கினமாக ஜனித்தாலும் பிச்சை யெடுத்தே ஜீவனம்.

கடக லக்கினத்தில் குரு புதன் ராகு மூவரும் கூடி யிருந்து பிறந்து, கன்னியில் (3-ல்) சுக்கிரனும் இருந்தால் திருடித் தின்பதால் ஜீவனம்.

இந்தக் கிரகத்துடன் இதற்கு 4-ல் சூரியன் சந்திரன் செவ் வாய் ஆகிய மூவரும் கூடி யிருந்து சனி தனுசில் இருந்தாலும் இவர்களுக் காறிலிருந்தாலும் கூட்டுக் கொள்ளையடிப்பதன் மூலம் ஜீவனம்.

லக்கினத்தில் சனியும் சந்திரனும் கூடில் விலங்கு பூண்டு அலைந்து திரிவதுடன் 60 வயதுவரை ஜீவித்திருப்பான்.

சனியுஞ் சூரியனும் கூடிய கடகம் லக்கினமாகி ஜனித்தாலும்,

குருவும் சூரியனும் கூடிய துலாம் லக்கினமாகி ஜனித்தாலும்,

சுக்கிரன் புதன் ராகு மூவரும் கூடி லக்கினத்தி லல்லது எட்டி லிருந்தாலும் ஆயுள் இருக்கும் வரை பிச்சை யெடுத்தே ஜீவனம் நடக்கும்.

10-ல் பல பாபர் கூடினால் செய் தொழிலைத் தடை செய்வதால் ஜீவனம் பாபர்கள் பார்த்தாலு மிப்படியே. யார் எந்த வேலை செய்தாலும் அவற்றிற் கெல்லாம் தடை செய்வதே பிரதானத் தொழிலாகும்.

10-ல் புத சந்திரரிருந்து இவருடன் சுக்கிரனும் ராகுவும் கூடி யிருந்தாலும், சண்டாள யோகத்தின் பலனாகச் சுய காரிய வாதி யாவார்.

10-ல் செவ்வாய் புதன் குரு சுக்கிரன் சனி இவர்கள் கூடி யிருந்தால் அரசன் அல்லது மந்திரி அல்லது பெரிய குரு இப் படிப்பட்ட ஒரு வழியாகி ஜீவனம்.

10-மாதி நீச்சத்தி லிருந்தால் செய்யுங் காரியங்களெல்லாம் தடைப்படும்.

புதன் 10-மாதியாகி 10-ல் உச்சத்தி லிருந்தாலும் 9-ல் 10-மாதியுடன் கூடி யிருந்தாலும் 10-மாதி உச்சத்திலிருந்து புத னுடன் கூடி சுபரால் பார்க்கப்பட்டாலும் யாக சித்திசெய்து வைத்து ஜீவனம். இவர்கள் ராகு கேதுக்களால் சேரப்படாமலிருத் தல் வேண்டும்.

10-மாதியுடன் 4-கிரகங்கள் கூடி யிருந்தாலும் 4-கிரகங்கள் 10-லிருந்தாலும் சன்னியாச யோகமுண்டாகி ஜீவனம்.

11-மாதிபதி சந்திரன், குரு, புத, சுக்கிரால் பார்க்கப்பட் டாலும், கூடி யிருந்தாலும் ஆயுள் வரையில் ஐசுவரியத்தை யுடைய வனாகவே வாழ்வார். மேற்படி சுக்கிரன் நீச்ச அஸ்தங்கதாதிகளை அடைந்திருந்தாலும் சத்துரு நீச்ச ஸ்தானங்களில் அஸ்தமனாதி களை மேற்படி கிரகங்களடைந்திருந்தாலும் மேற்படி பலன்கள் ஒன்றுமின்றி நித்திய தரித்திரமுண்டாகும்.

11-மாதிபதி சூரியனாகிச் சந்திரனுடன் கூடினாலும் சந்திரனால் சூரியன் பார்க்கப்பட்டாலும் ராஜனுக்கு உபதேசம் செய்வதால் ஜீவன முண்டாகும்.

11-மாதி செவ்வாயானாலும் அரசனாலேயே ஜீவனம், புதனாகில் கணித வித்தையால் தனம் வரும். மற்றவைகள் முன் சொல்லிய காரகங்களின் படியே.

11-மாதிபதி தன் உச்ச மித்திர க்ஷேத்திரங்களில் இருந்தால் அந்த வழியினுலும் லக்கினுதிபதியாலும் தனம் வரும்.

11—மாதி யுக்ம ராசியிலிருந்து சத்துரு ஸ்தானத்தைப் பார்த்தாலும் 6-மாதி 8-ல் இருந்தாலும் சத்துருக்களின் பணத்தை அபகரித்து ஜீவனம் நடக்கும்.

11-மாதிபதி சத்துரு வர்க்கத்தில் எங்கிருந்தாலும் சத்துருவின் பணத்தை அபகரித்தே ஜீவனம்.

1-மாதி 11-ல் இருந்து அந்த ஸ்தானம் தன் உச்ச க்ஷேத்திரமாகி பாபருடைய பார்வை அவருக் கில்லாதிருந்தால் ஆயுள்வரை மகா சுகஜீவனம். இது ரிஷப கடக லக்கினங்களுக்கு மட்டும் தான் பொருந்தும். 11-ல் அல்லது 12-ல் சுக்கிர னிருந்தாலும் மேற்படி ஜீவனமே.

11-மாதி 9-ல் இருந்தாலும் சுபருடன் கூடி யிருந்தாவது சுபரால் பார்க்கப்பட்டாவ திருந்தால் தன் தகப்பனைவிட மிஞ்சிய தனம் சேரும்.

5-மாதி 11-ல் இருந்தாலும் மேற்படி ஸ்தானம் தன் மித்திர க்ஷேத்திரமாக ஆகின் புத்திர களத்திராதிகளால் பாக்கிய முண்டாகும்.

11-ம் பாவத்தில் இருக்கும் ஒரு பாவாதிபதி எந்தப் பாவாதிபதியானுலும் அந்த (வழியினுல்) பலன் நிச்சயமாயுண்டாகும்.

3-மாதி 11-ல் பலத்துட னிருந்தாலும் பார்த்தாலும் சகோதரனுல் பலனுண்டாகும். இதேபோல மற்றவையும்.

லக்கினத்திற்கு 4-ல் பாபரிருந்து குரு 4, 7, 1, 10 ஆகிய ஸ்தானங்களி லல்லது 5, 9-ஆம் இடங்களில் ஒன்றில் எவ் விடத்திலிருந்தாலும் உபய வம்சத்திற்கும் ஆனந்தத்தையும் கீர்த்தியையும் உண்டாக்கி வெகு காலந் தீர்க்காயுளுடனிருப்பார்.

செவ்வாய், சுக்கிரன், சந்திரன் மூவரும் 10-ல் மேஷத்திலிருந்தால் 30 வயது முதல் ராஜாங்க உத்தியோக பிரசித்தி ஏற்படும்.

சனியும் குருவும் லக்கினத்திலிருந்து 9, 10, 11-க் குடையவர்கள் 5-லிருந்து சந்திரன் கடகத்திலிருந்தால் சிம்ம லக்கின ஜாத

கர் 31 வயதிலாவது அதற்கு முன்பே முப்பது முதலாவது மடாதிபதியாகி ஜீவனம் செய்வர்.

சூரியன் புதன் செவ்வா யிவர்கள் மூவரும் ரிஷபத்திலிருந்து தனுர் லக்கினமாகி ஜனித்தால் செவ்வாய் திசையில் ராஜயோகம் நடக்கும்.

கடக லக்கின ஜாதகனுக்கு செவ்வாய் லக்கினத்திலும் சனி மிதுனத்திலும் சந்திரன் கன்னியிலு மிருந்தால் 27 வயது முதல் யோக ஜீவனம்.

செவ்வாய் 4-லிருந்தால் 34 வயது முதல் ஜீவனம் ஏற்படும்.

10-ல் ராகு இருந்தால் 20 வயது முதல் தனந் தேடுவார்.

3-ல் செவ்வாய் 5-ல் சந்திரனிருந்தால் பாலிய தரித்திரம். 30 வயது முதல் ஜீவனம்.

ராகு 4-ல் இருந்தால் மீன லக்கின ஜாதகனுக்கு 35 வயது முதல் யோகம். மேற்படி ராகுவே புனர்பூசம் 2-வது பாதத்தில் இருந்தால் ராகு தெசை வெகு யோக தெசையாகும்.

8, 10-மாதிகள் கூடினல் அற்பத்தனமாக ஜீவனம் செய்வர்.

10-மாதியை சனி கூடினுலும் பார்த்தாலும்,

10-மாதி சனி வீட்டிலிருந்தாலும் பிறரிடம் சேவை செய்து ஜீவனம்.

சுக்கிர சந்திரர் 11-ல் இருந்து ரிஷப லக்கினம் ஜனனமானல் 25 முதல் ஜீவனம் ஏற்படும்.

கடக லக்கினம் லக்கினமாகி 10-ல் சந்திர சூரியருடன் சுக்கிரனும் கூடி யிருந்தால் 36 வயது முதல் யோகம். மேற்படி சூரிய சுக்கிரர் 11-ல் இருந்தால் பாட்டு மூலம் ஜிவனம்.

சுக்கிரன் புதன் சூரியன் சனி இவர்கள் துலாத்திலிருந்தால் பாட்டு நாட்டிய மிவற்றல் தனுசு லக்கின ஜாதகனுக்கு ஜீவனம்.

சூரியன் 7-ல் (இருந்தால் 20 வயது முதல் ஜீவனம். மேற்படி சூரியன்) சிம்மத்திலிருந்தால் இது ரொம்ப விசேஷமாகும்.

சனி சுக்கிரர் 11-ல் இருந்தால் கடக லக்கின ஜாதகனுக்கு மத்திய வயதில் தனம் சேரும். இதுவே மகரத்திற்கும் பொருந்தும்.

தனுசில் சூரிய புத சுக்கிரர் கூடியிருக்கும் சிம்ம லக்கின ஜாதக னுக்கு 27 வயது முதல் ஜீவன மேற்படும்.

1-லாவது, 9-லாவது, 10-லாவது சுக்கிர னிருந்தாலும், 1-மாதி யாவது 9-மாதியாவது சுக்கிரனாவது 5-ல் இருந்தாலும் யோகவானா வான்.

லக்கினத்தில் நீச்ச மடைந்திருக்கும் 10-மாதியுடன் சூரியன் கூடின் வெளி தேசத்தில் தனம் சேரும். இதுவே மேஷத்தில் நேரிட்டால் பலன் கொஞ்சம் குறையும்.

10-ல் நீச்சக் கிரகத்துடன் ரவி கூடியில் (சனியுடன் கூடினால்) தண்டிக்கும் அதிகாரமும்.

செவ்வாயுடன் கூடினால் என்ஜினீயரிங்கிலும் அல்லதுபோலீஸ் அல்லது போஸ்டல் அல்லது ராணுவத்தில் அதிகாரமும், குருவுடன் கூடினால் பாங்கு கஜானா முதலிய ஸ்தானங்களில் அதிகாரமும், இவர்கள் சொட்சேத்திர கிரகங்களால் சனி, குஜன் இவர்கள் மூலம் தலைமை அதிகாரமு மடைவார். சிலர் மதம் சனி வீட்டினால் அடிமைத்தன மென்பதிலும் தலைமை யேற்படும். இவர்களுடன் அஷ்டமாதிபதி கூடில் மத்தியில் பிரபுவிடம் உத்தியோகத்தில் இதி லும், எதிலும் பங்க மேற்படும்.

கடக லக்கின ஜாதகனுக்கு சந்திரன் 3-ல் இருந்தால் வியாபார ஜீவனம்.

1-ல் நீச்சக் கிரகத்துடன் 2-மாதி கூடின் வெளி தேசவஸ்து வால் பாக்கியம். வெளி தேசத்திலும் பாக்கிய மேற்படும்:—கடக லக்கினம்.

2-ல் புதன் சூரியன் செவ்வாய் கூடில், கடக லக்கினமானால் சதா திரவிய லாபமே யுண்டாகும். இவர்கள் 4-லிருந்தாலும் வியா பார ஜீவனம்.

10-ல் ரவி, சுக்கிரன், குஜ னிவர்கள் சிம்மத்தி லிருந்தாலும் 4-ல் உள்ள சனி இவர்களைப் பார்த்தாலும் வியாபார ஜீவனமே.

10-ல் சனி சூரியன் கேது இவர்களிருநதாலும்,

10-ல் கேது இருந்தாலும்,

6-மாதி 1-ல் இருந்து 10-மாதியால் பார்க்கப்பட்டாலும்,

2-மாதி 5-ல் இருந்து 10-மாதியால் பார்க்கப்பட்டாலும்,

1-மாதி 6-லாவது 12-லாவ திருந்தாலும்,

8-ல் சனி யிருந்தாலும் ஜோதிடம், மந்திர மிவற்ருல் ஜீவனம். சனி 8-ல் இருந்து இவர்களைப் பார்த்தால் அற்ப ஜீவனம். தனத் தடை யுண்டாகும்.

5-மாதி 5-ல் 4-மாதியுடன் கூடி யிருந்தால் பூமியால் ஜீவனம்.

லக்கினத்தில் 5-கிரக மிருந்தால் ஒன்றரை லக்ஷம் ஆஸ்தி யுண்டாகும்.

10-ல் 5-க்கிரகம் கூடினுலும், 9-மாதி ராகுவுடன் கூடின(ல்)லும் புரோகித ஜீவனம்.

2-ஆம் இடத்தில் 4-க்கிரகத்திற்கு இருப்பு ஏற்பட்டால் ஒன்றரை லக்ஷம் ஆஸ்தி ஏற்படும்.

1-ல் 4-கிரகம் கூடில் ராஜாங்க பிரசித்தி யுண்டாகும்.

11-மிடத்தில் 4 கிரக மிருந்தால் 28 வயது முதல் யோகம்; சிலர் மதம் 35 வயது முதலென்பது.

7-ல் 4 கிரகமும் 8-ல் சுக்கிரனும் 9-ல் ரவியு மிருப்பின் 20, 25 30 இந்த வயதுகளில் படிப்படியாய்ப் பிரசித்தி ஏற்படும்.

10-ல் கேது இருந்தால் கடின தண்டனை ஆக்ஞை செய்வதால் ஜீவனம்.

9,10,11-மாதிகள் 2-ல் இருந்தால் பிதுரு சொத்தால் ஜீவனம்.

10-மாதி புதனுடன் கூடினல் வியாபார ஜீவனம்.

சனி 10-ல் இருந்து உச்ச சந்திரனல் காணப்படில் பயிர் பசு விருத்தியால் ஜீவனம்.

உத்திர நக்ஷத்திரத்தில் பிறந்து கும்பத்தில் சூரியன் ஷஷ்டியம்ச குபேராம்சத்தி லிருந்தால் 3 லக்ஷத்திற் கதிகாரியாவன்.

உத்திரம் 2-வது பாதத்தில் சந்திர னிருந்தாலும் இதேயோகம் உண்டாகும். இது 35 வயதுமுத லேற்படும்.

பஞ்சமாதி உச்சத்திலும் சுக்ஷேத்திரத்திலிருந்து சனியுட னிருந்தாலும் 21 வயது முதல் 16 வருஷம் தொடர்ந்து யோகமேற் படும்

ஸர்வாஷ்டக வர்க்கத்தில் லக்கினத்தில் உள்ள பரல்களின் எண்ணிக்கைக்கு மேற்பட்ட வயது முதல் சுகமுண்டாகும். தன சம்பாதனை ஏற்படும். சில கிரந்தம் 9-ஆம் இடப் பரல்களின் சங்கியையால் சொல்லுகின்றது.

1-ல் சந்திரன் குருவுடன் கூடினல் மீன லக்கின ஜாதகனுக்கு 18-வயது முதல் யோகம் தரும்.

மகர லக்கின ஜாதகனுக்கு ராகு ஹஸ்தம் 2-லிருந்தால் 20 வயது முதல் யோகம்; 24 வயது முதல் பெரும் யோக மேற்படும். 8 வருஷம் வரை வலுக்கும்.

9. 10-மாதிபதிகள் நின்ற ராசி நாதனுவது மேற்படி ஸ்தானுதிபதிகளின் ஆரூடாதிபதிகளாவது லக்கினுதிபதியுடன் கூடியிருந்தால் நல்ல யோக முண்டாகும்

மேஷத்தில் சனி யிருந்தால் 30 வயது முதல் ஜீவனம். பாலிய வயதில் தரித்திரம். மேற்படி சனி பரணி 1-வது பாதத்தில் இருந்தால் மூர்ச்சை வாயு பீடையுண்டாகும். இதை யோசித்து இங்கு காரகர், பாவ மிவைகளினு லறியவும்.

மேஷத்தில் இருக்கும் சனி அசுவனி 1-வது பாதத்திலாவது பரணி 4-வது பாதத்திலாவ திருந்தால் மீன லக்கின ஜாதகன் 20 வயதின் பிறகே தனம் சம்பாதிப்பான். மேற்படி சனியுடன் புதன் கூடி யிருந்தால் தார மூலம் பாக்கியமுண்டாகிச் சுக ஜீவன முண்டாகும். தார மூலம் என்பது தாரத்தின் அதிர்ஷ்டவசம் என்பதாகும்.

மீன லக்கின ஜாதகனுக்கே சந்திரன் கடகத்திலும் குரு விருச்சிகத்திலு மிருந்தால் 5-வது தெசையின்போது 2-அல்லது 3-வருஷம் ராஜாங்கத்தில் பிரபல உத்தியோக முண்டாகும்.

மேற்படி லக்கின ஜாதகனுக்கே கன்னியில் சந்திரனும் துலாத்தில் பாக்யாதிபதியான செவ்வாயும் தனுசில் குருவும் மிருந்தால் 27 வயது முதல் யோக முண்டாகும்.

சந்திரனுக்கு 7, 8, 9, 10 ஆகிய ஸ்தானங்களில் சனி தவிர எல்லா கிரகங்களு மிருக்கும்போது ஏற்படும் அதியோகத்தில் சனி மட்டும்,

சந்திரனுக்கு 5-ல் நின்றால் 30 வயது முதல் யோக மேற்படும் சில சமயம் யோகம் பங்கமும் ஆகும்.

கடக லக்கின ஜாதகனுக்கு 11-ல் செவ்வா யிருந்தால் 28 வயது முதல் யோக மென்றுளது.

விருச்சிக லக்கின ஜாதகனுக்கு சந்திரகுஜர் கூடி மேஷத்தில் இருந்தால் சொர்ண பரீக்ஷையில் தனஞ் சேரும். இத்துடன் சூர்ய புதர் 4-ல் இருந்தால் மேற்படி வியாபாரமும் சேரிடும். உத்தியோக ஜீவனமுமுண்டு.

10-ல் சுக்கிரன் 11-ல் செவ்வாய் 12-ல் சனி இப்படி யிருந்தால் கடக லக்கின ஜாதகன் வெகு வியாபாரம் செய்து ஜீவிப்பான்.

துலா லக்கின ஜாதகனுக்கு 5-ஆம் இடத்தில் சனி சூரியர் கூடி யிருந்தால் 36 அல்லது 37 வயதில் 100 அல்லது 150 சம்பாதனை யேற்படும்.

10 மாதி உச்சனாகி உச்சகுருவால் பார்க்கப்பட்டால் உத்தியோக ஜீவனம், சிம்ம, கும்ப, கடக, மகர லக்கினங்களுக்கு மட்டும் நேரும்.

10 மாதியும் கேதுவும் கூடி 2-ல் இருந்தால் சித்த புருஷ சேர்க்கையால் ஜீவனம்.

10 மாதி 8-ல் இருந்து ராகுவுடனும் கூடி யிருந்தால் நீச்ச வழியில் ஜீவனம்.

10 மாதி 12-லும் 9-ல் சந்திரனும் இருந்து 9 மாதியால் பார்க்கப்பட்டால் 28 வயதுக்குமேல் 29-லாவது 30-லாவது ராஜாங்கத்தில் உத்தியோக மேற்று ஜீவனம் நடக்கும்.

2, 9-க் குடையவர் கூடிப்பஞ்சமத்தில் இருந்தால் (மறு ஜன்மத்தில் யோக மேற்படும்.) இச்சென்மத்தில் மத்திம யோகமாகும். சில கிரந்தத்தில் லக்கினத்தில் 5-க் குடையவரிருந்தாலும் இதே பலன்தான் சொல்லப்பட்டிருக்கின்றது.

4, 9, 10-க்குடையவர் கூடி பஞ்சமத்தில் இருந்தால் தேவாலய விசாரணையினால் ஜீவனம்.

லக்கினாதிபதி உச்சமடைந்து லக்கினத்திற்கு மூன்றாவது அம்ச மடைந்தால் 35 வயது முதல் தன சம்பாதனை யேற்படும்.

மேற்படி கிரக வரிசை நிர்ணயம் பிரதி லக்தினத்திற்கும், மேஷ லக்கின ஜாதகனுக்கு திருஓணம் 3-ல் குஜனும், ரிஷப லக்கின ஜாதகனுக்கு பூரட்டாதி 4-ல் சுக்கிரனும், மிதுன லக்கின ஜாதகனுக்கு சித்திரை 1-ல் புதனும், கடக லக்ன ஜாதகனுக்கு மிருக சீரிஷம் 2-ல் சந்திரனும், சிம்மலக்ன ஜாதகனுக்கு ஸூரியன் பரணி 3-ம் பாதத்திலும், துலாலக்ன ஜாதகனுக்கு ரேவதி 1-ல் சுக்கிரனும், விருச்சிக லக்ன ஜாதகனுக்கு உத்திரம் 2-ல் குஜனும், தனுர் லக்ன ஜாதகனுக்கு ஆயில்யம் 3-ல் குருவும், மகர லக்ன ஜாதகனுக்கு சனி சுவாதி 4-லும் கும்பலக்ன ஜாதகனுக்கு சனி விசாகம் 1-லும் இருந்

தால் யோக ஜாதகராவார். கன்னி, மீனம் இவைகளுக்கு உச்சத்தில் திருதியாம்சமே நேராதென்பது.

சந்திரனுக்கு 4-ல் குரு 7-ல் சனி யிருந்தாலும் 9, 10, 12-க் குடையவர்கள் கூடி 10-ல் இருந்தாலும் 32-வயது முதல் 30-வருஷம் தொடர்ந்து யோகமே நடக்கும்.

4, 11-க் குடையவர் கூடி யிருந்து 2-மாதியால் பார்க்கப்பட்டால் 30-வயது முதல் 20-வருஷம் தொடர்ந்து ராஜயோக முண்டாகும். இது கடகம் சிம்மம் ரிஷபம் இவைகளுக்கு நேராது.

லக்கினம் துலாமாகிப் பிறந்தால் செவ்வாய் 9-லும் சுக்கிரன் 11-லும் புதன் 12-லு மிருந்தால் சனி சந்திரர் கூடினால் 16-வயது முதல் தொடர்ந்து 40-வருஷம் அதாவது 56.வயது வரை போகம் நடக்கும்.

சூரியன் சனி புதன் மூவரும் கூடி மீனத்திலிருந்தால் கும்ப லக்கின ஜாதகன் 21-வயது முதல் யோகமடைவான்.

1-மாதிக்கு 2-ல் குரு வல்லது சுபரிருந்து 3-ல் பாபராவது ராகுவாவது இருந்தால் ராஜாங்க ஜீவனம். ராஜமுத்திரையும் தரிப்பார்.

5-ல் சுக்கிரனிருந்தால் 35-அல்லது 37-முதல் யோக ஜீவனம்.

லக்கினதிபதி 5-ல் ராகுவுடன் கூடினால் 37-வயதில் யத்தனமின்றி ராஜாங்க அதிகார மேற்படும்.

2 மாதிபதி லக்னத்தில் 10-மாதியுடன் கூடினால் 25-வயது முதல் வெளி தேசத்தில் தன சம்பாதனே யுண்டாகும்.

11-க் குடையவன் 7-ல் 7-மாதியுடன் கூடி யிருந்தால் தார வம்ச மூலம் சுகம்.

லக்கினத்தில் குரு சந்திரரிருந்து 5-ல் செவ்வாயிருந்தால் 25-வயது முதல் ராஜாங்க மூலம் தேவக்ஷேத்திர விசாரணே செய்து ஜீவனம்; ராஜாதிகாரி யாவர். மந்திரித்துவ மேற்படும்.

9, 10, 5, 6-க் குடையவர்கள் கூடி 6-ல் ராகுவுடனும் கூடில் இவர்களில் எவர் தெசைவரினும் ராஜயோகமே நேரிடும். இது மேஷ லக்கினம்.

துலா லக்கினத்தில் ஜனித்தவர்களுக்கு 4-மாதி 9-லும் 9-மாதி 4-லு மிருந்தால் பிறந்த 30-வருஷ முதல் 20-வருஷம் தொடர்ந்து யோக மேற்படும்.

9, மாதியும் 11-மாதியும் கூடின் எதிலும் தனலாப முண்டாகி ஜீவனம்.

2 மாதி 6-ல் இருந்தாலும் 9-மாதி 6-ல் இருந்தாலும் சத்துரு வல்லது கடனால் பொருளை யிழப்பார்கள். இவர்கள் தெசை வரும் காலத்தில் இது நேரிடும்.

9 மாதிபதி 9-ல் 11, 2 இந்த ஸ்தானாதிபதிகளுடன் கூடி யிருந்தால் குருவின் திரவியத்தை யடைந்து ஜீவிப்பான்.

1 மாதி 10-ல் இருந்தால் பிரபு வசியத்தினால் பிரபு மூலம் ஜீவனம்.

2 மாதி 10-ல் இருந்தால் பண்டிதனாகி ஜீவனம்.

3 மாதி 10-ல் இருந்தால் தாரத்தின் வமிச மூலம் பாக்கிய ஜீவனம்.

4 மாதி 10-ல் இருந்தால் ரசாயனமூலம் ஜீவனம்.

5 மாதி 10-ல் இருந்தால் கிரந்தகர்த்தாவாகி ஜீவனம்.

6 மாதி 10-ல் இருந்தால் சுயகாரியமே கண்ணாகி ஜீவனம்.

7 மாதி 10-ல் இருந்தால் பல்ரோக வயித்திய ஜீவனம்.

8 மாதி 10-ல் இருந்தால் வாயடித்தலால் ஜீவனம்.

9 மாதி 10-ல் இருந்தால் பிரபல உத்யோக ஜீவனம்.

10 மாதி 10-ல் இருந்தால் உபதேசம் செய்வதால் ஜீவனம்.

11 மாதி 10-ல் இருந்தால் சதுரனாகி எவ்வழியாலும் ஜீவிப்பான்.

12 மாதி 10-ல் இருந்தால் முத்துமணிப் பிரவளாதிகளால் ஜீவனம்.

9-லாவது 5-லாவது 8-லாவது ராகு இருந்து.

9 மாதியும் 8 லிருந்தாலும்,

9-ஆம் இடத்தில் சனி சந்திரரிருந்து லக்கினதிபதி நீச்சமடைந்திருந்தாலும் தரித்திர ஜீவனம்.

2, 11 மாதிகள் 6 லிருந்தாலும் 2, 11 மிடங்களில் பாபரிருந்தாலும் தரித்திர ஜீவனம்.

2, 11 மாதிகள் 2-லாவது 11 லாவ திருந்தாலும் இவர்களுடன் பாபர் கூடி யிருந்தாலும்,

2 மாதி 2-லும் 11 மாதி 11-லும் இருந்து பாபருடன் கூடினலும் இவர்களே 2 மாதி 11-லும் 11 மாதி 2-லு மிருந்து பாபருடன் கூடினலும் தரித்திர ஜீவனம்.

லக்கின முதலான நான்கு கேந்திரங்களிலும் சுபரிருந்தால் 2 லக்ஷத்திற் கதிகம் சம்பாதிப்பான்.

ரிஷப சந்திரனும் தனுசு குருவுமுள்ள சகட யோகமானல் 38 வயது முதல் தொடர்ந்து 24 வருஷம் யோகமாக இருக்கும்.

சிம்ம ராசியில் சந்திரனும் மகராசியில் குருவும் இருந்தால் 5 வது தெசை முதலாக விசேஷ யோகம் உண்டாகும். 5-வது தெசை குருதெசையானல் பிரபலம்.

தனுசு குரு மகரச்சந்திரனிந்த சகடயோகமானல் 5-வது தெசையாக வரும். குரு தெசையில் லக்கினதி தெசையாக குரு தெசை ஏற்படின் 25 வயது முதல் ராஜயோகம்.

கடக குரு கும்ப சந்திரனிந்த சகடயோகமானல் 32 வயது முதல் யோக மாரம்பித்து 36 முதல் நீச்ச ராஜ்யத்தில் 16 வருஷம் வரை தொடர்ந்து யோகந் தரும்.

1 மாதி 1-ல் இருந்தால் சுயார்ஜித ஜீவனம்.

1 மாதி 2-ல் இருந்தால் பிரசங்க மூலம் சுயார்ஜிதம் செய்து ஜீவனம் நடக்கும்.

1 மாதி 3-ல் இருந்தால் தன் வாக்கு வன்மையால் ஜீவனம். மாமனாலும் சகோதரனாலும் ஜீவனம்.

1 மாதி 4-ல் இருந்தால் சகோதரனாலும் வேலையாள் மூலமும் ஜீவனம். சத்துரு சொத்தாலும் ஜீவனம்.

1 மாதி 5-ல் இருந்தாலும் 2 மாதி 5-ல் இருந்தாலும் வித்தை, புத்தி, பூமி, வாகனம், பந்து, தாய்வழி இவற்றினலும் தனம் வந்து ஜீவனம்.

1 மாதி 6-ல் இருந்தாலும் 2 மாதி 6-ல் இருந்தாலும் புத்தி ஞானம், தேவஸ்தானம், ஜோதிஷம், புத்திரன் இவர்களாலும் மூத்தவன் மனைவியாலும் ஜீவனம்.

1 மாதி 7-ல் இருந்தால் சத்துருவாலும், அம்மானாலும் ஸ்திரீ மூலத்தாலும் பிரபுவாலும் ஜீவனம்.

1 மாதி 8-ல் இருந்தால் வாயடித்தும், தாரத்தாலும் வியாபாரத்தாலும் குடும்பஸ்திரீயாலும் தனம் வரும்.

1 மாதி 9-ல் இருந்தால் ஸ்திரீயை(களை)ப் போகிப்பதாலும் 2-ம் தாரத்தினாலும் பிரபுமூலம் தனம் வந்து ஜீவனம்.

1 மாதி 10-ல் இருந்தால் உத்தியோகம், வியாபாரம், குரு, நியாஸ்தலம்,(நியாயாதிபதியாதல்) பிரபு இளைய சகோதரன் மனைவி, உபதேசம் செய்தல், அம்மான் மனைவி,பிதுரார்ஜிதம், இவ் வழியால் ஜீவனம்.

1 மாதி 11-ல் இருந்தால் உத்தியோகம், வியாபாரம், ஜோதிஷம், நியாயவாதம் புரிதல், சத்துருவை ஜயித்தல், சகோதரியின் கணவன் பாக்கியம், பிதரு சகோதர மூலம் இவ்வழியால் ஜீவனம்.

1 மாதி 12-ல் இருந்தால் ஜோதிஷம், சிற்றப்பன் தனம் ஸ்திரீ தனம், தேச யாத்திரை, இவ் வழியால் ஜீவனம்.

2 மாதி 8-ல் இருந்தால் குடும்ப திரவியம் நாசமாகும் வழியில் ஜீவனம்.

2-ல் சுபர் பாபர் இருவர்களு மிருந்தால் வரவும் செலவும் சமமாய் விடும்.

12 மாதி 2-ல் இருந்தாலும் மேற்படி பலனே யுண்டாகும்.

2 மாதியும் 12 மாதியும் 2-ல் அல்லது 11-ல் இருந்தால் சதா லாபமே யுண்டாம். இவர்கள் 5-ல் இருந்தால் மனைவியால் தனஞ் சேரும்.

8-ல் அல்லது 2-ல் ராகு இருந்தால் ஈன வழியில் மானக் கேடான வழியில் ஜீவனம்.

2-ல் செவ்வா யிருந்தால் பயிர்த் தொழில், பால், நெய், தயிர் உண்ணும் வஸ்து (பயிரிடல்) இவற்றால் தனம் சேரும்.

தேய்பிறைச் சந்திரன் 2-ல் இருந்தால் துரோக புத்தியால் ஜீவனம்.

மேற்படி சந்திரனுடன் சனி ராகு சூரியன் கூடினு மிதே பலன். நம்பிக்கை துரோகம் செய்தே ஜீவனம் நடக்கும்.

10-ஆம் இடத்தில் தூமன் இருந்தால் தனதான்னிய சம்பத்துக்களுண்டாகி ஜீவனம்.

10-ஆம் இடத்தில் வியதீபாதனிருந்தால் வெகு வெகு மேதையாலும் பரிவேஷனிருந்தால் மறைந்து வசித்தலாலும் ஸர்வ சாஸ்திர பாரங்கதனுகியும், இந்திர தனுசிருந்தால் ஜகம்புகழ் ஜீவனமும்,

குளிகன் 10-ல் இருந்தால் ஜனத் தலைவனுதல், தர்மத்தையுடைதலிவற்ருலும்.

பிராணபதனிருந்தால் தேவாராதனை செய்து ஜீவனமும்,

10-மாதிபதியின் அம்சத்தில் ராகு இருந்தால் தனுசு அதாவது வில் தரித்தலாலும், விஷ வைத்தியம், இரும்பு யந்திரம், திருடர் சேர்க்கை இவற்ருலும், கேது இருந்தால் வியவகாரம் யானை, பிறர் திரவியம் இவற்ருலும்,

மேற்படி 10 மாதிபதியின் அம்சத்தில் சூரியன் ராகு இவ் விருவரும் கூடியிருந்தால் எல்லா விதங்களாலும், விஷ வைத்தியத்தினல் நிச்சயமாய் விஷத்தினலேற்படும் ஆபத்தை நாசம் செய்வதாலும் செவ்வாயா லிவர்கள் பார்க்கப்பட்டு இதரர்களால் பார்க்கப்படாமலிருந்தால் தன் வீட்டையும் பிறர் வீட்டையும் வெளியூரிலும் வீடுகளைக் கொளுத்துவதாலும் பாபாம்சியில் இருந்து குரு பார்த்தால் சமீப வீடுகளைக் கொளுத்துவதாலும், அங்கு குளிகனிருந்து பூர்ண சந்திரனுல் பார்க்கப்பட்டால் திருடர்களா லபகரிக்கப்பட்ட தனத்தாலும் அல்லது தானே திருடுவதாலும் ஜீவனம் செய்வர்.

ஜன்ம லக்கினத்திலாவது 2-ஆம் இடத்திலாவது 4-ஆம் இடத்திலாவது 2 பாபர்கள் இருந்தால் தாந்திரிகத் தன்மையால் ஜீவனமும், மேற்படி ஸ்தானங்களை சுபர்களும் பாபர்களும் பார்த்தால் கலைகளைப் போதிப்பதாலும்,

மேற்படி அம்சத்தில் சந்திர சுக்கிரர் சுபர் பார்த்தால் ரசவாதத்தினுலும் தாதுக்களைப் பஸ்மம் செய்வதாலும்,

சுக்கிர புதர்களுடன் சந்திரன் கூடியிருந்தாலும் சுக்கிர புதரிருந்து சந்திரனல் பார்க்கப்பட்டாலும் நல்ல வைத்தியனுகி சகல ரோகங்களையும் அமிர்தஹஸ்தனுகக் குணம் செய்யும் கைராசி யுடையவராகியும், ஜீவனம் நடக்கும். சந்திரன் இவ்வாறிருந்து சுக்கிர புதரால் பார்க்கப்பட்டாலும் மேற்படி ஜீவனமே நடக்கும்.

மேற்படி அம்சத்தில் அதாவது 10 மாதிபதியின் அம்சத்தில் 2-ஆம் இடத்தில் அல்லது 3-ஆம் இடத்தில் தனிப்பட்ட சனி மட்டு மிருந்தால் சவுரி மயிர் அல்லது மான் மயிர் சவுரி மூலமும் தனுர் வித்தை யறிந்தும், கேது இருந்தால் கத்தி (செய்வதாலும்) கையாள்வதாலும் குலத்தில் பிரசித்தியாயும் கடிகார யந்திரம் செய் வதாலும் அவற்றைத் தன்னிஷ்டப்படி செய்தும் சோதித்தும் மேற் படி ஸ்தானத்தில் புதனிருந்தால் பரம ஹம்ஸ ஜகத் குரு ஆகியும் ராகு இருந்தால் இரும்பு யந்திரங்களைச் செய்வதாலும் அவற்றைக் கையாள்வதாலும் அச்சாபீஸ் ஆலை முதலியன வைத்து நடத்தலா லும் செவ்வாயிருந்தால் குந்தம் என்னும் ஓர் வகை ஆயுதத்தையும் ஈட்டி சூலமிவற்றைச் செய்வதாலும் இவற்றைத் தரித்தலாலும் ராணுவ சேவையாலும் ஜீவனம்.

லக்னத்திலல்லது ஐந்தில், அல்லது 9-ல் சந்திரன் குரு இவர்கள் இருந்தால் உண்மையான கிரந்த கர்த்தாவாகியும், சகல வித்தைகளைக் கற்றும்,

மேற்படி ஸ்தானங்களில் சுக்கிரனிருந்தால் சொற்ப கிரந்தங் களையும் காவியங்களையும் பிராகிருதமான கிரந்தங்களைச் சீர்திருத் துவதாலும், புதனுகில், சில அல்லது, ஒரு கிரந்தத்தைச் செய்வதா லும் மீமாம்சனுகியும், தனியான குருவானுல் எல்லா கிரந்தங்களை யும் செய்தும், வாக்கியக் குறைவினுலேயே சபையை நடுக்கமுறச் செய்தும், வியாகரண வேதாந்த தர்க்க சாஸ்திரங்களைச் செய்வ தாலும்,

மேற்படி ஸ்தானத்தில் சனி யிருந்தால் சபைக் கோழை யாகவும்,

மேற்படி ராசியைப் போல் 1, 5, 9 இந்த அம்சங்களில் எங்கா வது செவ்வா யிருந்தால் நியாய சாஸ்திரத்தினுலும் அழகுள்ள தெளிவான கண்டித சொற்களாலும், சந்திரனிவ்வா றிருந்தால் அறிவு மூலமும் சாங்கிய சாஸ்திரத்தில் நிபுணத்துவத்தினுலும், கேது விருந்தால் பிரபந்தத்தினுலும், புதனிருந்தால் ஜோதிஷம்

கணித மிவற்ருலும் குருவிருந்தால் சம்பிரதாய சாத்திரத்தினுலும் தனம் வந்து ஜீவனம் நடக்கும்.

லக்கினத்திற்கு 3, 9, 8, ஆகிய ஸ்தானங்களில் கேது இருந்து பாபக் கிரகங்களால் பார்க்கப்பட்டால் வாய்ச் சாலக்கினுல் ஜீவனமும்,

முன் சொன்ன அம்சத்தில் 2, 8-ஆம் இடங்களில் அல்லது இவற்றினுருட ஸ்தானங்களில் பாபக்கிரகங்கள் இவற்றிலிருந்தால் ஜீவனம் கஷ்டமூலமும், தரித்திரமும், ஏற்படும்; கிரகங்களே மேற்படி ஸ்தானங்களில் இல்லாவிடினும் தரித்திரமே யுண்டாகும்.

1-மாதி 7-ல் இருந்தால் தரித்திரமல்லது வெளிதேச வாச ஜீவனமும்,

2-மாதி 6-ல் இருந்தால் சத்துருவின் தனமூலம் ஜீவனமும்,

2-மாதி 7-ல் இருந்தால் வைத்திய ஜீவனமும்,

3-மாதி 9, 12-ல் எங்காவது இருந்தால் ஸ்திரீயின் தனத்தினுல் பாக்கிய ஜீவனமும் பிறரைச் சேவித்தலால் ஜீவனமும்.

4-மாதி 5-ல் சுயார்ஜிதமும் வித்தையாலும் ஜீவனமும், பயிரில் பூமியால் ஜீவனமும்,

5-மாதி 1-ல் இருந்தால் எப்போதாவது ஒரு சமயம் தனங் கிடைத்து ஜீவனமும்,

6-மாதி 9-ல் இருந்தால் கல் கட்டை இவற்ருல் ஜீவனமும், 6-மாதி 8-ல் இருந்தால் தாயாதி சத்ரு இவர்கள் சொத்தால் ஜீவனமும்,

7-மாதி 4-ல் இருந்தால் வஸ்திர மூலம் ஜீவனமும்,

8-மாதி 9-ல் இருந்தால் பிறர் சொத்தால் ஜீவனமும்,

9-மாதி 1—7-ல் இருந்தால் எது செய்தாலும் (திரவிய லாபமும்) ஜீவனமும்,

10-மாதி 11-ல் இருந்தால் வியாபாரத்தினுல் தனமும்,

10-மாதி லக்கினத்தால் இருந்தால் பின் வயதில் தனம் வந்து சுகஜீவனமும்,

11-மாதி 6-ல் இருந்தால் பிறரை அடுத்து ஜீவனம் செய்தும்,

12-மாதி 3—4 ஆகிய ஸ்தானங்களி லிருந்தால் தன் வயிற்றை வளர்ப்பதுடனும் நிற்பர்.

கடகத்தில் சந்திரனிருந்து கடகமே லக்கினமுமாக பிறந்தால் ஆச்சரியகரமாகச் சித்திரமெழுதி அதனல் ஜீவனம் செய்வார்.

ஜன்ம நக்ஷத்திரம் அதாவது சந்திரனிருக்கிற நக்ஷத்திர உத்திரம் 1-வது பாதத்தில் சிம்ம ராசியில் பிறந்தால் கன்னியா ராகு தெசையில் விசேஷ பாக்கியமுண்டாகி ஜீவனம் பிரபலமாகும். பயிர்த்தொழில் பலம், குரு தெசையும் மேன்மையாகும்.

ஜன்ம நக்ஷத்திரம் ரேவதி 3-வது பாதம் மீனம் ஜன்மராசி யும் ஜன்ம லக்கினம் கடகமும் ஆகி ஜனித்தால் 3-வது தெசையில் அதாவது சுக்கிர தெசையில் (சிறிய தகப்பன் மூலமாக பிரபு சிநேக மடைந்து) சுயார்ஜிதம் சம்பாதித்து ஜீவனம் உண்டாகும்.

ஹஸ்தம் 1-வது பாதம் ஜன்ம நக்ஷத்திரமும் ரிஷபம் ஜன்ம லக்கினமுமானல் 20 வயது முதல் அற்ப சுகமும் 25 முதல் அதிக சுகமும் சுய ஜனங்களால் 30—35-ல் பிரசித்தியும் 3, 4, 5-வது தெசைகளில் பிரபல வியாபார சுகமும், வெளி தேசத்திலிருந்து தனவரவு முண்டாகும். இதற்குக் குரு மேஷ சிம்ம தனுசிலிருந் தால் ராஜ யோகமாக யோகம் சேரிடும்.

புனர்பூசம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்தால் தனுசு ஜன்ம லக்கினமாக ஜனித்தால் 2 தெசையில் பிதுரார்ஜித தனத்தில் ஸ்திரீ மூலமாகச் சூத்திராலும், நானுவிதமாகவும், விரயமும் உதரரோக உபத்திரவமும் ஏற்பட்டு அன்னதானத்தினுல் நன்கு குணமுண் டாகி வயது 38—40-ல் நிவாரணையாகும். மூன்ருந்திசை சூரிய புத்தி முதல் கடன் கஷ்டமும், வெகு கஷ்டமும், நாலாந்திசை முதல் சுகமும் ஏற்படும். அன்னதானம் 1000-பேருக்குச் செய்ய வேண்டும். 10-வருஷம் அல்லது 12-வருஷம் ரோக பீதி யுண் டாகும்.

உத்திராடம், 3-வது பாத மகராசியில் சந்திரனிருந்து மீன லக்கினமாக ஜனித்து 2, 6, 9, மாதிகள் ஓரிடத்தில் கூடி யிருந்தால் ஜாதகன் முன் சத்துருக்களை ஜெயித்து அவர்களுடைய சொத்துக் களையு மடைந்து; பட்டு வியாபாரத்தினுல் விசேஷ தனம் சேர்ப்

பான். 4-ந் தெசையில் விசேஷ யோகமும், 5-ந் தெசையிலும் யோகமும் 6-ந் தெசை பின்னும் யோகமுடையவனுவன்.

கேட்டை 1-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் மிதுன மாகி ஜனித்தவர்களுக்குச் சுக்கிரன் கேதுவுடன் கூடின் மிலேச்ச சினேகம் விப்பிர சினேக மிவற்ருல் 16, 20, 25, 30, 35. 40 இந்த வயதுகளில் வியாபார விருத்தியும் சந்திர சூரியருடைய திசைகளில் பிரபலமும், குஜ தெசையில் பிரபல பாக்கியமும் உண்டாகும்.

சுவாதி நக்ஷத்திரத்தின் மூன்ருவது பாதம் சந்திரனிருக்கும் ஜன்ம நக்ஷத்திரமாக ஜனித்து 10-மாதி சுக்கிரனுகி சனி வீட்டில் இருந்தால் மேற்படி ஜாதகர்கள் உத்தியோக பிரபலத்தினுல் வெகு கிராமாதிகார மடைவார்கள். (சிம்ம லக்கினம்.)

அசுவனி 3-வது பாதத்தில் சந்திரனிருக்கும்போது மகர லக் கினமாக ஜனித்தால் சூரியதெசை பிற்பாதி முதல் தேசாந்திரத்தில் உத்தியோகத்தினுல் தனசம்பாதனை யேற்படும். (மகர லக்கினம்.)

சதயம் 3-வது பாதச் சந்திரனிருக்கும்போது கும்பம் லக்கின மாக ஜனித்து ஒன்பதா மாதியாகிய சுக்கிரன் லக்கினத்திலிருந்தால் நியாய வழியில் வியாபாரத்தினுல் சந்திர லக்கினுதிபதி தெசையில் பிரபல மடைவார்கள்; வெளி தேச சஞ்சாரத்தினுல் பிரபலமாகத் தன் சம்பாதனை யடைவார்கள்.

விசாகம் 4-வது பாதத்தில் சந்திரனிருக்கும் போது துலா லக்கினமாக ஜனித்தால் புததிசையில் விசேஷ வியாபாரத்தினுல் தனலாபமும் 4, 5-வது தெசைகளில் பிரபல யோகமும் ஏற்படும்.

திருஓணம் 2-வது பாதத்தில் சந்திரனிருக்கும்போது ஜனனம் கன்னியிலானுல் மூன்ருவது திசை முதல் யோகமும் பயிரில் பல மதிகமும் ஏற்படும்.

துலாராசியில் சந்திரன் விசாகம் 3-வது பாதத்திலிருந்து விசாகம் ஜன்ம நக்ஷத்திரமாக ஜனித்துச் சூரியனுக்குப் பத்தில் (லக்கினத்தில்) சனி நீச்ச மடைந்திருந்தால் வஸ்திர வியாபா ரத்தினுலும், நாணு மார்க்கங்களாலும், புததெசை வரையில் பிரபல யோகமாகவும் கேது தெசையில் மிச்ரயோகமாகவும், நடந்து சுக்ர தெசையில் பிரபல யோகமாக நடக்கும்.

பூசம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து தனுசு லக்னத்தில் ஜனனமானல் 3-வது தெசையில் பிரபல வியாபாரம் செய்து தனம் சம்பாதிப்பார். இதற்குச் சூரியன் சுக்கிரன் 4-ல் இருந்தால் அர்த்தெசை பிற்பாதியும் சூரியதெசை பிரபலமுமாக ரத்ன வியாபாரம் செய்து (ஜீவனம்) தனம் தேடுவார்.

மூலம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து மிதுன லக்கினமாக ஜனித்தால் 2-வது தெசையில் சுகக் குறைவும் 3-வது தெசையில் பூமியால் பலனும் பயிர் மூலம் சந்திர (4-ந்) தெசையில் நல்ல யோகமும் 5-வது தெசை சமயோகமும் மீனத்தில் இருக்கும் ராகு தெசையில் பிரபல யோகமும் ஏற்படும்.

ரோகிணி 1-வது பாதத்தில் சந்திரனிருந்து மீனம் லக்கினமாக ஜனித்து குரு லக்கினத்திலும் செவ்வாய் 7-லுமிருந்தால் பூமி மூலமாக விசேஷ லாப மடைவான். கடைசி வயதில் புகழுண்டாகும்.

ஹஸ்தம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினமும் கன்னியானல் 2-வது திசையில் விதேச கமனம் அல்லது கிராமாந்திரவாசமேற்படும். அம்மானல் மூன்றாந் திசை நான்காந் திசைகள் வியாபாரத்தால் நிருதி திக்கில் உத்தரோத்தரமான பிரபலமு முண்டாகும் என்று வேறு கிரந்தத்திலுள்ளது.

சித்திரை 2-வது பாதத்தில் சந்திரனிருக்க கன்னியே லக்கினமாக ஜனித்தால் முதலில் 3 தெசையில் அற்பசுகமும் ஆனல் பிரசித்தியும் 3-ந் தெசை முடிவு முதல் கிராம வாசமும் 4-ந் தெசையில் வியாபார பிரபுவால் ஜீர்ணோத்தாரணதிகளினல் ஜீவனமும் 5-ந் தெசையில் வெகு பிரபலமும் உண்டாகும்.

ரோகிணி 2-வது பாதத்தில் சந்திரனிருந்து மேஷ லக்கினமாக ஜனித்தால் சனி ரவி கூடி 8-ல் இருந்தாலும் வஸ்திர வியாபாரத்தினல் பிரபலமாக (ஜீவனம்) ஏற்படும். வியாபாரத்தில் வெகு சாதுரியன்; பிரபல பாக்கியவானுவான்.

கேட்டை 4-வது பாதத்தில் சந்திரன் இருந்து மீனம் லக்கினமாக ஜனித்து 10 மிடத்தில் செவ்வாய் கேதுவுடன் கூடி சுக்கிரனல் பார்க்கப்பட்டும் குரு சனி வீட்டிலுமிருந்தால் 35 வயதிற்குப் பிறகு க்ஷேத்திரப் பிரபலமும் பாக்கியமும் 52 வயதுக்குப் பிறகு 10 வருஷம் வரை யோக முண்டாகும்.

ஜென்ம நக்ஷத்திரம் பூரம் 3-வது பாதமாகி அதில் சந்திரனிருந்து சிம்ம லக்கினமாக ஜனித்தால் 16 வயதில் பிரசித்தியும் 20-ல் சாமர்த்தியமும் 30-க்கு மேலும் 40-ன் மேலும் நானுவித வியாபாரங்க (பலவித வியாபாரங்க)ளில் சகல வழியாக சுகமாக யோகமும், விருத்தியுமேற்படும்.

அசுவனி 3-வது பாதத்தில் சந்திரனிருந்து மகர லக்கினத்தில் ஜனனமானுல் சந்திர தெசையில் பயிரினுல் விசேஷ சௌக்கியமுண்டாகும் இதற்கே சனி மேஷத்திலிருந்து குருவாலும் செவ்வாயாலும் பார்க்கப்பட்டால் மாமனுர் மூலம் தாரவர்க்கத்தில் பாக்கியமேற்படும்.

மீன ராசியில் சந்திரனிருந்து கன்னியா லக்கினமாக ஜனித்தால் ஜாதகருக்கு வியாபாரத்தினுல் விசேஷ பொருள் சேர்ந்து சுக ஜீவனம் ஏற்படும்.

ரேவதி நக்ஷத்திரத்தில் சந்திரனிருந்து துலா லக்கினமாக ஜனித்தால் ஜாதகர் கல்வியறிவு நாடக ஞான மிவற்ருலும், உத்தியோகத்தாலும், வியாபாரத்தாலும் ஜீவிப்பார்.

உத்திரம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து கடக லக்கினமாக ஜனித்தால் 6-ல் ராகு இருந்தாலும், லக்கினத்தில் குரு இருந்தாலும் மேற்படி தெசையில் பிரபல வியாபார வழியில் தனம் வந்து ஜீவனம்.

அசுவனி 5-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் ரிஷபமாக ஜனித்தால் 25 வயது முதல் உத்தியோக ஆரம்பமும் அற்ப சுகமும் அல்லது 35-வயது முதல் உத்தியோக ஆரம்பமுமாகி 40—42-ல் பிரபல உத்தியோகமாகி 50-க்கு மேல் பின்னும் பிரபலமாகவும் ஜீவனம் நடக்கும்.

மகரராசியில் சந்திரனிருந்து லக்கினம் விருச்சிகமாக ஜனனமாயின் மூன்ருந் திசை மூதல் பிரபல வியாபாரத்தினுல் சுகமும் தனமுமடைந்து பிரபல ஜீவனம்.

கிருத்திகை 3-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் சிம்மமாகி ஜனித்தால் சுக்கிர செவ்வாய் கூடி மகரத்திலிருந்தால் பூமியால் விசேஷ பாக்கியமும் லக்கின ராகுதெசை வரும்போது தார வர்க்

கத்தினல் பூமிலாபமும், பிரபல பயிர்த் தொழில் பிரசித்தி லாபமும் நேரிடும்.

சுவாதி நக்ஷத்திரம் முதலாவது பாதத்தில் சந்திரனிருந்து சிம்ம லக்கினமாக ஜனித்தால் சூரியன் செவ்வா யிருவரும் நீச்ச ராசிகளிலிருந்தால் ஜன்ம தேசத்தை விட்டு வெளி தேசத்தில் ஜீவனம் ஏற்படும். வியாபார மூலம் ஜீவனம்.

ரோகிணி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து கன்னியா லக்கினத்தில் பிறந்து குரு நீச்சமுற்று நீச்ச பங்க ராஜயோகமு மேற்படின் சங்கீதம் நாட்டிய மிவைகளை(க்கற்று) சிக்ஷித்து விசேஷ சன்மானுதிகளால் ஜீவனம், மேற்படி குருவுடன் புதசுக்கிரர் கூடினுமிப்படியே. மேலும் மாமனுர் மூலமும் விசேஷ சுகபோகாதிகளுமுண்டாகும்.

பூரம் 4-வது பாதத்தில் சந்திரனிருந்து கும்ப லக்கினமாக ஜனித்தால் குரு ராகு இருவரும் 11-ல் கூடினுலும், 9-ஆம் இட சனியாலிவர்கள் பார்க்கப்பட்டாலும், சூத்திரப் பிரபுவால் மேற்படி தெசை பிரபல யோகத்தை தரும். குருதெசை மத்திபமாகும். மற்ற தெசைகள் பிரபலமாகும்.

ஆயில்யம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து கும்ப லக்கினமாகப் பிறந்தாலும்,

பூராடம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து கடக லக்கினமாகப் பிறந்தாலும் சந்திர தெசையில் பிரபலமும் (கடகத்திற்கு) 4, 5, 6 வது தெசையில் பூமி அரசாங்க மிவற்ருல் சுகமும் பிரபலமும் ஏற்படும். இங்கு கடகத்திற்குக் குரு தெசை யோக மென்பதைக் காட்டுவதாகிறது.

பரணி 1-வது பாதத்தில் சந்திரனிருந்து ஜன்ம லக்கினம் கும்பமானுல் 8 வருஷம் சூத்திரப் பிரபுவிடம் எழுத்து மூல ஜீவனமும் 32 வயது முதல் ஏழு அல்லது 8 வருஷம் கஷ்டமும், விரயமதிகமும், 40-க்குப் பிறகு உத்தியோக மூலம் சுகமும் ஜீவனமு மேற்படும்.

---

முக்கிய குறிப்பு:—குருதெசை 6-வதாக வருவது 'அவயோகமென்று சிலர் கொள்கையாயினும், கடக லக்கின விஷயத்தில் அவயோகமாகா தென்று காட்டப்படுகிறது. ஆயில்யத்தில் ஜனித்தவர்களுக்குக் குருதெசை 6-வது தெசையாக நேரிடவும் முடியாது.

உத்திரட்டாதி 2-வது பாதத்தில் சந்திரனிருந்து மகரம் லக்கினமாக ஜனித்தால் சுக்கிர சூரியர் கூடின் அரசாங்க ஜீவனம், இவர்களுடன் கேது கூடினும் 10 ஆம் இடத்தில் ராகு இருந்தாலும் பிறர் கர்மத்தைச் செய்து அதனுலும் தாய் வர்க்கத்தினுலும் தன மடைவான்.

சுவாதி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து மேஷம் லக்கினமாகி ஜனித்து சனி 2 ஆம் இடத்திலிருந்தால் எப்போதும் அலைச்சலும் ஜன்ம பூமியை விட்டு வெளித்தேச வாசமும், மேற்படி சனி தெசையில் கிராமம் கிராமமாகச் சஞ்சாரம் செய்தலும் மேற்படி தெசையின் மூன்ருவது பாகத்தில் பிரபல உத்தியோக சித்தியும் 4-ந் தெசையில் வெகு பிரபலமும், வெகு கிராமாதிகாரமும் தடாகாதி தர்ம சித்திகளும் ஏற்படும்.

அசுவனியாதியாக 21-ஆவது நக்ஷத்திரமான உத்திராட நக்ஷத்ரம் 3-வது பாதத்தின் ஆரம்பத்தில் சந்திரனிருந்து லக்கினம் கும்பமாக ஜனித்தால், செவ்வாய் ராகு இருவரும் 10-ல் இருந்தால் புரோகிதம், பிராம்மணுர்த்தம் இத்யாதிகளாலும் சூத்திராலும் தன சம்பாதனை (ஜீவனம்) ஏற்படும். மேற்படி ராகு குரு சனி தெசைகளில் குருதெசை பிரபலமும் சனி தெசையில் வெகு பாக்கியமும் கூட ஏற்படும்.

சதயம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து கும்பமே லக்கினமாக ஜனித்து குருவால் பத்தாமாதிபதி பார்க்கப்பட்டால்; புரோகிதம், பிராம்மணுர்த்தம், ஆமசிரார்த்தம் இவற்ருல் வெகு சமர்த்தனுகத் திரவியம் சம்பாதிப்பான்.

சந்திரன் மகம் முதலாவது பாதத்திலிருக்க லக்கினம் துலாமாக ஜனித்தால் 4, 9, (10) 11-க்குடையவர்கள் மேற்படி சந்திரனுடன் கூடியிருந்தால் சமர்த்த விவசாயத்தினுல் தன மடைவான். பின் வயதில் அரசாங்கத்தில் விவசாய உத்தியோக மடைவான். வெகு பிரசித்தி யடைவான். உபாயத்தினுலும் தந்திரமாகவும் ஜீவிப்பான்.

---

ஸப்தமாதி சந்திர: தனஸ்தானேஸ்திதிர்யதி. கேவலேந்து:ச தனகோஷ்டத்திரவியம் லபேத்புக: என்கிறபடி இந்த மகா லக்ன ஜாதகருக்கு மட்டும் சந்திரன்.

திரு ஆதிரை 3-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினமும் மிதுனமேயானல் லக்கினதிபதியான புதனுக்கிரண்டில் ராகு இருந்தால் உத்தியோகத்தில் வல்லவனுவன்.

சதயம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் மகரமாக ஜனனமானல் 10 மாதி 5-ல் இருந்தால் புரோகித ஜீவனம். அன்றி 10 ஆம் இடத்தை ரவி புதன் குஜ சனி இவர்கள் பார்த்தாலும் புரோகித ஜீவனமே நடக்கும்.

அவிட்டம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து சிம்ம லக்கினமாக ஜனித்தால் சூரியன் ராகுவுடன் கூடி 12-ல் இருந்தால் ஜனவசிய முடையவனுகித் தாராலோசனையால் தன முண்டாகும். கிரய விக்கிரயங்களில் வெகு சமர்த்தனுவன்.

பரணி 2-வது பாதத்தில் சந்திரனிருந்து தனுசு ஜன்ம லக்கின மானல் 9, 10 மாதிகள் ராகுவுடன் கூடி 8-ல் இருந்தால் பட்டு வியாபாரத்தினல் சமர்த்த ஜீவனம்.

சந்திரன் விருச்சிகத்திலிருக்கப் பிறந்து ரிஷப லக்கினத்திலும் பிறந்தால் 3-ந் தெசை முதல் பிரபல உத்தியோக ஜீவனம். இதற்கே 5-ல் கேதுவும் சுக்கிரனு மிருந்தால் மாமனர் மூலம் பிரபல முண்டாகி 10,000-த்திற்கு மேல் தன சம்பாதனை யுண்டாகும்.

மூலம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து குருவுடன் ராகு கூடி யிருந்தால் புரோகிதம், யாகம் செய்வித்தல், தர்மசாஸ்திர மிவற்று லும், விப்பிரர்களுக்குச் சாஸ்திர விதிகர்த்தாவாகியும் ஜீவனம்.

பூசம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் ரிஷபமாகிப் பிறப்பின்,சேர்க்கவும் கலைக்கவும் சாமர்த்திய முண்டாகி ஜீவனம்.

சித்திரை 4-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் கடகமாக ஜனித்து ராகு குஜனிவர்கள் சிம்மத்தில் இருந்தால் உயர்ந்த நூல் வியாபாரத்தினுலும் வெளித்தேச தேசாந்திர வியாபாரியின் சினே கத்தாலும் தன சம்பாதனையால் ஜீவனம்.

மூலம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் துலாமாக ஜனித்து 2-ல் சனி ரவி யிருந்தால் பிறரைப் பயமுறுத்தி யல்லது வஞ்சித்து திரவியம் சம்பாதிப்பான். அப்படியே விரயமும் செய்வான். வியாபாரத்தினுலும் பற்பல வழியாலும் பொருள் தேடி அநியாய வழியில் செலவிடுவான்.

2-மாதி, 1, 4, 7, 10 இந்த ஸ்தானங்களில் எங்காவது இருந்து 1, 4, 7, 10 மாதிகளில் 2 மாதி நின்ற ராசி நாதன் சந்திரனுடன் கூடி யிருந்தால் எப்போதும் கலவரமும் அலைச்சலும் உண்டாகி சஞ்சாரத்தினுல் தனந்தேடி ஜீவனம் நடக்கும். மேற்படி 2-மாதி சத்துரு ராசியிலிருந்தாலும் நீச்சராசியில் நீச்ச நவாம்சத்திலிருந் தாலும், நீச்ச ஷட்வர்க்கங்களிலிருந்தாலும் தரித்திர ஜீவனம்.

உத்திராடம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் கும்ப மாகி 2-ல் ரவி புதரிருந்து குஜனுல் பார்க்கப்பட்டாலும் மேற்படி சந்திரனுக் கேழில் குரு இருந்து மேஷ சனியால் மேற்படி குரு பார்க்கப்பட்டாலும் கஜானுதிகாரியாகி ஜீவனம். வியாபாரத்தினு லும் ஜீவனம்.

8 மாதி 5-ல் இருந்தால் புத்திரராலும், 12-ல் இருந்தால் பேய் பிடித்தும் தன விரயமாகும்.

8 மாதி 2-ல் இருந்தால் பூர்வ ஆஸ்தி விரயமாகும்.

8 மாதியே 4-ல் இருந்தால் வீடு, வாகனம், பூமி முதலியன பாழுமாகும்.

7-மாதி 12-ல் இருந்தால் தாரத்திற்கு ரோகத்தினுல் பொரு ளழியும்.

மூலம் 4-வது பாதத்தில் குரு தனுசில் இருந்து சனியுடன் கூடி யிருந்தால் லக்ஷ்மி ஷஷ்டியம்சத்தில் பிறந்தால் சிம்ம லக்ன ஜாதகர் 16 வருஷம் தொடர்ந்து யோகமடைவார். ராஜயோக முண்டாகும்

லக்கினுதிபதியும் குருவும் 6-க் குடையவனைப் பார்த்தால் அம்பா(னுல்)ன் சொத்து வரும்.

உத்திரட்டாதி 1, ரேவதி 3, பூரட்டாதி 4 ஆகிய நக்ஷத்திர பாதங்களில் சந்திரனிருந்து அவிட்டம் 1-வது பாதத்தில் செவ்வா யிருந்தால் 21 வயதிற்குப் பிறகு சகோதரியின் கணவன் காரணமாக விருச்சிக லக்கின ஜாதகன் தனமடைவான். பாலிய வயதில் தரித்திர முண்டாகும்.

லக்கினுதிபதி செவ்வாயாகி அவிட்டம் 1-வது பாதத்தில் இருந்தால் 35-வயதிற்குமேல் பாக்கியமேற்படும். 30 வரையில் வியாகூலம்.

அஷ்டமாதிபதியும் 10-மாதிபதியும் கூடினல் யோகமற்ப மாகி விடும். நடுவில் நடுவில் யோகபங்க மேற்படும் அல்லது மேற்படி யோகபங்க மேற்படுமென்கிற வியாகூலம் ஏற்படும்.

உத்திரம் 1-வது பாதத்தில் சந்திரனிருக்கப் பிறந்தவன் 27-வயது முதல் பாக்கியமடைவான்.

உச்சக் கிரகத்துடன் 7-ல் சனி ராகு கூடில் அயோக்கிய வழி யால் ஜீவனம், பிறரை ஹிம்சித்தல் வஞ்சித்தல் பிராம்மணரைத் திட்டல் இவற்ருல் ஜீவனம். குலத்தைக் கெடுத்தலும், கற்பழித் தலும், ஈனத்தொழிலும், அகிருத்தியங்களும் நிறைந்திருக்கும் ஜாத கன் ஆவான், இவர்களைக் குரு பார்த்தால் வேறு மாருன பலனேற் படும்.

சந்திரனுக்குப் பத்தில் சூரிய னிருந்தாலும் செவ்வா யிருந் தாலும் சகலமும் சித்தமாக இருந்துகொண்டு சாகசத்தினுலும், பாபபுத்தியாலும், மேற்படி ஸ்தானத்தில் புதன் இருந்தால் வித்தை யாலும், குரு இருந்தால் ராஜ துல்லியமாகவும், சுக்கிரனிருந்தால் போகத்தினுலும், சனி யிருந்தால் சோக மூலமும், ஜீவனம்.

லக்கினத்திற்கு 4-ல் புதனல்லது சுபரிருந்து ஜனித்தாலும் லக்கினத்தில் சுபரிருந்து குரு பார்த்தாலும் சுகஜீவனம். மேற்படி கிரகம் பலவீனமாகியிருந்து பாபரால் பார்க்கப்பட்டால் கண்டுங் காணுமலும் பொருள் வந்து ஜீவனம்.

லக்கினத்தில் பாபக்கிரக மிருந்தால் ஆசையும் துர்ப்பலமும் லக்கினத்திலுள்ள பாபர் 8 மாதியால் பார்க்கப்பட்டால் தரித்திர மும், வியாதியும், 7 மாதியால் பார்க்கப்பட்டால் சுகமும் 6 மாதி யால் பார்க்கப்பட்டால் கேவல தரித்திரமும் உண்டாகும்.

சித்திரை 3-வது பாதத்தில் சந்திரனிருந்து சனி செவ்வா யிவர் களுடன் கூடியிருந்தால் 3-வது தெசையில் சுய புக்தியில் தகப்ப னற்ற பெண்ணை மணந்து அவளால் 26-வயது முதல் சுகமும் சகல போகமுமடைந்து அவளால் சம்பத்து முண்டாகி யோக ஜீவனமேற் படும். (மிதுன லக்கினம்.)

ரேவதி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து குரு கன்னியி லிருந் தால் 22-வயது முதல் தன சம்பாதனை யேற்படும். இதற்கே 4-வில் அல்லது 7-ல் ராகு இருந்தால் 35-வயது முதல் சகல பாக்கியமும் சித்திக்கும். (மீன லக்கினம்.)

2,9-மாதிகள் 4-ல் இருந்தால் மேஷ லக்கின ஜாதகருக்கு மாதம் 300 தனம் சம்பாதனை யேற்படும். வியாபார ஜீவனம். நகரவாசம். அன்றி,

பூரட்டாதி 4-ல் சனி இருந்தாலும் உத்திரட்டாதி 3-ல் உள்ள ராகுவுடன் கூடி யிருந்தாலும் கன்னியா விக்கிரயத்தினாலாவது, சகோதரியாலாவது, தாயாதியாலாவது மாதம் 300 அல்லது 400 அல்லது 500 அல்லது 600 வீதம் தனமும் தினம் 10-க்கு மேலும் 100-க்கு அதிகமும் வியாபாரம் செய்து ஜீவனம்.

துலா லக்கினமும் மகர சந்திரனுமாகி 11-ல் குரு சனி சுக்கிரர் கூடியிருந்தால் 28 வயதில் லக்ஷிமி கடாக்ஷமும் 29 வயதில் குரு தெசை சுய புத்தியில் கிலேசமும் ஏற்படும். இந்தக் கிலேசம் மேற்படி தெசை 3-ல் ஒரு பாகம் ஆனபின்பு தீரும்.

ஜன்ம லக்கினத்திற்குப் பத்தாமாதிபதி ஷஷ்டி யம்சத்தின் கோராம்சத்திலிருந்தால் எப்போதும் கோரத் தொழிலால் ஜீவன முண்டாம்.

சனி 2-லாவது 4-லாவது 10-லாவது யமஷஷ்டி யம்சத்தி லிருந்து, துலா லக்கினத்தில் பிறந்தால் விவாகமானபின் வெகு பாக்கியமடைந்து ஜீவனம், பாக்கிய வமிச மனைவியின் பொருளால் ஜீவனம்.

கேட்டை 2-வது பாதத்தில் சனியிருந்து மேற்படி சனி தெசை 3-வது தெசையாக வந்தால் 2 மாதியால் பார்க்கப்பட்டு மிருந்தால் ஒன்றரைக் கோடி தனம் தேடுவான். சில கிரந்தத்தில் 50 லக்ஷம் என்று சொல்லுகின்றனர்.

2-ல் சந்திரனிருந்து அஷ்டமாதிபதியான கன்னியிலுள்ள புதனால் பார்க்கப்பட்டால் வாய்ச்சாலத் தன்மையினால் கலஹாதிகள் செய்வித்து ஜீவனம். அஷ்டமாதி 10-ல் அல்லது 2-ல் இருந்தாலும் இப்படியே வாயடியடித்து ஜீவனம், நயவஞ்சகன்.

கேதாரமினி யோகாதிகளுண்டானால் 16 வயதிலும் 30 வயதி லும் பாக்கிய மேற்படும். அக் காலங்களில் ஆயுளுக்கு யோகாரிஷ் டம் சம்பவிக்கும்.

செவ்வாயின் அம்சத்தில் சந்திரனுடன் ராகு 9-ஆம் இடத்தில் கூடி யிருந்தால் தர்மாதர்ம விசாரணையால் திரவிய சம்பாதனை யடை வான். சில சமயத்தில் அநியாய வழியினால் சம்பாதித்து அநியாய

வழியினாலேயே செலவழித்து வயோதிக வயதில் தரித்திரதிசை யடைவான். பந்துஜன துவேஷ முண்டாகும். கஷ்ட ஜீவனமாகும்.

குரு கேதுவுடன் கூடினல் பாஷாண்டத்தனம் செய்வதால் ஜீவனம்.

சுவாதி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து குரு கேதுவுடன் கூடி மேஷத்தில் இருந்தால் 1, 2-வது திசைகள் சுபம் ஆகும்.

லக்கினத்திற்காவது சந்திரனுக்காவது ஒன்பதில் ராகு இருந்தால் 30-வயதிற்குப் பிறகு 10-வருஷம் வரையில் மனஸ்தாபாதிகளால் நஷ்ட முண்டாகும், எங்கெங்கு என்னென்ன வியாபாராதிகளுண்டோ அவை யெல்லாம் நாசமுறும்.

ரேவதி 4-ல் சனியும் மிருகசீரிஷம் 2-ல் சுக்கிரனு மிருந்து மகர லக்கினத்தில் பிறந்தால் 23-வயது முதல் பாக்கியவிருத்தி ஏற்படும். ஜன்மம் முதல் ஆயுசு வரை பாக்கிய முண்டாகும்.

9-ல் அல்லது 2-ல் ராகு இருந்தால் (விருச்சிக லக்கின) ஜாதகனுடைய சகோதரனுக்கு ஈனத் தொழிலால் ஜீவனம்

சுக்கிரன் தன் உச்சத்தில் ஒன்பதில் இருந்து 10-ல் செவ்வாயிருந்தாலும்,

சுக்கிரன் உச்சத்தில் இருக்க 10-ல் 1-மாதியான செவ்வாயிருந்தாலும் குருவால் பார்க்கப்பட்டால் நல்ல குலதீபமான புத்திரனவன்.

1-ல் அல்லது 10-ல் அல்லது 7-ல் செவ்வா யிருந்தாலும் லக்ஷ்மீயானவள் இவனை விட்டு விலகாள்.

விருச்சிக லக்கின ஜாதகனுக்குச் சூரியன் பரணி 3-வது பாதத்தில் இருந்தால் 100 ராஜயோக மிருப்பினும் அவயோகமே நடக்கும் நீச்ச சனியுடனும் கூடி யிருந்தால் கிலேச ஜீவனமாகும்.

பூரம் 4-வது பாதத்தில் சந்திரனிருந்து ஜனித்த ஜாதகனுக்கு 9-மாதி 10-மாதியிவர்கள் 11-ல் இருந்தால் கடக லக்கினமானல் ஜன்மம் முதல் கடைசி வரை பாக்கியமுள்ளவனவான். இதற்கே சுக்கிரன் கிருத்திகை 1-வது பாதத்திலும் கன்னியில் ராகுவும் இருந்தால் 35—வயதுக்குமேல் ராகு தெசையின் பிற்பாதி முதல் ராஜயோகம் உண்டாகும்,

லக்கினத்தில் கேதுவும் லக்கினாதி சந்திரனுடன் கூடியு மிருந்தால் கும்பலக்கின ஜாதகருக்கு வயது 20 முதல் 37 வயது

வரை விசேஷ பாக்கிய முண்டாகும். முப்பத்தேழுக்குப் பிறகு கிலேச முண்டாகும். 4-ம் தெசை பாதிக்கு மேலிருந்து தனம் சேரும்.

6, 8, 12-க் குடையவர்கள் 6, 8, 12 இந்த ஸ்தானங்களி லேயே இருந்தாலும் 6, 8, 12-க் குடையவர்கள் ஸ்தான பரிவர்த் தனையாகி யிருந்தாலும் இவர்களே இவர்களை ஒருவரை ஒருவர் அன்னியோன்யமாகப் பார்த்துக்கொண்டாலும் இம் மூவரும் கூடி 6-லாவது 8-லாவது 12-லாவது ஓரிடத்தில் சேர்ந்திருந்தாலும் ஜாத கன் பெரிய ராஜாதிராஜர்கள் மதிக்கும் யோக முடையவனுவன். ஆயினும் சகல லக்ஷ்மீ கடாக்ஷமுள்ளவனுயினும் கூட ஒரு சமயம் எப்போதாவது கொஞ்சம் கஷ்ட கிலேச மனுபவிக்க நேரிடும். சிலர் தார மிரண்டு உண்டாகுமென்று சொல்கின்றனர்.

சந்திரன் மீனத்தில் உத்திரட்டாதி நக்ஷத்திரத்திலிருந்து குரு 10-லும் இருந்தால் கும்பலக்கின ஜாதகன் 20 வயதுக்குமேல் மத் தியில் 5 வருஷம் விசேஷ பாக்கிய மடைவான். அதற்கு முன்னு டியே 16-வது வயது முதல் சமாராகப் பிரசித்தியும் 19 முதல் புத்திப் பெருக்கும் ஏற்படும்.

சந்திரன் தனுசு ராசியில் குருவுடன் கூடியிருந்து அதுவே லக்கினமாகிச் சிம்மத்தில் செவ்வாயிருந்து மேற்படி குருவால் பார்க் கப்பட்டால் 35 வயதிற்குப் பிறகு பாக்கியமும் ராஜசன்மானதிகளு முண்டாகும்.

ஆயில்ய நக்ஷத்திரத்தில் பிறந்தவன் 2-வது பாதத்தில் ஜனன மானுல் பாபபுத்தியும், அதர்மமும், எதையும் உண்பவனும், சாகச மும், குரூர கிருத்தியமும், செய்நன்றி மறவாதவனுகவும், தன் மித் திரஜன ரக்ஷகனுகவும், நியாய சம்பாதனை செய்பவனும், தன முள்ள வனும் ஆவான். மேற்படி ஆயில்யத்திலேயே 4-வது பாதத்தின் மத்தியில் பிறந்தவன் நீச்ச சேவை செய்பவன்; வெகு வியாபாரம் செய்வான்; அநியாய சம்பாத்திய முடையவன்; வைதியத் தொழி லும் செய்வான். சில சமயங்களில் நியாய வழியிலும் சம்பாதிப் பான்.

லக்கினம் துலாமாகி பூசம் 3-வது பாதத்தில் சுக்கிரன் 10-ல், க்ஷிதீச ஷஷ்டி யம்சத்திலிருந்தால் ராஜசம வாழ்வு வுண்டாகும்.

சித்திரை நக்ஷத்திரத்தில் பிறந்தவன் சுயகாரியவாதி. தெளிவும் நல்லறிவும், விசேஷ (கு)யுக்தியும், பெருந்தன்மையும் தீர்க்காலோசனையான பேச்சும், நல்ல சன்மானதிகளால் ஜீவனமும். சித்திரை நக்ஷத்திரத்தின் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து சனி செவ்வாயிவர்களுடனும் கூடியிருந்து லக்கினமும் துலாமாகின் மத்திய வயதில் வெகு பாக்கியமும் அடைந்து ஹவ்விய கவ்வியாதிகளும் செய்து சுகியாவன்.

ரேவதி 3-ல் சந்திரனும் லக்கினத்தில் (மகரத்தில்) புத சுக்கிரரும் இருந்தால் சுக்கிர திசையில் 20 வயது முதலாகப் பாக்கியமுண்டாகும். இவர்களே 8 மாதியான சூரியனுடனும் கூடி யிருந்தால் மத்தியில் யோகபங்க முண்டாகும். 24 வயதுக்கு மேல் 6 வருஷம் யோகம் உண்டாகும். ஒரு சமயம் 8 வருஷமும் யோகம் நடக்கும்; பிறகு கிலேச முண்டாகும். இதற்கே லக்கினத்திற் கிரண்டில் பூரட்டாதி 2-ல் செவ்வாயும் அவிட்டம் 3-ல் சனியும் 9-ல் ராகுவு மிருந்தால் வெளி தேசத்தில் பாக்கியமும் வயோதிக கிலேசமு முண்டாகும். மேற்படி ராகு ஹஸ்தம் 2-வது பாதத்தில் இருந்தால் 20 வயதிற்குப் பிறகும் 40-க்கும் பிறகு 5-ந் தெசையில் ராஜ சன்மான முண்டாகும். மத்தியில் 32-ல் தாயாதி விரோத முண்டாகிப் பிறகு முன்சொன்ன 40 வயது முதல் அது யோகமாக மாறிவிடும்.

குரூரஷஷ்டி யம்சத்தில் லக்கினத்திற் கிரண்டில் சனியுஞ் சூரியனும் கூடி மேஷத்தில் இருந்தாலும் இத்துடன் மிதுனத்தில் செவ்வாயு மிருந்தாலும் ஜனங்களை வெகு பேச்சால் வஞ்சித்து ஜீவனம் செய்வர். அதன் பலன் மத்திய வயதில் சோகமுண்டாகும். மேற்படி சனி பரணி 1-வது பாதத்திலும் சந்திரன் ஆயில்யம் 4-லாவது பாதத்திலும் இருந்தால் சந்திர தெசையில் யோகமும் சூரிய தெசையில் ராஜ துவாராவாக அவமானதிகளும் ஏற்படும். 40 வயதிற்குப் பிறகு பாக்கியாதிக ளுண்டாகும். தார வம்சத்தில் பாக்கியம் வரும்.

உத்திர நக்ஷத்திரத்தில் 2-வது பாதத்தில் சந்திரன் லக்கினதிபதியாகி லக்கினத்திற்கு 3-ல் இருந்தாலும் ஆயில்யம் 1-வது பாதத்தில் செவ்வாய் நீச்சனுயிருந்து சுக்கிரன் 11-ல் இருந்தாலும் 27 வயது வரை கஷ்ட ஜீவனம்; பிறகு ராஜசபை முதலிய ஸ்தானங்களிலும் ஹாவிய கதா காலக்ஷேபாதிகளால் ஜீவனம். 8 வருஷம்

வரை ராஜயோக பலன் நடக்கும். ராஜ முத்திரை யதிகாரம் உண்டு.

கேட்டை நக்ஷத்திரத்தின் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து மேற்படி சந்திரனுடன் ராகுவும் கூடி இருந்தால் ஜன்ம லக்கினம் துலாமாகின் நீச்ச சேவை செய்து ஜீவனம், இதில் தாயாதி கலகத்தினுல் தொழிலில் நாசமும் (அடிக்கடி கலகமும்) விலக்கும் நேரிடும், சிலர் கொள்ளை வைசியத் தொழிலிலும் வேறு சிலர் வெகு வியாபாரத்தினுல் வெளி தேச சஞ்சாரத்தினுல் தனமென்றும் சொல்லுகின்றனர். கடனாளி யாவன். மேற்படி ராகு அனுஷம் 4-வது பாதத்திலிருந்தால் நடு வயதில் யோக மனுபவித்துக் கடைசி வயதில் கடனாளியாவான்; அப்போது பிறர் சொத்தை அபகரித்து ஜீவனம் செய்வான்.

உத்திரம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் மீனமாகி ஜனித்து, 2-ல் செவ்வாயும் 10-ல் குருவும் இருந்தால் 24 வயது முதல் பாக்கிய முண்டாகும்; சிலர் 27 வயது முதல் உண்டாகுமென்கின்றனர். ஆயுள் வரை பாக்கிய முண்டாகும்.

5-ல் சனி (மேஷத்தி லிருந்தாலும்) அசுவனி 2-ல் வர்க்கோத்தமத்தில் இருந்தாலும் 30 வருஷம் முதலாக ஆயுள்வரை பாக்கிய முண்டாகும். வியாபாரத்தினுல் மாதம் 200 தனம் சம்பாதனை யுண்டாகும். மேற்படி சனி எங்கிருந்தாலும் 5-ல் வர்க்கோத்தமம் ஜாமீன் கொடுத்தல் கூடாது.

சுவாதி 1-வது பாதத்தில் சூரியனும் மூலத்தின் முதற்பாதக் கடைசி சந்தியில் சந்திரனு மிருந்தால் தனுர்லக்கின ஜாதகருக்கு 46 வயதிற்குப் பிறகு அல்லது 50 வயதிற்குப் பிறகு கிலேச முண்டாகும். ஆருவது திசை முதல் மேற்படி கலஹாதிகளுண்டாகி 53 வயது முதல் சுக முண்டாகு மென்பது சிலர் மதம். ஆதியில் 30 வயது முதல் யோகமுண்டு.

ஆயில்யம் 4-வது பாதத்தில் அல்லது புனர்பூசம் 4-வது பாதத்தில் சந்திரனிருந்து கும்ப லக்கினத்தில் பிறந்து 9-ல் சூரியனிருந்து சூரியதெசை வந்தாலும், சூரியதெசை மத்தியிலிருந்து அல்லது 3-வது தெசை மத்தியிலிருந்து அல்லது 21 வயது முதலும் 30-க்கு மேலும் விசேஷ பாக்கிய முண்டாகி தன் தகப்பனின் சகோதரியின் கணவன் மூலமாகப் பிரபல மடைவான்

என்று சிலரும்; வேறு சிலர் தன் தகப்பனின் சகோதரியின் புத்திரியை ஜாதகன் மணந்து அவள் யோக பலனைப் பாக்கியத்தை அடைவானென்றும் சொல்லுகிறார்கள்.

உத்திரட்டாதி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து உத்திரம் 3-வது பாதத்தில் புதனும் ஹஸ்தம் 2-வது பாதத்தில் சனியுமிருந்தால் எக்குலத்து ஜாதகர் ஆனாலும் வைசியத் தொழில் மூலம் ஜீவனம் செய்வர். 30 வயது முதல் கொஞ்சம் யோகமு முண்டாகும். 4-ந் தெசை கடைசியில் கஷ்டமுண்டாகும். 40 வயதுக்கு மேல் கஷ்டமுண்டாகும். 50 வயது முதல் திரும்பவும் மரண காலம் வரை யோகம் ஏற்படும்.

திருவோணம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து மூலம் 3-வது பாதத்தில் குருவும் லக்கினத்தில் 7 மாதியும் இருந்தால் துலா லக்கின ஜாதகன் ஜகத்குரு ஆவதுடன்; ராஜதுவாராவாக சர்வாதிகாரமும் வகித்து (16 வயது முதல் பிரபலமாக வாழ்ந்து) 56-வயதில் கொஞ்சம் கஷ்டமும் அடைந்து பிறகு பிரபலமாக வாழ்வான்.

சந்திரன் ரோகிணி 2-வது பாதத்திலிருந்து செவ்வாய் அசுவனி யல்லது பூரம் அல்லது உத்திராடம் இந்த நக்ஷத்திரங்கள் மூன்றின் ஒன்றின் முதலாவது பாதத்தில் இருந்தால் வெகு தனாதிகாரியாவன். இதுவே மிதுன லக்கினமாகி அசுவனி 1-ல் சனியிருந்து கிருத்திகை 1-ல் புதனும் மேற்படி சனியுடன் சுக்கிரனும் கூடியிருந்தால் ஜன்மம் முதல் ஆயுள் வரை பாக்கிய முண்டு. 25 வயது முதல் எண்ணிலடங்கா பாக்கிய (முடைவான்) அதிகாரியாவன்.

சந்திரன் ரிஷப ராசியிலிருந்து லக்கினம் விருச்சிகம் ஆகி 9-ல் ராகுவும், மகம் 1-ல் செவ்வாயு மிருந்து குரு சனி கூடி தனுசில் இருந்தால் ஜாதகனுக்கும் தன் அம்மானுக்கும் விதவைகளின் பிள்ளைகளை ரக்ஷிக்கும் ஆசிரமத்தில் ஜீவனம் நடக்கும்.

மூலம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து உத்திரம் 4-ல் சுக்கிரனிருந்து 4, 9, 10, 5-க் குடையவர்கள் கூடி 11-ல் இருந்தால் (தனுசு லக்கின ஜாதகர்) அநாயாசமாக வீடு வாசல் வாகனம் முதலியன உடையவராவர். இதற்கு முந்தி வெளி தேசத்தில் வெகு வீடுகளில் வாசம் செய்வர். 40 வயதிற்குப் பிறகு மேற்படி

பலன்கள் அநாயாசமாகச் சகல தனபாக்யாதிகளும் வலியச் சேரும். செவ்வாய் விசாகம் 3-லும் மூலம் 1-ல் சந்திரனும் இருக்க மேற்படி சந்திர திசையில் மொத்த வருஷமும் யோகம் நடக்கும். செவ்வாய் திசை 3 வருஷம் யோகம், அதன் பிறகு சகல கலஹமும் நாசமும் உண்டாகும். ராகுதிசை வெகு பிரபலம். அல்லது ரிஷபத்தில் ரோகிணி 2-ல் செவ்வா யிருந்தால் அந்தத்தெசை மத்தியில் கஷ்டம் தரும்.

எந்த லக்கினமானாலும் 2, 9, 10, 11 ஆகிய ஸ்தானங்கள் 4-லும் பலமுள்ள கிரகங்களிருந்தால் குபேரசமசம்பத்துடையவ னுவன்.

சித்திரை 3-வது பாதத்தில் சந்திரனும் சுவாதி 2-வது பாதத்தில் செவ்வாயு மிருந்தால் திருடரால் தன நாசம் உண்டாகும். ஜீவனமு மவ்வழியே.

பூரட்டாதி 4 உத்திரட்டாதி 3 ரேவதி 3 இந்த நக்ஷத்திர பாதங்களில் ஒன்றில் சந்திரன் இருந்தால் சனி திசையில் அற்ப யோகம், பாலியத்தில் பீடை பின் வயதில் சுகம். இந்த ரேவதி 3-வது பாதத்திற்குச் சனிதெசை நேருவது கஷ்டம்; ஒரு சமயம் சேர்ந்தால் அவ் வயதில் சுகம் நேரும்.

மிருகசிரிஷம் 4-ல் சந்திரனுடன் புதன் கூடியிருந்தால் விசேஷ யோகத்தை துலா லக்கின ஜாதக னடைவான்.

9 மாதி 11 மாதியுடன் கூடி 9, 11-ல் எங்கு இருந்தாலும் அல்லது 10-ல் இருந்தாலும் தனஞ் சேரும். 10 மாதி 9-ல் இருந் தால் அசுபக் கிரகமாயின் பிரயாசையாலும் சுபக்கிரகமாயின் பிர யாசையின்றியும் பொருள் தேடி ஜீவனம். 10 மாதியான மேற்படி கிரகம் பலஹீனமானல் பிறரைச் சேவித்து அற்ப திரவிய மடை வான். இதை ஜாதியினாலும் ஆண் பெண் கிரகத்தாலும் ராசிகளா லும் காரகங்களாலும் அறியவும்.

9 மாதி 6-ல் இருந்தால் அம்மா(ன்)னல் பொருள் வரும். இதர கிரந்தங்களில் சத்துரு வல்லது கடனல் பொருள் பாழாகும். 9 மாதி குருவானலு மிப்படியே. லக்கினுதிபதிக்கு மிப்படியே நேரும் என்றமுளது.

5-மாதி 9-ல் இருந்தால் புத்திரியை விவாகம் செய்துகொடுத்து மருமகன் பொருளால் ஜீவனம்.

பரணி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து மேஷமே லக்கினமாக ஜனித்து 2-ல் சனியும் 10-ல் செவ்வாயும் 4-ல் குருவுமிருந்தால் வியாபாரத்தினுல் ஜீவனம்.

சர லக்கினங்களில் பிறந்து லக்கினத்தில் சந்திர சுக்கிரிருந்து மேற்படி சுக்கிரன் கடைசி நவாம்சத்தில் இருந்து சனியுடன் கூடி ஞலும் சனியால் சுக்கிரன் பார்க்கப்பட்டாலும் மத்திய வயதில் தன சம்பாதனை யுண்டாகும். மேஷம், கடகம், துலாம், மகரம் ஆகிய இந் நான்கும் சர லக்கினங்களாகும்.

உத்திராடம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினம் மிதுன மாகப் பிறந்து 1,3, 10-மாதிகள் லக்கினத்தில் இருந்தால் உத்தியோக ஜீவனம். இவர்களை சனி நீச்சத்திலிருந்து பார்த்தாலும் பிரபல உத்தியோகம், வெகு கிராமாதிகார மிவற்ருல் ஜீவனம். கஜானுதி காரியுமாவர்.

சித்திரை நக்ஷத்திர முதலாவது பாதத்தில் சந்திரனிருந்து ரிஷப லக்கினமாகிப் பிறந்து 4-ஆம் இடத்தில் சனியும் புதனும் கூடியிருந்து மேற்படி சந்திரனுக்கேழில் குரு விருந்தால் சனிதிசை முதல் யோகமேற்படும். ராஜாங்கத்தில் பிரபலமடைவான். சிலர் மதம் தரித்திர ஜாதகமென்பதாம்.

மூலம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 1, 3 மாதிகள் 10-லும் குரு 7-லு மிருந்தால் ராஜாங்க உத்தியோக ஜீவனம். மிதுன லக்கினம்.

சதயம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து 8-லுள்ள குரு கேது வுடன் கூடியிருந்து 1, 11-மாதிகள் லக்கினத்திலிருந்தால் 25 வயது முதல் ராஜாங்கத்தில் எழுத்து மூலம் ஜீவனம் நடக்கும்.

பரணி நக்ஷத்திரம் முதலாவது பாதத்தில் சந்திரனிருந்து மேஷ லக்கினமாகப் பிறந்து செவ்வாய் தசமத்திலும் சனி சப்த மத்திலு மிருந்தால் வெகு யோக ஜாதகன்; ராஜயோக முடையவன். சந்திர திசை பிரபல ராஜயோகம் தரும். 10 லக்ஷத்துக்கதிக சம்பாதனை யுண்டாகும்:

சந்திரன் துலா ராசியிலிருக்கப் பிறந்து சனி 12-லும், குரு 6-லும் இருந்தால் 4-வது தெசை முதல் பூமியாலும் நானுவிதங்களா லும் பிரபல யோகமுண்டாகும். 5-வது தெசையில் விசேஷ சுக முண்டாகும். (மேஷ லக்கினம்)

புனர்பூசம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 10-மாதி 11-லும் 1-மாதி 9-லுமிருந்து சனி 2-லுமிருந்தால் ஜாதகன் சனி திசை சூரிய புத்தியில் உத்தியோகமடைந்து கப்பல் வியாபாரப் பிரபுவால் விசேஷ தனமடைவான். தினந் தினம் விருத்தி யுடையவனுவன். (மேஷ லக்கினம்.)

சதயம் 4-வது பாதத்தில் சந்திரனிருந்து சனி 3-லும் குரு லக்கினத்திலும் லக்கினுதிபன் 9-லு மிருந்தால் மேற்படி சனி திசை பிற்பாதி முதலாக விசேஷ யோகமடைந்து மாதம் 5000 தனம் சம்பாதனை யேற்படும். (ஷி லக்கினம்)

பூராடம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து சனி குரு இவர்கள் 6-லும் ராகு 11- லுமிருந்தால் 3-வது திசை பிற்பாதி முதலாக வியாபாரத்தில் 10000 பொன் தேடுவார். (மேஷ லக்கினம்.)

அசுவனி 2-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினத்தில் செவ்வாயும் 2-ல் சுக்கிரனும் 11-ல் சனியுமிருந்தால் ராஜாங்கத்தில் பல உத்தியோக ஜீவனம். வெளி தேசத்தில் பிரபலமாகும். (இது ரிஷப லக்கினம்.)

## மிதுன லக்கின பலன்

உத்திராடம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து குரு உச்சத்திலிருந்து சனி 10-லிருந்தால் ஜாதகனுக்கு குரு தெசை முதல் பிரபல யோகமுண்டாகும். மேடி தெசையில் 1½ லக்ஷம் சம்பாதனை யேற்படும். சிலர் மதம் 50-ஆயிரம் வரை வியாபாரத்தினுல் சம்பாதிப்பானெனச் சொல்லப்படுகிறது.

பூசம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து 1, 2, 10 மாதிகள் கூடி 2-லிருந்தால் தினம் 400 அல்லது 500 அல்லது 1000 வரை வியாபாரம் செய்து ஜீவனம். 1½ லக்ஷம் ஆஸ்தி சேர்ப்பார்.

மூலம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து 3, 4, 5, 10 மாதிகள் கூடி லக்கினத்திலிருந்தால் ஜாதகனுக்கு 3-வது தெசை முழுவதும் (பிரபல) உத்தியோக சுசமூலம் ஜீவனம். 4, 5-வது தெசைகளில் கஷ்டம், இத்துடன் ராகு 6-ல் இருந்தால் அந்த தெசையில் உத்தியோகம் நீச்ச ராஜ்ஜியத்தில் கிடைக்கும், பின் வயதில் பிரபல யோகம்.

மூலம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 3, 4, 5 மாதிகள் 4-லும் 10-மாதி 5-லுமிருந்தால் 2-வது தெசையிலிருந்து சகோதரியின் கணவன் மூலமாக உத்தியோக மடைவான்.

## கடக லக்கின ஜீவன பலன்

அவிட்டம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து 9, 10 மாதிகள் கூடி மகரத்திலிருந்தால் மூன்று நான்காவது திசைகளில் ஜலமார்க்க வஸ்து வியாபாரத்தில் விசேஷ தனமடைவான்.

அசுவனி 2-வது பாதத்தில் சந்திரனிருந்து 4 மாதியுடன் கூடியிருந்தால் 36 வயது முதல் யோகமுண்டாகி 40-ல் வாகனாதி பாக்கிய முண்டாகும். இதற்கே 7-ல் சனியிருந்தால் பாலியத்தில் தரித்திர முண்டாகும்.

பூராட நக்ஷத்திரத்தில் சந்திரனிருந்து லக்கினத்தில் ரவியும் செவ்வாயும் 4-ல் சனியுமிருந்தால் ஜாதகர் வெளி தேசத்தில் தீபாந்திரத்தில் மிலேச்சர் மூலம் 25 வயது முதல் தனமடைவார்.

உத்திரம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து, 2-ல் ரவி குஜ புதரும் 1-ல் சனியுமிருந்தால் எப்போதும் லாபமடைந்தபடியே யிருப்பான். இத்துடன் சுக்கிரன் சித்திரை 3-ம் பாதத்தில் இருந்தால் புரோகித மூலமும் தேவி சக்தியாலும் விசேஷமாகச் சம்பாதிப்பான்.

கேட்டை 1-வது பாதத்தில் சந்திரனிருந்து குரு செவ்வாய் 10-லும் சுக்கிர சூரியன் 11-லுமிருந்தால் சந்திர திசை முதல் யோகமும் செவ்வாய் திசையில் 1000-த்திற்கு அதிக சம்பாத்தியமும் சேரிடும். 3-வது தெசை முதல் சுகமுண்டானாலும் 4-வது தெசையில் கஷ்டங்களுண்டாகும்.

பூசம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினத்தில் குருவும் 2, 10 மாதிகள் 5-லும் இருந்தால் யுக்தியாய்ப் பிரசங்கம் செய்தல் தேவ க்ஷேத்திராதிகாரம், வெகு கிராமாதிகாரம், இவைகளை யடைவான். மேற்படி 10 மாதியுடன் கேது கூடி யிருந்தால் அந்தத் தெசையில் வெகு பாக்கிய யோகம் உண்டாகும்.

அனுஷ நக்ஷத்திரத்தில் சந்திரனிருந்து 11 மாதி 8-ல் இருந்தால் தீபாந்திர வஸ்துக்களைக் கிரய விக்கிரயங்கள் செய்வதன் மூலம் தனம் சம்பாதிப்பர்.

மகம் 3-வது பாதத்தில் ஜன்ம காலத்தில் சந்திரனிருந்து செவ்வாய் 3-லும் குரு சுக்கிரர் லக்கினத்திலுமிருந்தால் 16, அல்லது 25 இந்த வயது முதல் சொர்ண வியாபார மூலம் ஜீவனம். உத்தியோகமும் பொக்கிஷ சாலையில் நேரிடும்.

## சிம்ம லக்கின ஜீவனம்

கிருத்திகை 2-வது பாதத்தில் சந்திரனிருந்து 9-மாதி உச்சத்திலும் சனி 9-லும் குரு 12-லு மிருந்தால் 30 வயது முதல் தனலாபமுண்டாகும், வியாபார ஜீவனம்.

ஹஸ்தம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 10 மாதி 4-லும் 1, 11 மாதிகள் 5-லும் இருந்தால் நீச்ச ராஜ்ஜியத்தில் உத்தியோக ஜீவனம்.

உத்திராடம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து, 10 மாதி 3-லும் ராகு 12-லும் இருந்து குரு 10-லுமிருந்தால் ஜாதகர் 4-வது தெசை முதல் பிரபலமாக நீச்ச அரசாங்கத்தில் பற்பல தேசங்களும் திரிந்து அலையும் உத்தியோக மடைந்து பிரபலமாக 53 வயதில் வேறு அரசாங்கத்தில் விசேஷ சுகபோகாதிகளடைவர். பின் வயதில் பற்பல வியாபாரமும் செய்து 10,000 பொன் ஆஸ்தியடைவர்.

பூராட நக்ஷத்திரத்தின் 4-வது பாதத்தில் சந்திரனிருந்து 6-ல் 5 மாதியும் லக்கினாதிபதி 4-லும் இருந்தால், 25 வயது முதலாக உத்தியோகமடைவர். 30, 35 முதல் பிரசித்தி யேற்படும். 40-க்குப் பிறகு 10,000 சம்பாதனை யேற்படும். 46 வயதின் பிறகு சில சமயம் யோக பங்க முண்டாகி உடனே யோகமுண்டாகிவிடும். இத்துடன் 9 மாதியாவது 1-மாதியாவது சுக்கிரனாவது 10-மாதியுடன் பெலத்து 5-ல் இருந்தாலும் நீச்சக் கிரகம் 6-ல் இருந்தாலும் நீச்ச பங்க தெசையில் பிரபல யோகமேற்படும்.

கிருத்திகை நக்ஷத்திர 3-வது பாதத்தில் சந்திரனிருந்து 1, 10 மாதிகள் 12-லும் 9 மாதி 4-லு மிருந்தால் ரிஷப ராகு தெசையில் பிரபல வியாபார யோகமுண்டாகி வெகு பொருள்களை நானா வழிகளிலும் தேடுவர். ஆதியில் பாலிய வயதில் தரித்திரம், 20, 25 முதல் பிரபல யோகம்.

கிருத்திகை நக்ஷத்திரம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து குரு துலாத்திலும் சுக்கிரன் 8-ல் உச்சத்திலுமிருந்தால் வியாபார விருத்தியும் 5000 தனலாபமு முடையவராவர்.

அசுவனி 2-வது பாதத்தில் சந்திரனிருந்து 10 மாதி 6-ல் 6, 9 மாதிகளுடனிருந்து 5-ல் ராகு விருந்தால் 2-வது திசை முதலாக ராஜாங்கத்தில் பயிர்த் தொழில் உத்தியோகத்தில் மாதம் 5000 சம்பாதனை யேற்படும். ஒவ்வொரு தெசையும் பிரபலமாகும்.

சதயம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து குரு உச்சத்திலும் சனி கும்பத்திலுமிருந்தால் குரு தெசையில் மந்திர சாஸ்திரங் கற்றுத் தெரிந்துகொள்ளலும் மத்தியில் மேற்படி குரு தெசையில் கஷ்டமும் ஆதியிலும் முடிவிலும் அற்ப சுகமும் சனி தெசை புத புத்தி முதல் பிரபலமும் வித்யா கோஷ்டியில்விசேஷ லாபமும் தைவ யோகங் காரணமாகத் தார வமிசத்தினுல் திடீரென்று தனலாபமும் உண்டாகும். புத தெசையும் பிரபலமாக நடக்கும்.

அசுவனி 2-வது பாதத்தில் சந்திரனிருந்து சுக்கிரன் 4-லும் செவ்வாய் உச்சத்தில் ராகு கேதுக்களில் ஒருவருடனும் கூடின் சூரிய தெசை முதலாக யோகம் நடக்கும். சங்கீதமும், ஆந்திர பாஷா கவித்துவமும் ராஜ சபையில் பிரசித்தி தரும்.

ரேவதி 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 1, 2, 10 மாதிகள் 8-லும் 9-மாதி 1-லு மிருந்தாலும் 10-ல் கேது இருந்தாலும் கடுர் தண்டனையிடும் உத்தியோக ஜீவனம்.

அனுஷம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 8-மாதி 11-லும் சனி 6-லும் 1-மாதி 4-லு மிருந்தால் தன் மூத்த சகோதரியின் புத்திரனும் உறவினரில் பிரபுவானவராலும் வியாபாரத்தில் பிரபலமடைந்து ஜீவனம்.

## கன்னியா லக்கின ஜீவன பலன்

ஹஸ்தம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து பூரம் 1-வது பாதத்திலுள்ள ரவியுடன் தசமாதிபதி கூடினும் 9 மாதி லக்னத்திலிருந்தாலும் அதாவது சுக்கிரன் சித்திரை 2-வது பாதத்திலிருந்தால் விசேஷ தனலாப முண்டாகும். இதற்கே ராகு 11, 3, 6 இந்த ஸ்தானங்களில் எங்காவதிருந்து சுபரால் பார்க்கப்பட்

டால் 50,000 தனம் நிதி மூலம் யாராவது ஒரு சித்த புருஷன் மூலமாக மேற்படி ராகு தெசையில் யத்தினமின்றி அநாயாசமாக அடைவர்.

அனுஷம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 9, 10 மாதிகள் 11-லிருந்தால் வியாபாரத்தில் வெளிதேச வஸ்திரம், சொர்ணம், ரத்தின மிவற்றைக் கிரய விக்கிரயம் செய்து விசேஷ தனம் தேடி ஜீவனம்.

ரேவதி 3-வது பாதத்தில் சந்திரனிருந்து 9-மாதியுடனும் கூடியிருந்து அவருடைய தெசையும் வந்தாலும் 10 மாதி 5-லும் 10-ல் சனியுமிருந்தாலும் நானுவித வெளிதேச வஸ்துவை விக்கிரயம் செய்வதாலும், விக்கிரயம் கொள்வதாலும், சொர்ண ரத்ன பரீக்ஷையாலும் விசேஷ திரவிய லாப மடைவார். மாதம் 1000த்திற் கதிகச் சம்பாதனை ஏற்படும்.

ரேவதி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து 9, 10 மாதிகள் லக்கினத்திலும் குரு 7-லு மிருந்தால் தார வமிசத்தில் போகமுண்டாகும். மாமனூர் மூலம் 25, 30 வயது முதல் விசேஷ உத்தியோக பாக்கியமுண்டாகும். ஆயுள்வரை சுக ஜீவனம்.

ரோகிணி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து 8 மாதி லக்கினத்திலும் 10 மாதி 12-லு மிருந்து சூரியனுடன் 10 மாதி கூடியிருந்தால் தூராலோசனையாலும். குருமேற்படி சந்திரனுடன் கூடியிருந்தால் குரு தெசையில் ராஜ மந்திரியாகி 5000 தனம் சம்பாதனை மாதமுமடைந்து க்ஷேத்திர கிராமாதிபதி யாவர்.

கும்பராசியில் சந்திரனும் திருவோணம் 4-வது பாதத்தில் குருவும் இருந்தாலும், லக்கினத்தில் புதனும் 7-ல் குஜனும் 4-ல் சனியுமிருந்தாலும் 20 வயதிற்கு மேல் ஒரு கிராமத்திற் கதிகாரியாகி ஜீவனம். மத்திய வயதில் வாகனுதி பாக்கியங்களுண்டாகும். மேற்படி குரு தெசையில் நீச்ச ராஜ்ஜியத்தில் 36 வயது முதல் வெகு கிராமங்களுக்கும், பிறகு சர்வாதிகாரத்திற்கும் அதிகாரமுண்டாகும்.

## துலா லக்கின ஜீவன பலன்

உத்திரட்டாதி 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 9 மாதியும் 11 மாதியும் கூடி மேற்படி சந்திரனுக் கேழில் இருந்தாலும் செவ்வாய் கடகத்திலிருந்தாலும் நீச்ச ராஜ்ஜியத்தில் முதலில் சில கிராமங்-

களுக் கதிகாரமும் கொஞ்ச காலமான பின்பு வெகு கிராமங்களுக் கதிகாரமும் ராஜ முத்ராதிகாரமு மடைந்து ஜீவனம். இதற்கே சுக்கிரன் 11-ல் இருந்து குருவால் பார்க்கப்பட்டால் வெகு யோக மானது மேற்படி திசையில் நடக்கும். 10,000 ஆயிரம் பொன் தேடுவார்

உத்திர நக்ஷத்திரத்தின் 4-வது பாதத்தில் கன்னியா ராசியில் சந்திரனிருந்து 1, 11-க்குடையவர்கள் 5-லும் ராகு கன்னியிலு மிருந்தால் மேற்படி தெசையில் பிரபல வியாபாரத்தில் ஜீவனம். விசேஷ தனமுண்டாகும். 3 லக்ஷம் தனம் சேர்க்கை செய்வர்.

புனர் பூசம் 1-வது பாதத்தில் மிதுன ராசியில் சந்திரனிருந்து 6-ல் செவ்வாயும் 7-ல் சனியுமிருந்தால் உத்தியோகத்தினுலும் பூமி யாலும் ஆயுள்வரை ராஜாங்கத்தில் ஜீவனம்.

## விருச்சிக லக்கின ஜீவன பலன்

மகர ராசியில் சந்திரனிருந்து 10 மாதி 10-ல் கேதுவுடனும் 8 மாதியுடனுமிருந்தாலும் மேஷத்தில் குருவும் ரேவதி 4-ல் சனியும் இருந்தாலும் 20, 25 வயது முதல் நீச்சப் பிரபுவிடத்தில் பத்திரிகா வாசகனுகி யிருந்து பிறகு 30 வயது முதல் 16 வருஷம் போகமாக ஜீவனம் நடக்கும்.

உத்திராடம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து சனி, புத, குரு, சுஜனிவர்கள் 11-ல் இருந்தால் 3-வது தெசை முதல் ராஜாங்கத் தில் பிரபல உத்தியோக ஜீவனம்.

அசுவனி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து தசமாதிபதி 4-லும் குரு 10-லும் செவ்வாய் மேஷத்திலு மிருந்தாலும் மேற்படி சூரிய னுடன் சுக்கிரபுதர் கூடியிருந்தாலும் சொர்ண ரத்ன பரீக்ஷையாலும் கிரய விக்கிரயங்கள் செய்வதாலும் விசேஷ தனலாபமுண்டாகி சுக ஜீவனம் நடக்கும்.

கிருத்திகை நக்ஷத்திர 4-வது பாதத்தில் சந்திரனிருந்து தச மாதிபதி ராகுவுடன் மிதுனத்திலிருந்தாலும் லக்கினதிபதி 11 மாதி பதி சனி இவர்கள் 11-ல் இருந்தாலும் நீச்ச ராஜாங்கத்தில் உத்தி யோக ஜீவனம். மேற்படி சூரியன் ராகுவுடன் கூடாமலிருந்தால் வியாபார ஜீவனம். வேறு சிலர் உத்தியோகம் வியாபார மிரண்டு மூலமும் ஜீவனமென்று சொல்லுகின்றனர்.

உத்திரட்டாதி 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 2-மாதிபதி உச்சத்தில் 11-மாதிபுடன் கூடியிருந்தாலும், 1, 7, 10 மாதி கூடி 10-ல் இருந்து கும்ப சனியால் பார்க்கப்பட்டாலும் சொர்ண ரத்ன பரீக்ஷை கிரய விக்கிரய மிவற்றால் விசேஷ பாக்கியலக்ஷ்மியை யடைவர்.

ஜன்ம நக்ஷத்திரம் அசுவனியாகி அதன் 1-வது பாதத்தில் 45 விநாடி செல்லாகி அதில் சந்திரனிருந்து லக்கினபதி 7-லும் தசமாதிபதி 5-லும் சுக்கிரன் ராகுவுடன் கூடி 4-லும் இருந்தால் விவாகமான பிறகு 2-வது தெசை பிற்பாதி முதலாக நானாவித வஸ்து வியாபாரத்தினால் மாதம் 3000 தனம் தேடுவதுடன் ஷை ராகுவை, 2-ல் உள்ள சனி பார்த்தால் ஷை ராகு தெசை பூராவும் பிரபல கீர்த்தியும் கப்பல் வியாபாரப் பிரபுவின் சிநேகமூலம் ஷை தெசை மத்தியில் 5000 தனலாபமும் ஒவ்வொரு மாதம் சம்பாதனை யேற்படும். மேற்படி தெசை முடிவில் கப்பல் வியாபார பிரபுவாகவே ஆவார்.

மகம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து சனி சுக்கிர் 11-லிருந்தாலும், குரு செவ்வாய் ராகு இவர்கள் 9-லிருந்தாலும் சந்திர சூரியர் 10-ல் இருந்தாலும், சொர்ண வியாபாரமும் வட்டிக்கு விட்டுப் பணத்தைக் கொடுக்கல் வாங்கல் செய்வதாலும், 20, 25, 30, 35 இந்த வயதுகளில் மேலும் மேலும் வஸ்திர வியாபார விருத்தியாலும் தனமுண்டாகிச் சுக ஜீவனம் செய்வர்.

பூரட்டாதி நக்ஷத்திரத்தில் கும்ப ராசியில் சந்திரனிருந்து 7-ல் குஜனும் 10-மாதி 4-ல் ராகுவுடனும் கூடியிருந்தால் ராஜாங்கத்தில் ஒற்றர் வேலையினால் அதாவது (ஸி. ஐ. டி.) ரகசியமறியும் உத்தியோகத்தில் பிறரை ஹிம்சை செய்தும் பயமுறுத்தியும், கடின தண்டனையிட்டும் இரகசியங்களை வெளியாக்கிச் சத்துரு காரியங்களைக் கெடுத்தும் ஜீவனம். பின் வயதில் இரகசிய உத்தியோகத்தில் தலைமை யேற்படும்.

சதயம் 3-வது பாதத்தில் சந்திரனிருந்து சுக்கிரன் சூரியன் குரு புதனிவர்கள் தனுசிலிருந்தால் ரத்னவியாபாரத்தினால் விசேஷ தனம் சேரும். ராஜாங்கத்தில் பொக்கிஷாதிகாரியாவர். ரத்தின

வியாபாரம் காரணமாக அஷ்டமாதிபதி தெசையில் திபார்திரம் செல்வார். இதற்கே கேது மேற்படி சந்திரனுடன் கூடி யிருத் தால் அந்தத் தெசையிலும் விசேஷ (சுக) பாக்கியங்களுண்டாகும்.

உத்திரட்டாதி 2-வது பாதத்தில் சந்திரனிருந்து 10-மாதி 11-லும் 10-ல் புதனு மிருந்தால் வியாபாரத்தினுல் ஜீவனம். 33-ல் வியாபாரத்தில் நஷ்ட முண்டாகிப் பின் 34, 37-ல் கடன் நிவாரணை யாகி 47-வயது முதல் விசேஷ வியாபார சுகமுண்டாகும்.

ரோகிணி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினுதிபதி 8-லும், சூரியன் 10-லும், சனி 4-லு மிருந்தாலும், லக்கினத்தில் குருவும் 12-ல் கேதுவுமிருந்தாலும் தேசந் தேசமாகச் சஞ்சரித்துப் பிரசங்கங்கள் செய்வதாலும் சிஷ்யர்களாலும், ராஜாங்கத்தினுலும் ஜீவனம். மேற்படி 5-வது தெசையில் எப்போதாவது ஒரு சமயம் சித்த புருஷன் மூலமாக 3000 பொன் நிதி லாப முண்டாகும்.

## தனுசு லக்கின ஜீவன பலன்

மேஷ ராசியில் சந்திரனிருந்து 10, 11 மாதிகளுடனும் கூடி யிருந்தாலும், 9-ல் செவ்வாயிருக்க 3-ல் சனி குரு கூடியிருந்து ஒரு வரை ஒருவர் பார்த்துக்கொண்டாலும் நீச்சப் பிரபுவினிடம் தன் சாகாதரியின் புத்திரன் மூலமாகச் சில கிராமங்களில் சஞ்சார உத்தி யோகம் அடைந்து பிறகுதானே வெகு கிராமாதிகாரியாகவு மாவார்.

அசுவனி நக்ஷத்திரத்தின் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து பஞ்சமாதிபதியான செவ்வாயும் மேற்படி சந்திரனுடன் கூடி யிருந் தால் மங்கள யோகம் காரணமாக 27 வயதிற்குப் பிறகு யோக மேற் படும். அரசாங்கத்தில் உத்தியோகத்தில் சுகமும் முப்பது வயதிற்கு மேல் வெகு கிராமாதிகாரமு மடைந்து 50-வது வயதில் 20-ஆயிரம் சம்பாதனை யேற்படும். மேற்படி சந்திரனுடன் தச மாதிபதியும் கூடின் விசேஷ யோகமேற்படும்.

ரிஷப ராசியில் சந்திரனிருந்து லக்னுதிபதி 7-லும் 9, 10 மாதி கள் லக்கினத்திலு மிருந்தால் 25 வயது முதல் உத்தியோகமும் 30 வயதிற்குப் பிறகு உத்தியோகப் பிரசித்தியும் ஏற்படும்.

பூசம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து 9, 10-மாதிகள் 7-லும், 1, 11-மாதிகள் 5-லு மிருந்தால் முத்து வியாபாரத்தினல் தேசா தேசங்கள் சென்று விசேஷ வியாபாரத்தினுலும் பிறகு ரத்னம் தானியம் வஸ்திரம் இவைகளாலும் நானு விதங்களாலும் நித்தியம் 600 அல்லது 1000 மல்லது 400 வரை கிரய விக்ரயங்கள் செய்து ஜீவனம்.

துலா ராசியில் சந்திரன் விசாகம் 2-வது பாதத்திலிருந்து குரு ரேவதி 4-வது பாதத்திலும் தசமாதிபதி பஞ்சமாதிபதியுடன் 3-லும் இருந்தால் சாஸ்திர அலங்கார நாடக காவியாதிகளால் ராஜாங்கத்தில் பிரபல ஜீவனம்.

சதயம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 9, 11 மாதிகள் லக்கினத்திலும் குரு 10-லு மிருந்தால் மீனத்தில் சனியிருந்து இவர்களைப் பார்த்தாலும், 2-ஆம் இடத்தில் தசமாதிபதியும் பஞ்சமாதியு மிருந்தாலும் எழுத்து உத்தியோகத்தில் ஜீவனம். 20 வயதிற்கு மேல் உத்தியோகமும் 25-ல் உத்தியோக ஹானியும் 26-ல் நீச்சப் பிரபுவால் உத்தியோகமும் 27-ல் பிரசித்தியும் 35-ல் உத்தியோக ஹானியும் 40 முதல் யோகமும் உண்டாகி ஆயுள்வரை ஜீவனம் க்ஷேமமாக நடக்கும்.

உத்திரட்டாதி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து 1-ல் சனியும், 1, 9, 10 மாதிகள் 7-லும் இருந்தால் 20-வயது முதல் எழுதுவதில் ஒரு கிராமாதிகாரமும் 30-வயது முதல் பிரபல உத்தியோக பாக்கியமும் ஜீவனம் ஆகும்.

மகம் 4-வது பாதத்தில் சந்திரனிருந்து 10-ல் 9, 10-க்குடையவர்கள் கூடினுலும், 11-ல் 2, 11-க்குடையவர்கள் கூடினுலும் 20-அல்லது 25-வயது முதல் சொர்ண வியாபாரத்தில் விசேஷ தனம் சம்பாதனை யேற்படும், 10,000 பொன் சேர்ப்பான்.

மூலம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து 9, 10-க் குடையவர்கள் 9-லும் குரு 5-லு மிருந்து 11-ல் சுக்கிரனிருந்தால் வெளிதேச வஸ்துவைக் கிரய விக்ரயம் செய்து ஜீவனம், வெகு பாக்கிய யோக முண்டாகும்.

## மகர லக்கின ஜீவன பலன்

மேஷ ராசியில் சந்திரனிருந்து, 9, 10, 11 மாதிகள் 11-லும் சனி 5-லு மிருந்தால் தேசாந்தரத்தில் தனம் சேர்ப்பர்.

உத்திராடம் 1-வது பாதத்தில் சந்திரனும் 2-வது பாதத்தில் சனியுமிருந்து 10-மாதி 5-லும் 11 மாதி லக்கினத்திலு மிருந்தால் ராஜாங்கத்திலெழுத்து உத்தியோக ஜீவனம்.

திருவாதிரை 2-வது பாதத்தில் சந்திரனிருந்து 9, 10-க் குடையவர்கள் லக்கினத்தில் இருந்தால் இவர் தன் தாயாதிகளுள் பிரசித்தனுகிச் சத்ரு ஜிதனுகி சொர்ண ரத்ன வியாபாரத்தினுல் பாக்கிய யோகமுண்டாகி ஜீவனம் செய்வர். இதற்கே லக்கினுதிபதி 12-ல் இருந்தால் அவர் திசையில் பிற்பாதி முதல் யோகத்தினுல் வியாபாரமும், மேற்படி 9, 10 மாதிகள் தெசையில் விசேஷ சம்பத்துமுண்டாகும்.

மகர ராசியில் திருவோணம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து சித்திரை 3-வது பாதத்தில் சுக்கிரனும், சனி உச்சத்திலும் இருந்தால் பயிர்த்தொழிலும் கிராம காரிய விசாரணை உத்தியோகமும் அடைவான். மாதம் 200 சம்பாதனை ஏற்படும்.

கடகராசியில் பூசம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினுதிபதி தசமத்தில் ரவி கேது இவர்களுடன் கூடினுலும் எதிர்கால ஸ்தானுதிபதியான சுக்ரன் லாபாதியுடன் கூடி 11-ல் இருந்தாலும் 4-ல் ராகு இருந்தால் ஜோதிடத்தினுலும், மந்திர சாஸ்திரத்தினுலும் க்ஷேத்திர பிரபுவாலும் ஜீவனம்.பயிர்த் தொழிலில் விசேஷ லாபமும் யோகமும் ஏற்படும்.

மிதுன ராசியில் திருவாதிரை 2-வது பாதத்தில் சந்திரனிருந்து தசமாதிபதியும் சந்திரனிருந்து 9-ல் சனியும் 3-ல் செவ்வாயுமிருந்து மேற்படி தசமாதியை இவர்கள் பார்த்தால் ராஜ சேவையால் ஜீவனமுண்டாகும்.

ரிஷப ராசியில் ரோகிணி நக்ஷத்திரத்தின் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 1, 9, 10 மாதிகள் லக்கினத்திலேயே யிருந்து செவ்வாய் 5-லு மிருந்தால் சொர்ண மணி ரத்ன பரீக்ஷைகளை 21 வயது முதல் சுதந்திரமாக நடத்தி 3 வாகனுதி பாக்கியமடைந்து 50 ஆயிரம் தனம் சம்பாதிப்பான்.

## கும்ப லக்கின ஜீவன பலன்

விருச்சிக ராசியில் கேட்டை 3-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினுதிபதி 8-லும் குரு 9-லும் செவ்வாய் 5-ல் புதன் வீட்டிலு

மிருந்தால் சாஸ்திர புராண சுருதி ஸ்மிருதிகளை அறிந்து தத்துவங் களைப் போதிப்பதாலும் பற்பல பிரபுக்களாலும் ஜீவனம், மேற்படி செவ்வாய் தெசையில் விசேஷ பிரபலமுண்டாகும்.

ரிஷப ராசியில் ஜன்மகாலத்தில் ரோகிணி 2-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினாதிபதி 12-லும், 10-மாதி 7-லுமிருந்து மேற் படி சனி உத்திராடம் 2-வது பாதத்திலு மிருந்தால் வெகு ஜனங் களால் கவுரவிக்கப்பட்டுச் சத்திர சாமர வைபவாதிகளுடனும் சது ரங்க பலமுடையவனாகவுமாகி ராஜயோக ஜீவனம். மேற்படி ராசி யில் சந்திரன் மிருகசீரிஷம் 2-வது பாதத்தில் இருந்தாலும் மேற்படி யோகத்தையே சொல்லுகின்றனர்.

தனுசு ராசியில் மூலம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து 10 மாதியான செவ்வாய் 3-லிருந்து லக்கினாதிபதி 11-ல் மேற்படி சந்திரனுடன் கூடியுமிருந்து லக்கினத்தில் அஷ்டமாதிபதி யிருந்தால் பாபச் செய்கை மூலமும், கடின தண்டனையாகத் தண்டிக்கும் உத்தி யோக மூலமும், வியாபார மூலமும் ஜீவனம். ஆயுள்வரை அப கீர்த்தியு முண்டாகும்.

மிதுன ராசியில் திருவாதிரை 3-வது பாதத்தில் சந்திரனிருந்து மேற்படி 3-வது பாதத்தில் 6 நாழிகை செல்லுமாகி ஜன்மகால தெசையில் நிலுவை 7 வருஷ மல்லது 7½ வருஷ மிருந்து லக்கினாதி பதி 11-ல் இருந்து மேறபடி சந்திரனுடன் செவ்வாயிருந்து லக்கி னத்தில் குருவுமிருந்தால் கடின தண்டனை யிடுவதாலும் துணிச்ச லான கிருத்தியங்களாலும் வியாபாரத்தினாலும் 20,000-த்திற்கு மேல் சம்பாதனை யேற்படும்.

மகர ராசியில் உத்திராடத்தின் 4-வது பாதத்தில் சந்திர னிருந்து 1, 10-மாதிகள் 3-லும் குரு 10-லு மிருந்தால் நியாய வழி யில் நானா வழிகளிலும் நானா தேசத்திலும் எழுத்து உத்தியோகத் தில் சஞ்சார ஜீவனம்.

சிம்மராசியில் பூரம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து சனி செவ்வா யிவர்கள் கூடி புதன் வீட்டில் இருந்தால் க்ஷுத்திரப் பிரபு விடம் எழுத்துமூல உத்தியோக ஜீவனம்.

மிதுன ராசியில் திருவாதிரை 3-வது பாதத்தில் சந்திரனிருந்து புதனுடன் கூடிய செவ்வாய் 7-ல் சிம்மத்திலும் சனி 5-ல் மிதுனத்

திலு மிருந்தால் எழுத்து மூலமான உத்தியோக ஜீவனம் அரசாங் கத்தி லுண்டாகும்.

மேற்படி மிதுன ராசியிலேயே மிருகசீரிஷ நக்ஷத்திரத்தின் 3-வது பாதத்தில் சந்திரனிருந்தால் மூன்றுவது தெசையில் பிரபல உத்தியோக சித்தி ஏற்படும்.

மேற்படி மிதுன ராசியிலேயே திருவாதிரை 4-வது பாதத்தில் சந்திரனிருந்து தசமாதிபதி உச்சத்திலும் லக்கினதிபதி லாபத்திலு மிருந்தால் குருவாலிவர்கள் பார்க்கப்பட்டாலும் குருவுடன் கூடி யிருந்தாலும் உத்தியோக ஜீவனம்.

கும்ப ராசியில் பூரட்டாதி 3-வது பாதத்தில் சந்திரனிருந்து சனி 9-லும் 10 மாதிபதியான செவ்வாய் சூரியனுடன் கூடி மேஷத் திலு மிருந்தால் அரசாங்கத்தில் 18 அல்லது 20 வயது முதல் உத்தி யோகமும் நல்ல புகழுமடைந்து முதலில் சில அல்லது ஒரு கிரா மாதிகாரமும் 30-க்கு மேல் பிரசித்தியும் 35, 40, 50 இந்த வயது களில் தினந்தினம் பிரசித்த விருத்தியும் பிரபலமுமடைவார்.

கன்னியா ராசியில் ஹஸ்தம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து தசமாதிபதி சுய க்ஷேத்திரத்திலும் சனி 11-லு மிருந்து குரு ராகு இவர்கள் லக்கினத்திலு மிருந்தால் வியாபார விருத்தியினுலும், கூடப் பூமி விசாரணையாலும் ஜீவனமுண்டாகும்.

கன்னியா ராசியிலேயே சித்திரை 1-வது பாதத்தில் சந்திர னிருந்து செவ்வாய் மீனத்திலும் குரு விருச்சிகத்திலு மிருந்து சனி மேஷத்தில் சுக்கிரனுடன் கூடியிருந்தால் புரோகித ஜீவனம். பூமி யாலும் சுகம். இஷ்டமான காரியங்களைச் செய்தலாலும் சுகம் தரும்.

கடக ராசியில் சந்திரன் புனர்பூசம் 4-வது பாதத்தில் இருந்து சனி கும்பத்தில் லக்கினத்திலும், செவ்வாய் மேஷத்தில் புதனுடன் கூடியுமிருந்தால் சில காலம் எழுத்து உத்தியோக ஜீவனமும் பிறகு வியாபார ஜீவனமு முண்டாகும்.

சிம்ம ராசியில் மகம் 4-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கி னுதிபதியான சனி 6-லும், செவ்வாய், புத, சுக்கிர, குரு, ராகு இவர்களுடன் கூடி 10-லும் இருந்தால், வேதம், மந்திரம், ஜோதி டம் இவைகளில் நல்ல புத்திமானுகிச் சுக ஜீவனம். பிரபுக்களிட

மும் அரசர்களிடமும் மதிப்புண்டாகும். ராஜயோகமு முண்டாகும்.

மேஷ ராசியில் அசுவனி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினாதிபதி 11-லும் செவ்வாய் லக்கினத்திற்கு 2-ஆம் இடமான மீனத்திலும் இருந்தால் ராஜ வசியத்தினால் உத்தியோக ஜீவனம், பிரபல உத்தியோக ஜீவனமும் ஆகும்.

ஹஸ்தம் 2-வது பாதத்தில் சந்திரன் கன்னியா ராசியிலிருந்து தசமாதிபதி துலாத்திலும் சனி 5-ல் மிதுனத்திலு மிருந்தால் வியாபாரத்தினால் 50 ஆயிரம் தனமடைவான்.

## மீன லக்கின ஜீவன பலன்

மீன ராசியில் உத்திரட்டாதி 1-வது பாதத்தில் சந்திரனிருந்து 10 மாதி 7-லிருந்தால் வியாபாரத்தினால் ஜீவனம்.

மீன ராசியில் பூரட்டாதி 4-வது பாதத்தில் சந்திரனிருந்து லக்கினாதிபதியான குரு 2-லும் 9-மாதி 11-ல் சனியுடனிருந்தாலும், அல்லது புத சுக்கிரர் கன்னியி லிருந்தாலும், வியாபாரத்தினாலும், எழுதுவதினாலும், யுக்தியாய்ப் பிரசங்கங்கள் செய்வதாலும் ஜீவனம்.

தனுசு ராசியில் மூலம் 4-வது பாதத்தில் சந்திரனிருந்து குரு கும்பத்தில் ராகுவுடனிருந்து 10 மிடத்தில் சனி புதனிருந்தால் வியாபார ஜீவனம்.

கடக ராசியில் பூச நக்ஷத்திரத்தில் சந்திரனிருந்து குரு ரேவதி 4-வது மாதத்திலிருந்தாலும், தனுசில் சூரிய புதரிருந்தாலும் உத்தியோக ஜீவனம். 2-வதான தெசை புத தெசையாகி மேற்படி புத தெசை வந்தால் சில காலம் தேவாலய திரவியத்தினால் ஜீவனம் ஏற்படும்.

கும்ப ராசியில் அவிட்டம் 4-வது பாதத்தில் சந்திரனிருந்து குரு மேஷத்திலும் சனி சுக்கிரர் மகரத்திலுமிருந்தால் கிருத்திய அகிருத்தியங்களை யறிந்து விவேகத்துடன் வியாபாரம் செய்து சர்வதா தனலாப முடையவனாகி சுக ஜீவனம் ஏற்படும்.

சிம்ம ராசியில் மகம் 1-வது பாதத்தில் சந்திரனிருந்து குரு மீனத்தில் லக்கினத்திலும், தசமத்தில் சூரியனும் இருந்தாலும், சனி

9-லும் செவ்வாய் 11-லு மிருந்தாலும் சோதிடத்தாலும் உத்தி யோகத்தினலும் ஜீவனம்.

மகா ராசியில் உத்திராடம் 2-வது பாதத்தில் சந்திரனிருந்து குரு தசமத்தில் தனுசிலும் இருந்தால் படிப்படியாகப் பிரபல உத்தி யோக சித்தி ஏற்படும்.

மீன ராசியில் உத்திரட்டாதியின் 3-வது பாதத்தில் சந்திர னிருந்து குரு மிதுனத்திலுமிருந்தால் 25 வயது முதல் உத்தியோக ஜீவனம்.

மீன ராசியில் உததிரட்டாதியில் சந்திரனிருந்து குரு புத சுக்கிரர் கன்னியிலிருந்து ஜன்ம லக்கினம் மிதுனமானல் 10-ல் செவ்வாயும் இருந்தால் பிரசங்கம் செய்தல் பிரபல உத்தியோக மிவற்ருல் ஜீவனம்.

சூரியன் 2-ஆம் இடத்திலிருந்து (ராகு கேதுவுடனல்லது 2-ல்) சனியுடனிருந்தால் கஷ்டத்தால் ஜீவனம். 2-ஆம் இடத்தில் புத னிருந்து குரு 8, 6, 10 இவ்விடங்களில் எங்கிருந்து மேற்படி புதனைப் பார்த்தாலும் முன் தனமிருந்தால் அழித்துவிடுவான்.

நான்கு கேந்திரங்களிலும் 4 கிரகங்கள் சுய க்ஷேத்திர கேந் திரங்களில் இருந்தாலும் கேந்திரங்களில் 3-அல்லது நான்கு கிரகங் கள் உச்சங்களிலிருந்தாலும் ராஜ வமிசத்தில் பிறந்தவர்கள் ராஜ பதவி யடைவார்கள். அல்லாத மற்ற வமிசத்திற் ஜனித்தவர்கள் ராஜ சமதன மடைவார்கள். இந்தக் கிரக அமைப்புச் சரலக்கினங் களாகிய, மேஷம், கடகம், துலாம், மகர மிவைகளுக்கு மட்டும் தான் சேரும்.

நாலாமிடத்தில் சனியிருந்தால் மாயத்தினலும், சூதினலும், கபடத்தினலும், புதனிருந்தால் உபாயத்தினலும், குருமதி யிருந் தால் சாஸ்திர ஆராய்ச்சியாலும், மேற்படி 4-ல் குரு ரவி இருந்தால் நீதி மார்க்கத்தினலும், குரு சனி கூடினலும் பார்த்தாலும் பஞ்சு, எள்ளு இவற்றின் மூலமும், குரு சுக்கிரர் கூடினல் ராஜ ஸ்திரீயா லும், அரசனுக் கிடமான ஸ்திரீயாலும் தனமடைந்து ஜீவனம். மதி என்று சந்திரனுக்கும் ரவி என்று சூரியனுக்கும் பெயராகும்.

கிரகமாலிகா யோக மேற்பட்டால் 35 வயதிற்குப் பிறகு சம் பாத்தியமும் சம்பத்துமுண்டாகும். சுபம்.

ஜீவனபாவம் முற்றிற்று.

# ஆயுர்த்தாயம்

அல்லது

# அஷ்டமபாவம்

---

## பாலாரிஷ்டம்

லக்கினத்திற்கு அஷ்டமாதிபதி லக்கினதிபதி இவர்கள் பாபர்களுடன் கூடியிருந்தாலும் அல்லது பார்க்கப்பட்டாலும், நீச்ச, மூட, அஸ்தங்கத் தோஷமடைந்து பாப க்ஷேத்திரத்தில் ராகு கேதுக்களுடன் கூடியிருந்தாலும் இவர்களுக்குச் சுபர் திருஷ்டியில்லாதிருந்தாலும் ஆயுள் குறையும் அல்லது ஆயுளில்லாமல் போய்விடும்.

ஜன்ம காலத்தில் லக்கினத்தில் குரூரக் கிரகமிருந்து லக்கினதிபதியும் குரூரருடன் கூடினலும் சந்திரன் பாபருடன் கூடி பாப க்ஷேத்திரத்தில் இருந்து சுபர் பார்வையை அடையாதிருந்தாலும், அஷ்டமாதிபதியும் பாபர் சம்பந்தமடைந்து சுப திருஷ்டியடையாதிருந்தாலும், லக்கினத்திற் கிருபுறமும், லக்கினத்திற் கேழாமிடத்திற் கிருபுறமும் பாபரிருந்தாலும் ராசி சந்திகளில் பிறந்தாலும் ஆயுள் குறைந்துவிடும், அல்லது சீக்கிர மரண முண்டாகும்.

தேய்பிறைச் சந்திரன் எட்டிலும் ஏழில் செவ்வாயும் இருந்து, லக்கினதிபதி பலஹீனனுகி இரண்டாம் அம்சத்திலிருந்து பூசம் பூராட மிவற்றில் பிறந்தாலும்,

தேய்பிறைச் சந்திரன் விருச்சிகத்திலிருக்க 7-ல் சனியிருந்து கடகம், மகரம், மீனம், இவைகளில் எதிலாவதொன்றில் ஜனனமாகி இருந்தாலும்,

க்ஷீணச் சந்திரன் ஆறில் அல்லது எட்டில் அல்லது பன்னிரண்டில் இருந்து திரிகோணங்களில் குரு ரவி கூடியிருந்தாலும் க்ஷீணசந்திரன் 1-4-7-10-ல் இருக்க சுபர் கூடாதிருந்தாலும் இதற்கே 8-ல் பாவரிருந்தாலும் 2-நாள் ஆயுளே உண்டாகும்.

ஜன்ம லக்கினத்திற் கெட்டில் சுபரிருந்து சூரியசந்திர ரிருவரும் ஜன்ம நக்ஷத்திரத்திற்கு 3-வது நக்ஷத்திரத்தில் இருந்து இவருடன் கேது கூடினல் பிறந்த 3 நாளிலும்,

ஜன்ம லக்கினத்திற்கு 3-ல் சூரியசந்திர ரிருந்து செவ்வாய் கடகாம்ச மடைந்தால் பிறந்த 4-நாளிலும் மரணமுண்டாகும்.

ஜன்ம லக்கினத்திற்கு 4-ல் சூரியனும் திரிகோணத்தில் பாவருடன் கூடி சந்திரனும் இருக்கில் ஐந்து நாள் ஆயுளும்,

ஜன்ம லக்கினம் எதுவானாலும் லக்கினத்தில் செவ்வாய் சூரியனிவர்களிருந்து இவர்களுக் கேழில் சந்திரனுமிருந்து மேற்படி லக்கினாதிபதி மூடமானால் 6 நாள் ஆயுளும்,

ஜன்ம லக்கினத்திற்குக் கேந்திரங்களில் சூரியன், சனி, செவ்வா யிவர்களிருந்தால் 10 நாள் அல்லது 10மீ அல்லது 10 வருஷம் ஆயுளும் உண்டாகும்.

ஜன்ம லக்கினத்திற்கு 5-7-12 இவ்விடங்களில் சூரியன், சந்திரன், சனி இவர்கள் இருந்தால் பிறந்த ஜாதகன், தன் தகப்பன் தாய், இவர்களையும் நாசம்செய்து தானும் நாசமாவான்.

ஜன்ம லக்கினத்திற்கு 6-8-12-ல் சந்திரனிருந்து குரூரக் கிரகங்களால் பார்க்கப்பட்டும் இருந்தால் ஸத்தியோரிஷ்டம் நேரிடும். மேற்படி சந்திரன் சுபர்களால் பார்க்கப்பட்டிருந்தால் 8-வருஷம் வரை ஆயுளுடனிருப்பார்கள். வக்கிரமடைந்த சுபர்கள், குரூரர்களால் பார்க்கப்பட்டிருந்தாலும் இதற்கே லக்கினத்தில் ஒரு சுபருமில்லா திருந்தாலும் பிறந்த சிசு ஒரு மாதம் வரை உயிருடனிருக்கும்.

ஜன்ம லக்கினத்திற்கு ஐந்தில் சூரியன், சனி, சந்திரன், செவ்வாய் இவர்கள் இருந்தால் அந்த ஜாதகனுடைய தாயும் சகோதரரும் சீக்கிரமே மரணமடைவர்.

ஜன்ம லக்கினத்தில் செவ்வா யிருந்து பாபரால் பார்க்கப்பட்டு இருந்தாலும் அப்போது அஷ்டமத்தில் பாபரிருந்தாலும் லக்கினத்திற் கிரண்டில் பாபரிருந்தாலும்,

ஜன்ம லக்கினத்தில் செவ்வாயிருந்து 7-ஆம் இடத்தில் சனியிருந்தாலும் அல்லது ஜன்ம லக்கினத்தில் சனியும் சப்தமத்தில் செவ்வாயு மிருந்தாலும், 2, 8-ஆம் இடங்களில் பாபரிருந்தாலும்,

சந்திர சூரியருடைய ராசிகள் இவ்வாறாகிச் சந்திர சூரியரின் கூட ராகு கூடியிருந்தாலும் சனி செவ்வாயிவர்களால் லக்கினம்

பார்க்கப்பட்டாலும் அப்போது பிறக்கும் சிசு ஒரு பக்ஷம் தான் உயிருடனிருக்கும்.

ஜன்ம லக்கினத்திற்குப் பத்தில் சனியும், ஆறில் சந்திரனும், செவ்வாய் 7-லும் இருந்தால் ஜனித்த சிசு தாயாருடன்கூட மரிக்கும்.

ஜன்ம லக்கினத்தில் சனியும், 8-ல் சந்திரனும் 3-ல் குருவு மிருந்தால் சிசு சீக்கிரமே மரித்துவிடும்.

ஜன்ம லக்கினத்திற்கு 9-ல் சூரியனும், 7-ல் சனியும், 11-ல் குரு சுக்கிரரும் இருந்து, சூரிய ஓரையிலும் ஜனித்தால் சிசு ஓரே மாதம் தான் உயிருடனிருக்கும்.

ஜன்ம லக்கினத்திற்குப் பன்னிரண்டில் (எல்லா கிரகங்களும் இருந்தாலும்,) சூரியன் சுக்கிரன் சந்திரன் ராகு இவர்களிருந்தா லும், வெகுவாக சிசு நாசத்தை யடையும். இவர்கள் பார்த்தாலு மிப்படியே யாகும்.

பாபருடன் கூடிய சந்திரன் ஜன்ம லக்கினத்திலாவது,லக்கினத் திற்கேழா மிடத்திலாவது, ஒன்பதாமிடத்திலாவ திருந்து சுபரால் மேற்படி சந்திரன் பார்க்கப்படாம லிருந்தால் சிசுவுக்கு மாண முண்டாகும்.

சந்தியா காலத்தில் அதாவது சூரியன் உதயமாகி பாதி மண் டலம் தெரிய ஆரம்பிப்பதற்கு முந்தி 3 நாழிகையும், அஸ்தமன காலத்தில் சூரியன் பாதி மறைய ஆரம்பிப்பதிலிருந்து 3 நாழிகை யும் ஆகிய சந்தியா காலத்தில் சந்திர ஓரையிலும், கண்டாந்தத்தி லும், பிறந்தால் மரணமுண்டாகும், மேலும் அப்போது சந்திரனும் பாபருடன் கூடி கேந்திரங்களி லிருந்தால் வெகு சீக்கிரமாகவே மரணமுண்டாகும்.

சக்கிர பூர்வ, அபரார்த்தங்களென்கிற ராசி சக்கிரங்களில் குரூரர்கள் இருந்தாலும்,

கடக விருச்சிகங்கள் லக்கினங்களாகி சுபர்கள் குரூரர்களுடன் கூட மேற்படி லக்கினத்திலிருந்தாலும், மரணமே யுண்டாகும்.

ஜன்ம லக்கினத்திற்கு 6—12 ஆம் இடங்களில் பாபரிருந்தா லும் 8-ஆம் இடம், 2-ஆம் இடம் இவ் விடங்களிலிருந்தாலும் லக் கினம் இரண்டு பாபர்கள் மத்தியிலிருந்தாலும் பாலாரிஷ்டத்தினல் மாண முண்டாகும்.

லக்கினம், சப்தமம், சந்திரன், இவைகள் பாபருடன் கூடினு லும் சுபர்களால் பார்க்கப்படா திருந்தாலும் சீக்கிரமாகவே மரண முண்டாகும்.

க்ஷீணசந்திரன் ஜன்ம லக்கினத்திலும் பாபர்கள் கேந்திர (அஷ்டம்)ங்களிலு மிருந்தாலும் அந்த ஜாதகன் சீக்கிரமாகவே மரணத்தை யடைவான்.

சந்திரர் பாபர்களுடன் கூடி யல்லது பாபர் மத்தியிலிருந்து லக்கினத்தினின்றும் எட்டு, ஏழு பன்னிரண்டு இந்த ஸ்தானங் களில் இருந்தாலும் லக்கினத்திலேயே பாபருடன் பாபர் மத்தியி லிருந்தாலும் வெகு சீக்கிரமாகவே மரணமுண்டாகும்.

ஜன்ம லக்கினத்திற் கிருபுறமும் பாபர்களிலிருந்து சந்திரனும் (மேற்படி) பாபர் மத்தியில் இருந்தாலும் ஏழு எட்டு இந்த ஸ்தா னங்கள் பாபருடன் கூடினாலும் பிறந்த பிள்ளை தாயுடன் கூட மரிக்கும்.

ஜன்ம லக்கினத்தினின்றும் (8, 9, 12 இந்த ஸ்தானங்களில்) செவ்வாய், சூரியன், சனி இவர்களிருந்து சுபர்களாலும் பார்க்கப் படாதிருந்தால், ஜாதகன் நிச்சயம் சீக்கிரமாக மரண மடைவான்.

குரூரக் கிரகங்கள் எந்தத் திரேக்காணத்தி லிருந்தாலும் எந்த லக்கினமானாலும் க்ஷீணசந்திரன் அந்த லக்கினத்திலிருந்தால் ஜீவித் திருப்பவன் கூட சத்யோரிஷ்ட மடைவான்.

ஜன்ம லக்கினத்திலிருந்து 3-6-9-12 ஆகிய ஸ்தானங்கள் அபோக்லீமங்க ளென்னப்படும் பெயருடையது. இவைகளில் எல் லாக் கிரகங்களுமிருந்து மேற்படி கிரகங்கள் பலமற்றவர்களா யிருந்தால் 2 மாத மல்லது 6 மாதம் தான் சிசு ஜீவித்திருக்கும்.

ஜன்ம லக்கினத்திற்கு 8 மாதி 12 மாதியுடன் கூடி 3 லேயே யிருந்து ராகுவின் பார்வையை யடைந்திருந்தால் ஜனித்த 7-வது மாதத்தில் மரணமுண்டாகும்.

ஜன்ம லக்கினத்திற்கு 4-ல் மாதிபதி பாபருடன் கூடி யிருந்தா லும் சுபருடன் கூடாமலிருந்தால் ஜனனமான 7 நாளிலேயே மரண முண்டாகும்.

ஜன்ம லக்கினத்திற்கு 7-மாதிபதி 12-ல் 9-மாதிபதியுடன் கூடி யிருந்தாலும் ராஜ்ஜியாதிபதியால் பார்க்கப்பட்டால் பிறந்த ஓரே இரவில் மரண முண்டாகும்.

ஷஷ்டாஷ்டமங்களில் சுபர் இருந்து ஷெ ஸ்தானங்களில் ஒன்று சூரியனுடைய ஸ்தானமாகி சந்திரனால் பார்க்கப்பட்டிருந் தால் மரணமே யுண்டாகும். இத்துடன் உதய லக்கினத்தில் கேது இருந்தால் பிறந்த இரண்டாவது மாதத்தில் உயிர் பிரியும்.

ஜன்ம லக்கினத்தில் சனி யிருந்து மேற்படி சனி பாபருடனும் கூடியிருந்தால் ஜனித்த பதினாறுவது வருஷத்தில் மரணம் நேரிடும். இவர்களைப் பாபர்களே பார்த்தால் ஓரே வருஷத்தில் மரண முண் டாகும்.

6-8-ஆம் இடங்களில் சந்திரனிருந்து பாபரால் பார்க்கப்பட் டால் சத்தியோ மரணமும் சுபர்களால் பார்க்கப்பட்டால் ஆயுள் எட்டு வருஷமும், சுபர் பாப ரிவ்விருவர்களாலும் பார்க்கப்பட்டால் ஆயுள் நான்கு வருஷமும் ஏற்படும்.

ஜன்ம லக்கினத்திற்கு மூன்றுமிடத்தில் சந்திர சூரியரிருந்து, அந்த ஸ்தானம் மீனமுமாகின் வியாதி யேற்பட்டுப் பிறந்த மூன் றும் நாளிலேயே மரணமுண்டாகும்.

சந்திரன் சூரியனுடன் கூடி 5-9-ஆம் இடங்களி லிருந்துவிடின் இருபது நாளுக்குமேல் சிசு ஜீவித்திராது.

சூரியன் பாப ஹோரையிலிருந்து குருவும் கேந்திரங்களில் இல்லாவிடில் லக்கினத்தில் மற்றவர்களில் எவரிருந்தாலும் பிறக்கும் சிசு மரணத்தை யடையும்.

வெகு கிரகங்கள் கூடி எட்டா மிடத்தின் சந்தியி லிருக்கும் போது எந்த ஜாதகன் பிறந்தாலும், ராசி சந்தியில் ஜனித்தவனுக்கு வெகு கிரகங்கள் எட்டா மிடத்திலிருந்தாலும், அந்த ஜாதகன் பிறந்து ஒரு மாதம் அல்லது ஒருவாரம் வரைதான் ஜீவித்திருப் பான்.

செவ்வாய் சத்துரு ஓரையில் இருந்து அவருடைய கேந்திரத் தில் சுக்கிரனிருந்தால் மறுபடியும் மேற்படி ஓரையில் செவ்வாய் சந்திரனிவர்கள் வரும்போது மேற்படி ஜாதகர்கள் மரணத்தை யடைவார்கள்.

ஜன்ம லக்கின ஓாதிபதி எட்டா மிடத்திலிருந்து எல்லாப் பாபக் கிரகங்களாலும் பார்க்கப்பட்டால் ஜாதகன் ஜனித்த நான் காவது மாதத்தில் சந்தேகமின்றி மரிப்பான்.

ஜென்ம லக்கினுதிபதியும் ராகுவும் கூடியிருந்தாலும் லக்கினத்திற்கு ஆறு எட்டாமிடங்களில் சந்திரனிருந்தால் ஜாதகன் பிறந்து இருபது தினங்களே ஜீவித்திருப்பான்.

ஜென்ம லக்கினத்திற்கு நான்காமிடத்தில் ராகு இருந்து சந்திரன் கேந்திரத்திலிருந்தால் ஜாதகன் பிறந்து இருபது நாட்களே ஜீவித்திருப்பான்.

## நக்ஷத்திர கண்டங்கள்

மூல நக்ஷத்திரத்தில் ஜாதகன் பிறந்தால் அரிஷ்டயோகமென்றும் எட்டு வருஷம் சென்ற பிறகுதான் தகப்பன் புத்திரனைக் காண வேண்டுமென்றும் அப்படிக்கின்றிக்கண்டால் தகப்பனுக்கு மாண முண்டாகுமென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆயினும் இப்படிச் சொன்ன தூஷணம் பலமாய் விட்டபடியால் இது ஏற்கத்தக்கதல்லவென்றும் ஆதலால் சில வேறு மகரிஷிகள் மேற்படி நக்ஷத்திரத்தின் நான்கு பாதங்களுக்கும், வெவ்வேருகப்பாகம் செய்தும் வேறு பலனை ஒவ்வோர் பாதத்திற்கு முபதேசிக்கின்றனர்.

அதாவது மூல நக்ஷத்திரத்தின் முதலாவதுபாதத்தில் ஜனனம் நேர்ந்தால் தகப்பனுக்கும் இரண்டாவது பாதத்தில் ஜனனம் நேர்ந்தால் தாய்க்கும் மூன்ருவது பாதத்தில் ஜனனம் நேர்ந்தால் ஜாதகன் ராஜபூஜிதனுகவும் சுகியாகவும் ஆவான். மூலத்தின் மூன்று பாதங்களில் ஜனித்தவனுக்கு நோயுமுண்டாகும்.

ஜன்ம லக்கினம் தனுசும் பூராடநக்ஷத்திரமும் ஆகி ஜனித்தாலும்,

ஜன்ம லக்கினம் கடகம் ஆகிப் பூசநக்ஷத்திரமும் கூடியபோது ஜனித்தாலும் தகப்பன் தாய் குழந்தை இவர்களுக்கு நாசமும் அல்லது அம்மானுக்கு நாசமும் நேரிடும். இவைகளில் அந்தியமும் ஆதியும் சுபமே செய்யும். இவைகளில் மேஷாம்சமும் நேரிட்டால் தாய் புத்திரனிவர்களுக்குத் தப்பாமல் நாசமு முண்டுபண்ணும்.

உத்திரம் 1-வது பாதத்திலும், ஹஸ்தத்தின் 2-வது பாதத்திலும், ஆயில்யத்தின் மூன்றும் பாதத்திலும். பரணியின் நான்காம் பாதத்திலும் சிசு ஜனித்தால் தாய் தகப்பனிவர்களுக்கு நாசமும், உத்திரத்திலும் பூசத்திலும் பிறந்தால் உத்திரத்திற்கு 2 மாதம் வரையில் தோஷமும், பூச நக்ஷத்திற்கு மூன்று மாதம் வரையில் தோஷமும், பூராடத்திற்கு எட்டு மாதமும் சித்திரைக்கு ஆறு மாதமும் ஆயில்யத்திற்கு ஒன்பது மாத தோஷமும் மூலத்திற்கு எட்டு வருஷமும் கேட்டை நக்ஷத்திரத்தில் குழந்தை ஜனித்தால்பதினைந்து நாள்களும் தோஷத்தினுல் தகப்பன் புத்திர தரிசனத்தைச் செய்யக் கூடாதென்றும் சொல்லப்பட்டுள்ளது.

மேலும் ஜேஷ்டா நக்ஷத்திர சாந்தியில், ராசிசந்தி யென்றும் சிசு கண்டமென்றும் கேட்டை நக்ஷத்திரத்தின் 1, 2, 3 பாதம் வரையில் மூத்த புத்திரனுக ஜனித்தவன் விஷயத்தில் பிதரு தோஷமும் கேட்டை நக்ஷத்திரத்தின் நான்காவது பாதத்தின் கடைசி இரண்டு நாழிகையில் அபுக்த மூலம் என்று சொல்லப்பட்ட காலத்தில் ஜனித்தால் பிறந்த (ஜாதகனுடைய தகப்பன்) 10 தினங்களுக்குள் மரண மடைவானென்றும், மேற் சொன்ன மூன்று பாதங்களில் ஸ்திரீ சிசு ஜனித்தால் மூத்த சகோதர நாசத்தைச் செய்யுமென்றும், மேலும் மேற்படி மூன்று பாதங்களிலும் வைதிருதி, விதிபாதம், வியாகாதம், கண்ட தோஷம், சந்திராஷ்டமம், விஷ்கம்பம் இவைகளும் கூடியபோது ஜனித்தால் மேற்சொன்ன காரணங்களால் மேற்படி காலங்கள் குழந்தையின் தொனியைக் கூடத் தகப்பன் கேட்கக் கூடாதென்றும், சிசுவின் முகத்தைப் பார்க்கக் கூடா தென்றும் சொல்லப்பட்டிருக்கிறதுடன், மேலும் *சிசுவையே தியாஜ்யம் செய்யவேண்டு மென்றும் ஜேஷடா நக்ஷத்திரத்தின் முதல் பாதத்தில் ஜனித்தால் முதலில் பிறந்தவருக்கும் இரண்டாம் பாதத்தில் உடன் பிறப்புக்கும் மூன்றும் பாதத்தில் தனத்திற்கும், நான்காம் பாதத்தில் தனக்கேயும் நாசத்தை உண்டாக்கும். மேலும் கேட்டையின் கடைசிப் பாதத்தில் ஜனித்த சிசு ஸ்திரீயாயினும் தன் மூத்தவனைக் கொல்லும் என்றும், சகோதரி

* சிசுவையே தியாச்சியம் செய்வது இயலாதாகையால் சிசுவைப் பார்க்கக் கூடாதென்றுதான் கொள்ளவேண்டும்; அதுதானிதன் பொருள்.

யைக் கொல்லலாகா தென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் கேட்டை நக்ஷத்திரத்தின் (மொத்த) ஆதியந்த நாழிகையை 10 பங்காகப்பிரித்துப் பலன் சொல்லப்பட்டிருக்கிறது. அதில் அடியில் கண்டபடி பலன்கள் நேரிடும். அவையாவன:—பங்கு 1 ஆவதில் ஜனனத் தாயின் தாயும், 2-வதில் மேற்படி ஜனனத் தாயினுடைய தகப்பனும், 3-ல் தாயின் சகோதரமும், ஜனித்த குழந்தையின் தாய் 4-லும், 5-ல் (சிலர் இந்த 5-வது பாகத்தில் பிறந்தவனுக்குப் புத்திர நாச மேற்படும் என்று சொல்லுகின்றனர்.) தானும், 6-ல் கோத்திர நாசமும், 7-ல் உபயகுலங்களும், 8-ல் மூத்த சதோதரனும், 9-ல் மாமனரும், 10-ல் சகல நாசமும் நேரிடும். மேலும் சூரியனுடைய அம்சத்தில் தகப்பனுக்கும், சந்திரனுடைய அம்சத்தில் தாய்க்கும், செவ்வாயின் அம்சத்தில் சகோதரனுக்கும், புதனம்சத்தில் அம்மானுக்கும், சனியினம்சத்தில் விஷத்தினுலும் மரணம் நேரிடும் மேலும் சதுர்த்தசியும் தினமிருத்துவும் ஆனுல் எப்போதும் ரோகமும் நேரிடும். அன்றி;

ஆயில்யம், ரேவதி, கேட்டை, மூலம், பூராடம், மகம் இவைகளில் இரண்டிரண்டு நாழிகைகள் கண்டாந்த மென்றும், ஆயில்யம் கேட்டை, ரேவதி இவற்றின் கடைசியிலும் அசுவனி, மகம், மூலம் இவற்றின் முதலிலும் இரண்டு இரண்டு நாழிகைகள் கண்டாந்த மென்றும், திதிகளில் பஞ்சமி, தசமி, பதினைந்தாவது திதி, இவைகளின் கடைசியில் 2-2 நாழிகைகளும் திதி கண்டாந்த மென்றும், ராசிகளில் மேஷம், தனுசு, கடகம், விருச்சிகம், மீனம், மகரம் இவைகளின் நவாம்சங்களின் அந்தியமத்திலும் ஆதியிலும் ராசிகண்டங்களென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இவர்களில் முறையே மாதா-பிதா-புத்திரன்-சகோதரன் இவர்களை நக்ஷத்திர கண்டமும், ராசி கண்டம் ஒரு குலத்தையும், திதி கண்டம் தகப்பனையும் கண்டம் செய்யும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. வேறு சிலர் மேற்படி கண்டாந்த தோஷங்களானது சர்வ நாசங்களையுமே செய்யும் என்று சொல்லியிருக்கின்றன.

மேலும் மூல நக்ஷத்திரத்தின் ஆதியந்த நாழிகையைப் பதினைந்தனுல் வகுத்து ஒவ்வொரு பாகத்திற்கும் வரிசையாகப்

(பதினைந்துக்கும்) பலன் சொல்லப்பட்டிருக்கிறது. அதன் விவரம் கீழ் வருமாறு:—

1-வது (முதல்) பாகத்தில் ஜனித்தால் தகப்பனையும்,

2-வது (இரண்டாவது) பாகத்தில் தகப்பனின் சகோதரனையும்

3-வது பாகத்தில் சகோதரியின் கணவனையும்,

4-வது பாகத்தில் பிதா மகனையும்,

5-வது பாகத்தில் தாயையும்,

6-வது பாகத்தில் தாயின் சகோதரியையும்,

7-வது பாகத்தில் அம்மானையும்,

8-வது பாகத்தில் சிற்றப்பனுடைய ஸ்திரீயையும்,

9-வது பாகத்தில் சமஸ்தத்தையும்,

10-வது பாகத்தில் பசுக்களையும்,

11-வது பாகத்தில் வேலைக்காரர்களையும்,

12-வது பாகத்தில் தனக்கே (நாசத்தை)யும்,

13-வது பாகத்தில் தனக்கு மூத்த பிறப்பையும்,

14-வது பாகத்தில் தன் சகோதரியையும்,

15-வது பாகத்தில் மாதா மகனையும் நாசத்தைச் செய்யுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

இப்படியே ஆயில்ய நக்ஷத்திரத்திற்கும், ஆயில்ய நக்ஷத்திரம் முதலாவது பாதத்தில் ஜனித்தால் குழந்தைக்கே நாசமுண்டாகுமென்றும், இரண்டாவது பாதத்தில் ஜனித்தால் தாய்க்குக் கண்டம் அல்லது நாசத்தை உண்டாக்குமென்றும், நான்காவது பாதத்தில் ஜனித்தால் பிதாவுக்கு கண்டமல்லது நாசமேற்படுமென்றும், சிலவற்றில் மூன்றுவது பாதத்தில் தகப்பனுக்கும் நான்காவது பாதத்தில் தாய்க்கும் நாசம் உண்டாகுமென்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. இவ்விதமாக நக்ஷத்திர கண்டங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. இன்னம் இவை தவிர வேறு இவற்றைப் பற்றி ஜுர கால நிர்ணயத்திலிருப்பதின்படி ரோகங்களினல் ஏற்படக்கூடிய கண்டங்களும் வேறு சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகவே அரிஷ்டமானது எவ்விதத்திலும் எவ்விதமாகவேனும் எதிர்பார்த்தோ பாரா

மலோ நேரிடக்கூடுமாதலால் அவற்றை முதலிலேயே அறிந்து கொள்வதே சிறந்த அறிவாளிகளுக்கு உபகாரமா யிருக்குமென்பது நாம் சொல்லாமலே விளங்கும் என்பதில் சிறிதும் சந்தேகமே யில்லை.

## பாலாரிஷ்ட பங்கமும், பலதிறப்பட்ட ஆயுளும்

ஜன்ம லக்கினத்தில் எல்லா கிரகங்களுக்கும் மேலான குரு ஒருவரிருந்தால் சகல அரிஷ்டங்களும் விலகும்.

ஜன்ம லக்கினத்தில் புதனிருந்தால் ஆயிரம் தோஷமும் சுக்கி னிருந்தால் பதினுயிரந் தோஷமும் விலகும்.

ஜன்ம லக்கினுதி ஒருவனே பலமுடையவனுகி கேந்திரத்தில் இருந்தால் சிவபெருமான் முப்புரங்களையு மெரித்தது போலச் சகல அரிஷ்டங்களும் விலகிவிடும்.

ஜன்ம லக்கினத்தில் சுபர் பார்வை யிருந்து சுக்கில பக்ஷத்தில் இரவில் ஜனித்தவனுக்கும் கிருஷ்ண பக்ஷத்தில் இதற்கு நேர்மாறு கப் பகலில் ஜனித்தவனுக்கும் அரிஷ்டங்கள் விலகிவிடும்.

ஜன்ம லக்கினம் துலாமாகி 12-ல் சூரியனிருந்து ஜனித்தால் நூறு வருஷம் ஜீவிக்கும் யோகமுடையவனுக ஆவான்.

ஜன்ம லக்கினத்திற்குப் பன்னிரண்டில் (குருவும் செவ்வாயும் கூடியிருந்தாலும்) செவ்வாயிருந்து குருவால் பார்க்கப்பட்டாலும் எல்லா அரிஷ்டங்களையும் போக்கித் தாய்க்கும் நன்மையைச் செய் வார்.

ஜன்ம லக்கினத்திற்கு 4 அல்லது 10-ல் பாபரிருந்து இவர்கள் சுபர்களின் மத்தியிலு மிருந்தாலும், சுபர்கள் கேந்திர திரிகோணங் களில் இருந்தாலும் தகப்பனுக்குச் சுகமுண்டாகும்.

சுபர்களின் மத்தியில் உள்ள பாபர்களும், கேந்திர திரிகோணங் களிலுள்ள சுபரும் சத்தியோரிஷ்ட நாசத்தைச் செய்வார்கள்.

ஜன்ம லக்கினத்திற்குப் பதினென்றில் 8 மாதியும் 10 மாதியும் கூடியிருந்து குருவும் சந்திரனும் லக்கினத்திலிருந்தால் 100 வருஷம் ஆயுளுண்டாகும்.

லக்கினுதி யோகத்தில் பிறந்தவருக்குச் சந்திரன் பாபருடன் கூடினுல் அற்பாயுளாகும்.

ஜன்ம லக்கினத்திற்கு ஆறு எட்டுக்குடையவர்கள் கூடி யிருந்து சனியுடன் கூடியிருந்தாலும் சனியால் பார்க்கப்பட்டாலும் அற்பாயுளேதான் உண்டாகும்.

சந்திராதி யோகத்தில் பிறந்தவருக்குச் சந்திரனுக் கேழில் சூரியனிருந்தால் மத்தியாயுளாகும்.

ரேவதி நக்ஷத்திர 2-வது பாதம் ஜன்ம நக்ஷத்திரமாகிப் பிறந்தால் 7-ல் குருவிருந்தாலும் 41-ம் வயதில் அபமிருத்தாக (க்ஷயரோகத்தினால்) மரணம் நேரிடும்.

மீனத்தில் நீச்சாம்சத்தில் சந்திரனும் தன் உச்சத்தில் கும்பாம்சத்தில் புதனுமிருந்தால் ஜாதகனுக்கு 6-வது திசையில் பெரிய ஆபத்துண்டாகும்.

ஜன்ம லக்கினாதிபதியும் குருவும் கூடில் ஆயுள் விருத்தி யடையும்.

ஜன்ம லக்கினஷ்டமாதிபதியும் சனியும் கூடினால் ஆயுள் விருத்தியுண்டாகும். அஷ்டமாதிபதியைச் சனி பார்த்தாலு மிப் படியே யாகும்.

ஜன்ம லக்கினத்திற் கெட்டில் சனி யிருந்தால் தீர்க்காயுளுண் டாகும்.

ஜன்ம லக்கினத்திற் கெட்டாமாதி லக்கினத்தில் இருந்தால் ஆயுள் குறைந்துவிடும்.

ஜன்ம லக்கினத்திற்கு நான்காமாதிபதியும் சந்திரனும் பிரபல மாயிருந்தாலும்,

க்ஷீணசந்திரன் 4-ல் இருந்து சனியால் பார்க்கப்பட்டாலும், தாம் அற்பாயுளடைவாள்.

ஜன்ம லக்கினத்திற்கு ஒன்பதா மிடத்தில் சூரியனும் 9-மாதியும் கூடினால் தகப்பன் அற்பாயுளாய் மரிப்பான். சூரியன் மட்டும் தனியா யிருந்தால் தகப்பனுக்கு ஆயுள் குறைவடையும். ஷை சூரியன் 9 மாதியாகி 9-ல் இருந்தால் தகப்பனுக்காயுள் குறையாது.

ஜன்ம லக்கினத்திற்கு எட்டாமிடத்தில் சூரியனிருந்து சனியுடன் கூடியிருந்தாலும் சனியால் சூரியன் பார்க்கப்பட்டாலும்,

அல்லது ராகுவுடன் கூடியிருந்தாலும் பிறக்கும் ஜாதகர்கள் ஆயிரம் மாதம் ஜீவித்திருப்பார்கள்.

ஜன்ம லக்கினத்திற்கு அஷ்டமாதிபதி பாபருடன் கூடி 12 மாதியுடனும் கூடியிருந்தால் முன் சொல்லியபடி ஆயிரம் மாதமே ஜீவிப்பர்.

ஜன்ம லக்கினத்திற்கு 8 மாதிபதி 11-மாதிபதியோடு கூடி லக்கினத்திற்கு 5-ல் இருந்தாலும் ராகுவால் பார்க்கப்பட்டால், 8 வது வயதில் மாணமுண்டாகும்.

ஜன்ம லக்கினத்திற்கு எட்டாமதிபதி லக்கினத்திலிருந்து ராகுவால் பார்க்கப்பட்டாலும் கேதுவுடன் கூடியே யிருந்தாலும், 5-வது வயதில் மரணம் நேரிடும்.

ஜன்ம லக்கினத்திற்கு 8 மாதிபதி 5 மாதியுடன் கூடி லக்கினத்திலிருந்தாலும் 6-ல் இருந்தாலும் ஆறுக்குடையவனு லல்லது சத்துருக் கிரகத்தால் பார்க்கப்பட்டாலும் 8 வயதில் மரணமேற்படும்.

ஜன்ம லக்கினத்திற்கு அஷ்டமாதி 12-மாதிபதியுடன் கேந்திரத்தில் இருந்தாலும் சரியாக 100 வயதும் ஜீவித்திருப்பான்.

ஜன்ம லக்கினத்திற்கு 8-மாதிபதி 11-ல் தன உச்சத்தில் வலுத்து இருந்தால் எண்பது வயது ஜீவித்திருப்பான். இது விருச்சிக லக்கினம் ஒன்றுக்கு மட்டும் சேரும்.

ஜன்ம லக்கினத்திற்கு 7-மாதிபதி 8-ல் 9 மாதியுடன் கூடியிருந்தால் 7-ம் வயதில் மரண மடைவான்.

ஜன்ம லக்கினத்திற்கு 9-மாதிபதி ராஜ்ஜிய ஸ்தானத்தில் இருந்து ராகுவால் பார்க்கப்பட்டால் 5-வது வயதில் மரணமுண்டாகும்.

ஜன்ம லக்கினத்திற்கு 2-மாதிபதி கேந்திரத்தில் 12-மாதியுடன் கூடியிருந்து சனியால் பார்க்கப்பட்டால் 36 வயதில் மரண முண்டாகும்.

ஜன்ம லக்கினத்திற்கு 8-ல் 10 மாதியும் லக்கினுதிபதியும் கூடியிருந்து ராகுவால் பார்க்கப்பட்டிருந்தால் 30-வது வயதில் மரணமுண்டாகும்.

ஜன்ம லக்கினதிபதி நீச்சத்திலிருந்து 12-மாதியுடனும் கூடியிருந்து 9-மாதியால் பார்க்கப்பட்டால் ஜெனித்த 20-வயதில் மரணமேற்படும்.

ஜன்ம லக்கினதிபதி ராஜ்ஜிய ஸ்தானத்தில் 9-மாதிபதியுடன் கூடி ராகுவால் பார்க்கப்பட்டால் ஜனித்த 10-வது வயதில் மரணமுண்டாகும்.

ஜன்ம லக்கினதிபதி குரூருடன் கூடியிருந்து சனியுடன் கூடினும் சனியால் பார்க்கப்பட்டாலும் ராகுவுடன் கூடினும் ஜனித்த ஓரே வருஷத்தில் மரண முண்டாகும்.

ஜன்ம லக்கினதிபதி பாபருடன் கூடி ராஜ்ஜியாதிபதியுடனும் கூடினல் ஜாதகன் ஜனித்த 6-வது வயதில் மரண முண்டாகும். தப்பி இருந்தால் பல்லக் கேறுவான்.

ஜன்ம லக்கினதிபதி 5-ல் ராஜ்ஜியாதிபதியுடன் கூடியிருந்தால் 5-வது வயதில் மரண முண்டாகும். தப்பினல் குதிரை வாகனமடைவான்.

ஜன்ம லக்கினம் ஸ்திரமாகி லக்கினதியும் சுக்கிரனும் வர்க்கோத்தமத்தி லிருந்தால் ஆயுள் பூர்ணமாக 73 உண்டாகும்.

ஜன்ம லக்கினத்திற்குப் பன்னிரண்டில் சந்திரனும் பத்தில் அல்லது ஒன்பதில் சூரியனும் லக்கினத்தில் அல்லது 5, 9-ஆம் இடங்களில் சனியுமிருந்தால் தகப்பனைச் சூரியனும் தாயைச் சந்திரனும் சொல்வார்கள்.

சூரியன் சந்திரன் செவ்வா யிவர்கள் லக்கினத்திற்கு 5-ல் இருந்தால் தாய் தகப்பன் சகோதரர் இவர்கள் நாசமுறுவர்

லக்கினத்திற்கு 4-ல் ராகுவிருந்து பாபரால் ராகு பார்க்கப்பட்டால் பிறந்த பதினறுவது வயதில் கண்டமல்லது மரணம் நேரிடும்.

குரு செவ்வாயின் ராசிகளில் இருந்து சந்திரன் பாபர்களால் பார்க்கப்பட்டுச் சுபரால் பார்க்கப்படாமலிருந்தால் பிறந்த 8-வது வருஷம் மரணம் நேரிடும். மேற்படி குரு சுக்கிரமடைந்து 4-8-6 இவ் விடங்களில் அல்லது ஷஷ்டாஷ்டம ஸ்தானங்களில் இருந்தாலும் செவ்வாயின் பார்வை யடைந்திருந்தாலும் பதினறுவது வயதில் மரண முண்டாகும்.

5-8 ஆம் இடங்களில் பாபரிருந்து வேறு பாவர்களுமிவர்களைப் பார்த்தால் ஜனித்த ஒரே வருஷத்தில் மரணமுண்டாகும்.

ஜன்ம லக்கினத்தினின்றும் 6-8-12 ஆம் இடங்களாகச் சந்திர சூரியருடைய ராசிகள் ஆகி, அங்கு சந்திரன் சுக்கிரன் சூரியனிவர்க ளிருந்து இவர்களைச் சுபர் பார்த்தால் ஆறு வருஷம் வரையில் ஜீவனிருக்கும்.

ஜன்ம லக்கினம் எந்த லக்கினமானாலும் 4-8 இவ் விடங்களில் சுபர்களிருந்து லக்கினாதிபதி சுபருடன் கூடி யிருந்தாலும் லக்கினத் தைக் குரு பார்த்தாலும் பூர்ணாயுளானது உண்டாகும்.

அஷ்டமாதிபதி பாபியாயினும் அஷ்டமத்திலேயே யிருந் தால் ஆயுள் தீர்க்கமாகும்.

ஜென்மலக்கினம் எந்த லக்கினமானாலும் லக்கின நவாம்சாதி பதி கேந்திரத்திலிருந்து குரு சுக்கிரனிவர்களால் பார்க்கப்பட்டா லும் ஒன்பதாமாதிபதியும் சுபருடன் கூடி யிருந்தால் தீர்க்காயு ளுண்டாகும்.

ஜென்ம லக்கினத்திற்குப் பத்தாமாதிபதி எட்டாமிடத்தி லிருந்து எட்டாமாதிபதி சுபர் மத்தியிலிருந்து பதினோராமாதி பதி தன் உச்சத்தில் இருந்தால் ஜாதகன் தீர்க்காயுளுடையவனா வான்.

நான்கு, ஏழு, பத்து முதலான கேந்திரங்களில் குரு இருந்தா லும் மேற்படி குருவுக்கு ஐந்தில் புதனிருந்து ஆறில் சூரியனிருந்தா லும் அறுபதுக்கு மேலும் அல்லது ஒரு சமயம் எழுபத்தெட்டு வயதும் அல்லது எண்பது அல்லது எண்பத்தோரு வயது வரையு முண்டாகும்.

ஜென்ம லக்கினத்திற்கு அஷ்டமாதிபதி கேந்திரங்களிலிருந்து ஸ்திரராசிகளில் ஜனன மடைந்து சுபர்களும் எட்டாமிடத்தில் இல்லாதிருந்தால் ஜாதகனுக்கு நாற்பத்துமூன்று வயதே யுண் டாகும்.

கேந்திரங்களில் குரு இல்லாதிருந்து எட்டா மிடத்திற் குடையவன் பன்னிரண்டா மிடத்திலிருந்து க்ஷீண சந்திரன், பாபருடன் கூடி யிருந்தால் ஆறு வருஷத்திற்குப் பிறகு ஆயுள்

யிலேத்திருக்காது; அதாவது ஆறு வருஷம்தான் ஆயுளுண்டாகும்.

ஜென்ம லக்கினத்திற்கு அஷ்டமாதிபதி கேந்திரத்திலிருந்து, லக்கினாதிபதி பலமுடையவனா யில்லாவிடில் ஜாதகனுக்கு முப்பது வயதே யுண்டாகுமென்று சிலரும் முப்பத்திரண்டு வயதே பரமாயுளாகுமென்று வேறு சிலரும் சொல்லுகிறார்கள்.

ஜென்ம லக்கினம் குருவாருடைய க்ஷேத்திரங்களில் ஒன்றாகி லக்கினாதிபதி சப்தமத்திலிருந்து சூரியனும் குருவும் பலஹீனர்களாயின் ஆறு வருஷமே ஜீவித்திருப்பான்.

ஜென்ம லக்கினம் எதுவாகினும் குரு செவ்வாயின் ராசியிலிருந்து மேற்படி ராசி ஷஷ்டாஷ்டம துவிதீய ஸ்தானங்களாக ஆனால் ஆறு வருஷம் வரையில் தான் ஜாதகனுக்குப் பரமாயுளுண்டாகும்.

ஜென்ம லக்கினத்திற்கு ஏழில் ராகுவும் லக்கினத்தில் சந்திரனுமிருந்தால் பத்து வருஷமே ஆயுளுண்டாகும்.

ஜென்ம லக்கினத்திற்குப் பத்தில் அல்லது ஒன்பதா மிடத்தில் ஜன்ம காலத்தில் ராகு இருந்தால் பதினாறாவது வயதில் மரணமேற்படும்.

ஜென்ம லக்கினத்திற்குப் பன்னிரண்டில் சந்திரனிருந்து ஆறாமிடத்தில் பாபக்கிரகங்கள் இருந்தால் ஜாதகன் அற்பாயுளேயுடையவனாவன்.

ஜென்ம லக்கினத்திற்குக் கேந்திரத்தில் (குருவும்) சுக்கிரனுமிருந்து லக்கினத்தில் புதனும் பன்னிரண்டாமிடத்தில் சூரியனுமிருந்தால் நூறு வருஷ ஆயு ளுண்டாகும்.

ஜென்ம லக்கினத்திற்கு எட்டாமிடத்தில் சூரியனிருந்தால் ஜாதகனுக்கு 4-விதமான கண்டங்கள் ஏற்படும். அவையாவன; வைசூரி 1. ஜலரோகம் 2. நாற்கால்களுள்ளவைகள் மூலம் ஏற்படல் 3. பாலாரிஷ்டம் 4. இத்தியாதிகளாகும்.

ஜென்ம லக்கினம் எதுவானாலும் ராகு எட்டாமிடத்தில் இருந்தால் சர்ப்பகண்ட மடைவான். மனைவியின் சாப மடைவான். மத்திய வயதில் கண்ட முடையவன். கேது எட்டா

மிடத்தில் இருந்தால் அபமிருத்து கண்டங்கள் அடிக்கடி நேரும்.

எட்டாமிடத்தில் லக்கினாதிபதி யிருந்தால் தேகம் துர்ப்பல முடையதாய்விடும்.

எட்டாமிடத்தில் பாபரிருந்தால் ஆயுள் குறையும். ரோக முண்டாகும். கண்பார்வைகூடப் பங்கமாகும். சுபரிருந்தால் வெகு ஆயு ளுண்டாகும்.

சாமரயோகத்தில் பிறந்தால் யோக மேற்பட்டு அது நடக்கும் வருஷம் முதல் பன்னிரண்டாவது வருஷ முடிவில் அபமிருத்து ஏற்படும். தப்பிப் பிழைத்தால் தீர்க்காயு ளாகும்.

ஜாதகன் ராஜ்யலக்ஷ்மீ யோகத்தில் பிறந்தவனாகில் 41 அல்லது 46 வயதில் சண்டையில் அபமிருத்தாக மரணம் சம்பவிக்கும். தப்பிப் பிழைத்தால் அரோகதிடகாத்திரமாக 61 அல்லது 71 வரை ஜீவித்திருப்பான்.

ஜன்ம லக்னத்திற்கு எட்டா மிடத்தில் பாபர் கூடி யிருந்தால் சொற்ப ஆயுளும் கண் பார்வைக் குறைவும் உண்டாகும். 8-ல் சுபரிருந்தால் தீர்க்காயுள் திரவிய மிவை யுண்டாகும். உச்ச மித்திர ராசிகளில் 8-ல் கிரகமிருந்தால் தீர்க்காயுளுண்டாகும்.

தூம னென்னப்பட்ட கிரகம் எட்டில் இருந்தால் பிரிய மின்மை கெட்ட பேச்சு, பிதுரு, குரு, தெய்வ மிவர்களிடம் நிஷ்டூரம், நற்பேச்சின்மை இவைகளுண்டாகும். ஆயுளு முண்டாகாது.

விதீபாத னென்கிற கிரகம் 8-ஆம் இடத்தில் இருந்தால் ரத்த பீடையும் வெகு வியாபாராதிகளு முண்டாகும். வெகு மித்திரர் முதலியன ஏற்படுவர்.

எட்டில் பரிவேஷன் என்னப்பட்டவர் இருந்தால் திட சரீரம், திடவிரத மிவைகளும், புத்திரன், தர்மம், சத்திய மித்தியாதிகளு முடைய ராவார்கள்.

இந்திரதனுசு 8-ல் இருந்தால் அங்கஹீன முண்டாகும். உபகேது இருந்தால் வீண் விதண்டாவாதமாய் பிறர் பக்ஷம் பேசுபவராவர். மேலும் லஜ்ஜை கெட்டுப் பிறரை நிந்திப்பவராகவும் ஆவார்கள்.

எட்டில் குளிகனிருந்தால் துக்கம், பசி, குரூரம், கடுமையான ரோகம், தயையின்மை இத்யாதிக ளுண்டாகும்.

எட்டில் பிராணபத னிருந்தால் ராஜபீடை, துக்கம், ரோக பீடையால் கஷ்டப்படும் அங்கம் இத்தியாதிக ளுண்டாகும்.

மிதுனத்தில் மகர நவாம்சத்திலும், தனுசில் கடக நவாம்சத்திலும், மீனத்தில் துலா நவாம்சத்திலும், கன்னியில் மேஷ நவாம்சத்திலும் சூரியனிருந்தால் அற்பா யுளுண்டாகும்.

ஜன்ம லக்கினத்திற்கு 4, 8-ஆம் இடங்களில் சுபரிருந்து ஜன்ம லக்கினாதிபதியும் சுபருடன் கூடியிருந்தாலும், குருவால் ஜன்ம லக்கினம் பார்க்கப்பட்டிருந்தாலும், பூர்ணாயு ளுண்டாகும்.

8-மாதிபதி 1, 4, 7, 10-ல் இருந்து ஸ்திரராசியில் பிறந்தவர்களுக்கு 8-ல் சுபரில்லாதிருந்தால் 43 வயதுக்கு மேல் வயதுண்டாகாது.

மகர நக்ஷத்திரத்தில் பிறந்தால் பொதுவாக 65 வயதும் ரேவதி நக்ஷத்திரத்தில் பிறந்தால் பொதுவாக 70 வயதும் உண்டாகும்.

சந்திரன் உத்திரம் 1-வது பாதத்திலிருக்கப் பிறந்தவன் எழுபத்தைந்து வயதடைவான்; 60, 61-ல் தேக பீடை யுண்டாகும். சனி திசை வந்து முடிவில் ரிஷபம் அல்லது கடகம் விருச்சிக மிந்த ராசிகளில் சூரியனிருக்கும்போது சனிக்கிழமையில் மரணம் நேரிடும்.

ரேவதி 3-வது பாதத்தில் சந்திரனிருக்கப் பிறந்தவர்களுக்கு லக்கினம் கடகமாகின் 1-மாதி 9-லும் 9-மாதி 11-லும் சனி 12-லுமிருந்தால் 62 வயதுண்டாகும். ஒரு சமயம் 77 வயதுண்டாகுமென்று சிலர் மதம்.

ஹஸ்தம் முதலாவது பாதத்தில் சந்திரனிருக்கப் பிறந்து லக்கினம் ரிஷபமானல் 8-மாதி 10-லும் சனி உச்சத்திலு மிருந்தால் எழுபத்தைந்து வயதுண்டாகும். இவனுக்குப், புததெசை சுய புத்தியில் நிரியாண மேற்படும்.

புனர் பூசம் 1-வது பாதத்தில் ஜன்மகால சந்திரனிருந்து சுக்கிரன் 9-லும் குரு எட்டில் சனியுடன் தனுசிலும் கூடியிருந்தால் ரிஷப லக்கின ஜாதகருடைய வயது தீர்க்கமாகும். சுக்கிர தெசை

